# அருணாசல மகிமை

## பாகம் – 3



பரணீதரன்



ஒரு விகடன் பிரசுரம்

33-1



தங்கால் ஸ்ரீ மௌன குரு சுவாமிகள்

வள்ளிமலையிலிருந்து நான்காவது மைலில் 'பொன்னை' என்ற சிற்றூர் இருக்கிறது. அங்கிருந்து சித்தூர் செல்லும் பஸ் பாதையில் மூன்றாவது மைலிலுள்ள 'தங்கால்' என்ற கிராமத்தில் ஓர் ஆச்ரமம் இருக்கிறது. அதில் ஒரு தங்கமான மௌன சுவாமிகள் வாசம் செய்து வந்தார். அவர் தற்போது மறைந்து விட்டார். இருப்பினும் அவரை நான் தரிசித்த விவரங்களையும், அவர் வரலாற்றை அறிய நான் எடுத்துக் கொண்ட முயற்சிகளையும் நிகழ்காலத்திலேயே கூற விரும்புகிறேன்.

அந்த மௌன சுவாமிகளுடைய குரு யார் என்பதும், எத்தனை வருடங்களாக அவர் மௌன விரதம் ஏற்றிருக்கிறார் என்பதும் ஒருவருக்கும் நிச்சயமாகத் தெரியவில்லை.

தங்காலுக்கு வருவதற்கு முன்பு வள்ளிமலையில் ஸ்ரீ திருப்புகழ் சுவாமிகள் ஆச்ரமத்தில் அவர் தங்கியிருந்தார் என்றும், அந்த ஆச்ரமம் தற்போது வசதிகளோடும் வளமோடும் இருப்பதற்கு அவர்தான் முக்கிய

24

காரணம் என்றும் நான் முன்பே கேள்விப்பட்டிருந்தேன். இறுதிக் காலத்தில் ஸ்ரீ வள்ளிமலை சுவாமிகள், மலையை விட்டு இறங்கி, சென்னைக்கு வந்து விட்ட பிறகு, அங்குள்ள குகையில் வந்து அமர்ந்தார் மௌன சுவாமிகள். பின்னர், சுமார் பதினெட்டு ஆண்டுகள் அங்கு தங்கியிருந்தார். வள்ளிமலை சுவாமிகள் மறைந்த பிறகு அவருடைய சீடர்களில் பலர் ஸ்ரீ மௌன சுவாமிகளைக் குருவாக மதித்து மரியாதை செலுத்தினார்கள். அடிக்கடி வந்து தரிசித்துப் போனார்கள். தங்கள் இல்லங்களுக்கு அழைத்து அன்பும் ஆதரவும் காட்டத் தொடங்கினார்கள்.

ஐந்தாண்டுகளுக்கு முன், மௌனியின் மனம் நோகும்படி யாரோ பொறுப்பின்றி எதையோ பேசி விட்டதால், அவர் வள்ளிமலை ஆச்ரமத்தை விட்டு வெளியேறி விட்டார். எங்கு சென்றார் என்று தெரியாத சீடர்கள் துடியாய்த் துடித்துப் போனார்கள். இரண்டு வாரங்கள் கடந்த பிறகு, ஆடுமாடு மேய்க்கும் சிறுவன் ஒருவன், யாருமே அணுக முடியாத ஒரு குகையில் சுவாமிகள் அசையாமல் படுத்திருப்பதைக் கண்டு ஊராரிடம் வந்து சொன்னான். எல்லோரும் ஓடி வந்து பார்த்தனர். சுவாமிகளின் காலம் முடிந்து விட்டது என்று எல்லோரும் முடிவு கட்டி, மிகவும் சிரமப்பட்டு அவரை ஆச்ரமத்திற்குத் தூக்கி வந்தனர். கட்டையைப் போலக் கிடந்தவர், லேசாக மூச்சு விடுவது தெரிந்தது. சீடர்களுக்குச் சற்று நம்பிக்கை பிறந்தது. மருத்துவர்கள் வந்து தங்களாலான முயற்சிகள் செய்தனர். மூன்று நாட்களுக்குள் சுவாமிகள் எழுந்து உட்கார்ந்து விட்டார். அதற்குப் பிறகு அவர் அங்கு தங்குவதை சீடர்கள் விரும்பவில்லை. மலையை விட்டு இறங்கியவருக்குத் தங்காலில் ஓர் ஆச்ரமம் அமைத்துத் தந்தனர்.

இந்தப் பழைய நிகழ்ச்சிகளை யெல்லாம் பற்றிக் கூறிய சுவாமி சாதுராம், மௌன குருவிடம் ஆழ்ந்த பக்தி கொண்டிருக்கிறார். ஆறேழு ஆண்டுகளுக்கு முன்பு, ஒரு சமயம் தாமும் தமது பூர்வாச்ரம சகோதரர் சுப்பிரமணியனும் மௌன சுவாமிகளைத் தரிசிக்கச் சென்ற போது, அவர் விரலில் விபூதியைத் தோய்த்து சகோதரர் இருவர் நாவிலும் ஏதோ அட்சரங்களை எழுதியதைப் பற்றியும் சாதுராம் நினைவு கூர்ந்தார்.

பேசிக் கொண்டே நாங்கள் தங்காலிலிருக்கும் ஸ்ரீ மௌன குரு ஜோதி ஆச்ரமத்தை யடைந்த போது மணி மூன்றிருக்கும்.

வெளித் தாழ்வாரத்தில், ஒரு சிவப்பு நிற சால்வையைப் போர்த்திக் கொண்டு சுவாமிகள் அமர்ந்திருந்தார். அவர் தமது ஜடைமுடியை மறைத்து தலைப்பாகையைப் போல் காவித் துணியால் கட்டியிருந்தது ஒரு பண்டார சந்நிதியின் தோற்றத்தை யளித்தது. அழகிய நரை தாடியைச் சேர்த்து அடியில் குண்டாக முடிந்து வைத்திருந்தது புதுமையாயிருந்தது. அவரது வாய் பேசாததை யெல்லாம் அவரது ஒளிமிகு சிறு கண்கள் பேசுகின்றன. ஆனந்த நிலையில் துள்ளிக் கொண்டிருக்கும் வெள்ளை யுள்ளத்தின் பேரமைதியைப் பிரதிபலிக்கும் அவரது புன்முறுவலில் கொள்ளை யழகு சொட்டுகிறது. திருமுகத்தில் கருணையும் கனிவும், அன்பும் அருளும் குடியிருக்க, அவர் ஒரு குழந்தையாய்க் காட்சியளிக்கிறார்.

31-1

நாங்கள் சென்ற போது சுவாமிகளைச் சுற்றி ஏழெட்டு பேர் அமர்ந்திருந்தனர். சாதுராமைக் கண்டதும் பெருமகிழ்ச்சியில் திளைத்த சுவாமிகள், அவரை அழைத்து அருகில் அமரச் சொல்லி, அவரது உடல் நலம் பற்றி விசாரித்தார்.

எல்லோரும் ஒவ்வொருவராக நமஸ்காரம் செய்தோம். நாம் அவரை வணங்கும் போது சுவாமிகள் தலையைச் சற்றுத் தாழ்த்தி, கை கூப்பி நம் நலனுக்காகப் பரம்பொருளைப் பிரார்த்திக்கிறார். பின்னர், கை நிறைய விபூதியை அள்ளிப் பிரசாதமாகத் தருகிறார். நம் நெற்றியிலும் தீட்டு கிறார். வாஞ்சையுடன் வலது தோளில் லேசாகத் தட்டிக் கொடுக்கிறார். சிலருக்குத் தலையில் கரம் வைத்து அருளாசி வழங்குகிறார். எத்தனை பேர் வந்தாலும், எத்தனை தரம் நமஸ்காரம் செய்தாலும் கருணையோடு அவர் விபூதிப் பிரசாதம் தருகிறார்.

அது மாத்திரமல்ல. ஆச்ரமத்திற்கு வருபவர்களுக்கெல்லாம் அருந்து வதற்கு சுவாமிகள் ஏதாவது ஒரு பானம் கொடுக்காமல் இருப்பதில்லை. அதுவும் தமது கையால் அதைத் தயாரித்துக் கொடுப்பதில் அவருக்கு தனியோர் ஆனந்தம். தம்மை நாடிவரும் ஒவ்வொருவரையும், ஆண் பெண், ஏழை பணக்காரர், பெரியவர் சிறியவர் என்ற வேற்றுமையின்றி, அலுக்காமல் சலிக்காமல் உள்ளன்புடன் உபசரித்து, உறவாடும் அவருடைய உயர்ந்த பண்பைக் காணும் போது கல்நெஞ்சமும் நெகிழ்ந்து விடும்.

சுவாமிகள் தாம் பேசாவிட்டாலும் பிறர் பேசுவதையெல்லாம் உன்னிப்பாகக் கேட்டுக் கொள்கிறார். சுற்றுப்புறத்தில் நடப்பதையெல்லாம் ஒன்று விடாமல் கவனித்து விடுகிறார். உள்ளியங்கும் பிரும்ம சக்தியோடு லயப்பட்டு, எந்நேரமும் மோனத் தவம் மேற்கொண்டிருந்தாலும், வெளியுலக விவகாரங்களிலும், அடியார்களின் அன்றாட சுக துக்கங்களிலும் நேரிடையான பங்கு கொண்டு, ஆறுதலளித்து, நன்மைகள் புரிந்து, நற்தொண்டாற்றி வருகிறார்.

கை கால்களைச் சுத்தம் செய்து கொண்டு அறைக்குள் நுழைந்தோம். மௌன சுவாமிகள் மேலே போர்த்துக் கொண்டிருந்த சால்வையை எடுத்து விட்டு, கோவணாண்டியாக நின்றார். பட்டினியால் வாடி வற்றிய வயிற்றாலும், வயதால் தளர்ந்து மெலிந்த அங்கங்களாலும், தவநெறியால், யோகப் பயிற்சியால் உரம் ஏறிய, வைரம் பாய்ந்த உடற்கட்டு அவருடையது. நீர் பட்டறியாத அந்தத் திருமேனி, கொழுந்து விட்டெறியும் ஆன்மிக சக்தியால் இரும்பாக இறுகி, தங்கமென மின்னுகிறது. காற்றடித்தால் ஓமே சாய்ந்து

ஸ்ரீ மௌன குரு ஜோதி ஆச்ரமம்



விடுமோ என்று நாம் ஐயுறும் உடலுக்குள் மலையென நிமிர்ந்து நிற்கும் அந்த சக்தி, கடலை விடப் பெரியது; காலத்தை யெல்லாம் கடந்தது.

சுவரில் பெரிய அளவில் ஸ்ரீ நடராஜர் ஓவியமும் மற்ற தெய்வங்களின் படங்களும் காட்சி தருகின்றன. மேடையின் மீது ஒரு வேல் இருக்கிறது. அதற்குப் பின்னால், சிறிய வேல்-மயில் இணைந்த விக்கிரகமும், ஓர் அம்பிகையின் விக்கிரகமும் காணப்படுகின்றன. அதற்கும் பின்னால் வள்ளி-தேவசேனா சமேத சுப்பிரமணியர் விக்கிரகங்களும், பழநி ஆண்டவரின் விக்கிரகமும் வைக்கப்பட்டிருக்கின்றன. ஒரு மூலையில் தேவியின் சுற்சிலை யொன்று படுக்க வைக்கப்பட்ட நிலையில் இருக்கிறது. செப்பாலான சில யந்த்ரத் தகடுகளும் இருக்கின்றன. மேடைக்கு முன்னால், இரண்டரையடி உயரத்தில் ஒரு கருங்கல் வைக்கப்பட்டிருக்கிறது. அதன் மேலே பெரிய அகல் போல் பள்ளமாயிருக்கிறது. பாறையின் முன்புறத்தில் சிறு சிறு சதுரங்களும், ஒவ்வொரு சதுரத்துக்குள்ளும் ஓர் அட்சரமும் பொறிக்கப்பட்டிருக்கின்றன. ஒவ்வோர் எழுத்தின் மீதும் குங்குமப் பொட்டு வைக்கப்பட்டிருக்கிறது. அது என்னவென்று ஒருவருக்கும் புரியவில்லை. சுவாமிகளும் அது என்னவென்று விளக்கவில்லை.

அந்த மேடைக்குக் கீழே ஒரு பாதாள ரகசிய அறை இருக்கிறது. அதனுள் என்ன இருக்கிறது என்று கேட்ட போது, தமது தியானத்திற்காக அதைக் கட்டிக் கொண்டிருப்பதாக ஜாடை காட்டினார் சுவாமிகள்.

சுவாமிகளிடம் அவருடைய பூர்வாசிரமத்தைப் பற்றிக் கேட்டுப் பார்த்தேன். ஒன்றும் பலனில்லை. அதைத் தெரியப்படுத்திக் கொள்வதில் அவர் விருப்பம் காட்டிக் கொள்ளவில்லை. 'எங்கேயோ பிறந்தேன், எங்கேயோ சென்றேன், என்னமோ செய்தேன். அதைப்பற்றியெல்லாம் இப்போது நினைப்பானேன்?' என்ற பாவனையில் நம் கேள்விகளுக்குத் தெளிவான பதில் கூறாமல், எப்படி வேண்டுமானாலும் அர்த்தம் செய்து கொள்ளும்படி சைகை காட்டி விடுகிறார் அவர்.

அன்று வேலூரிலிருந்து வந்திருந்த சுவாமிகளின் பக்தரான ஈச்வரன் என்ற அன்பருடன் சிறிது நேரம் பேசிக் கொண்டிருந்தேன்.

தனது பெண் ஒருத்தியின் கண்கள் எப்போதும் சிவந்து இருந்ததாகவும், ஒளியைக் கண்டாலே அவை கூசியதால் அவள் அவதிப்பட்டதாகவும், எந்த வைத்தியத்திலும் அது குணமாகவில்லை யென்றும், இறுதியில் சுவாமிகள் தயாரித்துக் கொடுத்த தைலத்தால் தனது பெண்ணின் தீராத கண் நோய் குணமானதாகவும் கூறினார் ஈச்வரன்.

பின்னர், எனக்கு ஆச்ரமத்தை யொட்டியிருக்கும் பெரிய தோட்டத்தைச் சுற்றிக் காட்டினார் அவர். சுவாமிகளின் நன்முயற்சியால் அங்கு ஒரு பெரிய கிணறு எடுக்கப் பட்டிருப்பதையும், மரங்களும் மூலிகைச் செடிகளும் பயிராக்கப்பட்டு வருவதையும் கண்டேன். தாம் செல்லும் இடங்களிலெல்லாம் பழம் தரும் மரங்களையும், மருத்துவத்துக்குப் பயன்படும் மூலிகைகளையும் வளர்ப்பது சுவாமிகளின் பொழுது போக்கு என அறிந்தேன். முட்புதராக இருந்த வள்ளிமலை ஆச்ரமத்தைச்

33-1

செப்பனிட்டு, சோலையாக மாற்றி அமைத்த சுவாமிகள், அதற்கு முன்பு தாம் இருந்த இடங்களிலெல்லாம் சோலைகளை உருவாக்குவதை ஓர் அருங் கலைத் தொண்டாக ஆற்றி வந்திருக்கிறார் என்றும் அறிந்து கொண்டேன்.

அமெரிக்க கனவான் ஒருவர், தம் வாழ்நாள் முழுவதும் தாம் செல் லும் இடங்களிலெல்லாம் ஆப்பிள் விதையை விதைத்துக் கொண்டு போனா ராம். 'ஏன் இப்படிச் செய்கிறீர்கள்?' என்று கேட்டதற்கு அது முளைத்துச் செடியாகி, மரமாகி, காய்த்துக் கனியாகும் போது யாராவது சாப்பிட் டுப் பசியாறட்டுமே என்ற எண்ணத்தில்தான் அவ்விதம் செய்வதாகப் பெருவுள்ளம் படைத்த அந்தப் புண்ணியவான் கூறுவாராம்! சுவாமிகளின் பொழுது போக்கைக் கேள்வியுற்றதும் எனக்கு அந்த அமெரிக்கரைப் பற்றிய நினைவுதான் வந்தது.

சோலைகளை உருவாக்கிக் கொண்டு போகும் சுவாமிகளின் அருந் தொண்டு அவருடைய விரிந்து பரந்த கருணையுள்ளத்திற்குச் சான்றாகக் காட்சி தருகின்றன.

மகான்கள், மனித மனத்தைத் தங்கள் தவ சக்தியால் பண்படுத்தி, அருளுரத்தால் அதை வளப்படுத்தி, கருணை விதையை விதைத்துக் கொண்டே போகிறார்கள். காலப் போக்கில் அது பலன் கொடுக்கிறது. பரம்பரை பரம்பரையாக வரும் பக்தர்கள், ஞானக் கனியை உண்டு உய்கிறார்கள்.

பாரதத்தின் பல புண்ணிய தலங்களுக்குச் சென்று தவமியற்றி விட்டு, திருவேங்கடப் பெருமானின் திருச் சந்நிதியில் தங்கிப் பெருநிதி சேர்த்துக் கொண்டு, ஐம்பது ஆண்டுகளுக்கு முன்பு அருணாசல மகிமை யின் தாயகமான வட ஆற்காடு மாவட்டத்திற்கு வந்து மா தவம் மேற் கொண்டார் சுவாமிகள். அங்கு அவர் தங்கிய இடங்களைக் காண்பதற் காகவும், அங்கிருப்பவர்களின் அனுபவங்களைக் கேட்டு அறிவதற்காகவும் ஒரு நாள் வேலூரிலிருந்து புறப்பட்டோம். தங்கால் ஆச்ரமத்தில் அறிமுக மான அன்பர் ஈச்வரன், அருமை நண்பர் கண்ணனைத் துணைக்கு அழைத் துக் கொண்டு எங்களுடன் வந்தார்.

சுவாமிகளைப் பற்றிப் பேசும்போதெல்லாம் திரு கண்ணனின் கண்கள கலங்கி விடுகின்றன. சி. எம். சி. ஆஸ்பத்திரியில் அவர் பழக்கடை வைத் திருக்கிறார். தாம் அங்கு வியாபாரம் செய்வதற்குப் பெரும் தடைகள் உருவான போது, சுவாமிகள் தந்த தைரியத்தில் நீதிமன்றத்தில் வழக்காடி வெற்றி பெற்ற நிகழ்ச்சியை அவர் விவரித்தார். அவரது தந்தையான ராமானுஜம் பிள்ளை, வேலூரில் பழ மண்டி வைத்துப் புகழும் செல்வமும் ஈட்டியவர். தொடக்க காலத்தில் மௌன சுவாமிகளின் பக்தர்களில் மிக முக்கியமானவராக இருந்தவர். தங்கள் இல்லத்தில் சுவாமிகள் அநேக நாட்கள் தங்கியிருந்ததாகவும், தங்களுடைய குடும்பத்தினருக்கு அவர் கண்கண்ட தெய்வமாக விளங்குவதாகவும் கண்ணன் கூறினார். இனி பிழைப்பது கடினம் என்று பெரிய டாக்டர்கள் கூட கைவிட்டு விட்ட தமது மகன் ரகுவை,



'தொண்டான் துளசி' குன்றும், அடிவாரத்திலிருக்கும் ஆச்ரமமும்.

சுவாமிகள் விபூதிப் பிரசாதம் தந்து ஒரே நாளில் குணமாக்கிய ஆச்சரியத்தைப் பல முறை கூறிப் பரவசப்பட்டார் கண்ணன்.

வேலூரிலிருந்து பன்னிரண்டாவது மைலில் குடியாத்தம் செல்லும் பாதையில் இருக்கும் 'தொண்டான் துளசி' என்ற குக் கிராமத்தில்தான் சுவாமிகள் முதன் முதலில் வந்து தங்கியதாகக் கேள்வியுறவே அந்த இடத்தைக் காணச் சென்றோம்.

பட்டணவாசிகளின் பரபரப்பான வாழ்க்கையை மறக்கடிக்கும் அமைதி அரசோச்சும் அருமையான கிராமியச் சூழ்நிலை. இருபுறமும் கொத்துக் கொத்தாகக் காய்த்துத் தொங்கும் மாங்கனிகள் தலைகளில் இடித்து ஊசலாட, பச்சைக் கம்பளத்தில் பவழங்கள் சிந்தினாற் போல் செடியிலேயே பழுத்துச் சிவந்த மிளகாய்ப் பழங்களின் அழகை ரசித்துக் கொண்டே, 'தொண்டான் துளசி'யை அடைந்தோம்.

ஐம்பது ஆண்டுகளுக்கு முன்பு அங்கு வந்த சுவாமிகளை வரவேற்று, உபசரித்து உணவளித்த சின்னதம்பிக் கவுண்டரின் மகன் கோவிந்தசாமி எங்களை உள்ளன்போடு வரவேற்று தங்கள் இல்லத்திற்கு அழைத்துச் சென்றார்.

''மௌனசாமி இந்த ஊருக்கு வந்தபோது, இங்கேதான் மொதல் மொதல்லே தங்கியிருந்தார். அவரு எங்க வீட்டுலேதான் சாப்பிட்டுக் கிட்டு இருந்தார். ஆனால், சாமியார் அப்புறமா சாப்பிடுவதையே விடறத் துக்கும் நாங்கதான் காரணமாயிருந்தோம். என்ன நடந்ததுன்னு, சாமியார் வீட்டுலே தங்கியிருந்த போது, அவரைத் தனியா விட்டுட்டு, எங்க வூட்லே எல்லாரும் ஒரு சாவுக்காக பெங்களூர் போயிட்டாங்க...ஒரு வாரம் கழிச்சுத் திரும்பி வந்த பிறகுதான் சாமியாரின் நினைப்பே அவங் களுக்கு வந்தது. 'ஐயய்யோ! சாமியார் சாப்பாட்டுக்கு என்ன செய்தாரோ?' அப்படீன்னு எங்க அப்பா தவிச்சுப் போயி அவரு கிட்டே மன்னிப்புக் கேட்டாராம். சாமியார் சிரிச்சுக்கிட்டே அங்கேயிருந்த வேர்க்கடலையையும் வெல்லத்தையும் காட்டி அதைச் சாப்பிட்டுக் கிட்டிருந்ததாகச் சொல்லிட்டு, இனிமேல் சோறே சாப்பிடப் போற தில்லைன்னும் வேர்க்கடலைதான் ஆகாரம் என்றும் சொல்லிட்டா ராம்'' என்று வருத்தம் கலந்த குரலில் கூறினார் கோவிந்தசாமி.

அக் கிராமத்தை ஒட்டினாற் போல் ஒரு திப்பை அதாவது—சிறு குன்று — இருக்கிறது. அதன் அடிவாரத்தில் ஒரு சிறு கட்டடம் இருக்கிறது. அங்குதான் மௌன சுவாமிகள் தங்கியிருந்ததாகக் கூறினார் கோவிந்தசாமி. தமது இள வயதில் சுவாமிகளை அங்கு வந்து தரிசித் திருப்பதாகக் கண்ணனும் கூறினார்.

பின்னல் ஒரு பெரிய பாறை இருக்கிறது. அதன்கீழ் குகையைப் போல் ஒரு பள்ளம் காணப்படுகிறது. அதற்குள் இறங்கி சுவாமிகள் நிஷ்டையில் இருப்பது வழக்கம் என்று கூறினர் கோவிந்தசாமி.

''இதோ பார்த்தீங்களா? இந்த மரங்களையெல்லாம் சாமியார்தான் நட்டு வளர்த்தார். அப்போ இந்த இடத்தை நீங்க பார்க்கணும். பச்சைப் பசேல்னு செழிப்பாயிருக்கும். இதோ, இங்கே ஒரு சுனை இருந்தது. எப்போதும் தண்ணி குளமா தேங்கி யிருக்கும். சாமியார் இந்த இடத்தை விட்டுப் போனதும் அதுவும் வற்றிப் போயிட்டுது. இந்த மரங்களும் உலர்ந்து போச்சு. அவரு ஒரு மகானுங்க. அவரு போனதிலேருந்து இந்தக் கிராமமே ஒரு மாதிரியாயிடுச்சுங்க. கொஞ்ச நேரம் சும்மாயிருக்க மாட்டாரு. ஏதாவது வேலை செய்துகிட்டே யிருப்பாரு. எங்களையும் நல்லா வேலை வாங்குவாரு'' என்று கடந்த நாட்களின் நினைவுகளில் ஆழ்ந்தார் கோவிந்தசாமி.

''சாமி ஏன் இங்கேயிருந்து கிளம்பிப் போயிட்டார்?'' என்று கேட்டேன் நான்.

''அவரு மனசுலே இருக்கிறது நமக்கு எப்படிங்க தெரியும்?என்னவோ நினைச்சுக்கிட்டு, ஒரு நாள் கிளம்பி வேலூருக்குப் போயிட்டாரு. ஒரு சிறுத்தைப் புலி வந்து கிராமத்து ஜனங்களுக்குத் தொந்தரவு கொடுத்துக் கிட்டிருந்ததுங்க. ஒரு நாள் அது அந்தப் பாறையிலே போய் ஒளிஞ்சுக் கிட்டது. நாங்க அதைச் சுற்றி வளைச்சுக்கிட்டு சுட்டுக் கொன்னுட்டோம். ஒரு ஜீவனைக் கொன்னது சாமியாருக்குப் பிடிக்கலையாம். மனசு ரொம்பக் கஷ்டப்பட்டுப் போய் இங்கே இருக்கப் பிடிக்காமெ கிளம்பிப் போயிட்டாராம். அப்படித்தான் அப்போ ஊர்லே பேசிக்கிட்டாங்க'' என்ருர் கோவிந்தசாமி.

''நானும் அந்த நிகழ்ச்சியைப் பற்றிக் கேள்விப் பட்டிருக்கிறேன். அதுக்கப்புறம் வேலூருக்கு வந்து எங்க வீட்டுலேதான் தங்கியிருந்தார்'' என்ருர் கண்ணன்.

ஸ்ரீ மௌன குரு சுவாமிகள் 'தொண்டான் துளசி'யை விட்டுச் சென்ற பிறகு அவர் அந்தக் கிராமத்தையும் ஊர் மக்களையும் மறந்து விடவில்லை. வள்ளிமலையிலிருந்த போது, நினைத்துக் கொண்டால் அக்கிராமத்திற்கு அவர் ஒரு நடை வந்து விட்டுப் போவாராம். எப்போது வருவார், எப்போது போவார் என்று சொல்ல முடியாதாம். சுவாமிகள் அங்கு வரும்போதெல்லாம் 'பம்ப்செட்' அறைக்கு வெளியே யிருக்கும் திண்ணையில்தான் ஓய்வு எடுத்துக் கொள்வார்

'தொண்டான் துளசி'யில் தவக்கோலம்



என்று கூறிய கோவிந்தசாமி, சுவாமிகள் ஒரு சமயம் அங்கு வந்த போது விட்டுச் சென்ற சிவப்பு நிற சால்வையை எடுத்துக் காட்டினார்.

'தொண்டான் துளசி'யிலிருந்த போது சுவாமிகள், குடியாத்தம் அருகிலுள்ள மகாதேவ மலைக்குப் போய்வரும் வழக்கம் உண்டு என்றும், அம்மலையிலுள்ள குகைகளில் சமாதி கூடி தவமியற்றி யிருக்கிறார் என்றும் கூறினார்கள்.

''சாமி, மகாதேவ மலைக்குப் போறதுன்னா, இப்படியே குறுக்கே நடந்து போயிடுவார். கழனியிலேயும், மலைக் காட்டுப் பாதையிலும் அவர் ரொம்ப வேகமாக நடந்து போவாருங்க. அவரோட நம்பளாலே நடக்க முடியாதுங்க'' என்றார் வயதான கிராமவாசி ஒருவர்.

''மகாதேவ மலைக்குக் குறுக்கு வழியில் போகணும்னா 'மேல்மாயில்' என்ற ஊரைத் தாண்டிக் கொண்டுதான் போகணும். உங்களுக்கு நேரம் இருந்தால் நாம் அங்கே போயிட்டு அப்புறம் மகாதேவ மலைக்குப் போக லாம்'' என்றார் ஈச்வரன்.

''மேல்மாயிலில் என்ன விசேஷம்?'' என்று கேட்டேன் நான்.

''அங்கே ஸ்ரீ விலட்சணானந்தர் ஆச்ரமம் இருக்கிறது. அங்குள்ள சமாதி ஆலயத்தை நீங்கள் அவசியம் தரிசிக்க வேண்டும்'' என்றார் ஈச்வரன்.

''இங்கிருந்து ரோடு வழியே எட்டு மைல் தொலைவுதான் இருக்கும். விரிஞ்சிபுரத்திலிருந்து மூன்று மைல். ஆச்ரமத்தைப் பார்த்து விட்டு, மகாதேவ மலைக்குப் போய் விடலாம்'' என்று கண்ணனும் எங்களை உற்சாகப்படுத்தவே, நாங்கள் பயணத்தைத் தொடர்ந்தோம்.

குடியாத்தம் போகும் சாலையிலிருந்து மேல்மாயிலுக்குப் பிரிந்து செல்லும் பாதையில் நுழைந்த எங்கள் கார், மேடு பள்ளங்களில் ஏறி இறங்கி, ஸ்ரீ விலட்சணானந்தர் ஆச்ரமத்தை அடைந்தது.

அப்போது அங்கு திருப்பணி நடந்து கொண்டிருந்தது. அங்குள்ள கற்பக விநாயகருக்கு விமானம் கட்டும் வேலை அநேகமாக முடிந்து விட்டிருந்தது. சமாதிக்கு இடப்புறத்தில் ஸ்ரீ வேங்கடாசலபதிக்கு ஒரு சந்நிதி எழும்பிக் கொண்டிருக்கிறது. சமாதியின் மேல் பஞ்சாட்சர படிகள் அமைத்து, ஒரு மண்டபமும் கட்டப் போவதாகக் கூறினார்கள். சமாதிக்கு எதிரிலும் ஒரு பெரிய மண்டபம் கட்டுவதற்கும் திட்டமிட்டிருக்கிறார்கள்.

ஸ்ரீ விலட்சணானந்தரின் சமாதியை வலம் வந்து, வணங்கி விட்டு, சுவாமிகளின் சீடரான திரு கிருஷ்ணமூர்த்தி ஆசாரியின் இல்லத்திற்குச் சென்றோம். முப்பது ஆண்டுகளுக்கு முன் சுவாமிகள், மேல்மாயிலுக்கு முதன் முதலாக வருகை தந்ததைப் பற்றியும், திரௌபதி அம்மன் கோயிலிலும் பின்னர் கற்பக விநாயகர் ஆலயத்திலும் அவர் ஆன்மிக

சொற்பொழிவுகள் ஆற்றிய நிகழ்ச்சிகளைப் பற்றியும் திரு கிருஷ்ணமூர்த்தி கூறினர். சாதி, சமய, வர்ண பேதமின்றி, அனைவரையும் அன்பால் அரவணைத்து, நல்லுபதேசம் செய்து, நல்வழி காட்டியருளிய சுவாமிகளின் சமரச சன்மார்க்கப் பணியைப் பற்றியும் உணர்ச்சி ததும்ப விவரித்தார். மேல்மாயிலில் வந்து தங்கிய தோடன்றி தமது சமாதித் திருக்கோயிலையும் அங்கேயே அமைத்துக் கொண்ட சுவாமிகளின் பெருங்கருணையைக் குறித்துப் பெருமிதமடைந்த கிருஷ்ணமூர்த்தி ஆசாரி, ஸ்ரீ விலட்சணனந்தரின் உபதேச மொழிகள் அடங்கிய சிறு நூல்கள் சிலவற்றை என்னிடம் எடுத்துத் தந்தார். சுவாமிகளின் சீடர்களில் ஒருவரான அவ்வூரைச் சேர்ந்த திரு பாஷ்யம் என்பவரைச் சந்தித்தால் மேலும் சில தகவல்கள் கிடைக்கும் என்றும் கூறினர்.



ஸ்ரீ விலட்சணனந்தர்

ஒரு வாரத்திற்கெல்லாம் சென்னையில் திரு பாஷ்யத்தைச் சந்தித்தேன். குருநாதரின் நினைவிலேயே எந்நேரமும் தோய்ந்திருக்கும் அவரது உள்ளம், சுவாமிகளைப் பற்றிப் பேசும்போதெல்லாம் மெழுகாக உருகியதை என்னல் உணர முடிந்தது. சுவாமிகள் தனக்கு எழுதிய பழைய கடிதங்களை எடுத்துக் காட்டிய போது, அவரது கண்கள் குளமானதைக் கண்டேன். சுவாமிகளின் 'ஞான ரகசியம்' என்ற நூலைப் படித்தது முதல் அவர் தம்மை ஆட்கொண்டு விட்டார் என்றும், தமது தலைமை ஆசிரியர் திரு நரசிம்ம ஐயங்காரின் உதவியால் சுவாமிகள் தமக்கு அறிமுகமாகும் பாக்கியம் கிடைத்தது என்றும் கூறினர் பாஷ்யம். அவரிடம் சற்று நேரம் பேசிக் கொண்டிருந்ததில் சுவாமிகளைப் பற்றி ஒரு சில தகவல்களை அறிந்து கொள்ள முடிந்தது.

எழுபத்தேழு ஆண்டுகளுக்கு முன் மதுரை மாவட்டத்தில், தேவாரம் என்ற இடத்தில் ரங்கசாமி ஐயங்காருக்கும், சுந்தரவல்லி அம்மையாருக்கும் பிறந்த சீனிவாசன், பதினறு வயதில் ரங்கநாயகி என்ற மாதரசியைத் திருமணம் செய்து கொண்டார். ஆனல், இல்லற வாழ்க்கையில் நாட்டம் கொள்ளாத சீனிவாசனின் மனம் விடுதலையைத் தேடியலைய, மனைவி கருவுற்றிருந்த போதே வீட்டை விட்டு வெளியேறி விட்டார். வடநாட்டில் திரிவேணி சங்கமத்தருகில் ஒரு மகாத்மாவை குருவாக அடைந்து ஆச்ரமம் மாறி, விலட்சணனந்தர் என்ற திருநாமத்துடன் தல யாத்திரை செய்து விட்டு, கொல்லங்கோடு அருகிலுள்ள 'ஆண்டிகண்டன்' மலைக் காடுகளில் வந்து வசிக்கலானர். இச்செய்தியைக் கேள்வியுற்ற அவரது தந்தையார் அங்கு சென்று, வீட்டுக்கு வந்து விடும்படி மகனை வருந்தி அழைக்க, தாம் மீண்டும் இல்லற வாழ்க்கையில் ஈடுபட விழையவில்லை



ஸ்ரீ விலட்சணனந்தர் ஆச்ரமத்தின் முகப்புத் தோற்றம்

என்று கண்டிப்பாகக் கூறி அவரைத் திருப்பி அனுப்பி விட்டார் அவர். அன்று முதல் தென்னக மெங்கும் பயணம் செய்து, பல திருத்தலங்களில் தங்கி, திருக்கோயில்களைத் தரிசித்து, மலைகளிலும் காடுகளிலும் தவமியற்றி, நிட்டை கூடி பல ஸித்திகளைப் பெற்றார். பரப்பிரும்ம தத்துவத்தைப் பற்றியும், வேதங்களும், உபநிடதங்களும் முரசொலிக்கும் உண்மைகளைப் பற்றியும், புராண இதிகாசங்கள் பறைசாற்றும் வாழ்க்கை நெறிகளைப் பற்றியும் இனிய, எளிய நடையில் எடுத்துக் கூறி, நாடி வந்த அடியார்களை ஆன்மிகப் பாதையில் நடத்திச் சென்று நற்தொண்டாற்றி வந்திருக்கிறார். சுவாமிகள் ஓர் அருட்கவியும்கூட. பல தெய்வங்களின் மீது கவிதைகள் புனைந்திருக்கிறார். அன்பர்களின் சந்தேகங்களுக்குப் பாட்டிலேயே பதிலளிக்கும் திறன் பெற்றவர் அவர். அவருக்குக் கலைவாணியின் கடாட்சம் பரிபூரணமாக இருந்தது.

திருவேங்கடநாதனையே குலதெய்வமாக வழிபட்டு வந்த அம்மகான், அடிக்கடி திருப்பதி பாபநாசத்திற்கு ஆறு மைலில் உள்ள 'குமாரதாரை' என்ற இடத்தில் தங்கி, மலைப் பாறைகளும், சோலைகளும், நீர்வீழ்ச்சிகளும் கூடிய இயற்கைச் சூழலில், ஞானதவமேற்கொண்டு, இறையருள் தந்த ஆன்ம சக்தியைப் பெற்று, பாரதத்தின் பண்டைய கலாசாரம் சிறக்கும் பொருட்டு வாழ்ந்து, வழிகாட்டி, இருபத்தைந்து ஆண்டுகளுக்கு முன் இறைவனடி சேர்ந்து விட்டார்.

பாரதத்தின் பல பகுதிகளில் ஸ்ரீ விலட்சணனந்தரின் சீடர்கள் பரவியிருக்கிறார்கள். சுவாமிகளின் உபதேச மொழிகளையும், உபந்நியாசங்களையும் பசுமையான நினைவுகளாக நெஞ்சிலே தேக்கி, நேர்மையான வாழ்க்கை நடத்தி, நிம்மதி பெற்று வருகிறார்கள்.

பல அரிய விஷயங்கள் பற்றி சுவாமிகள் சுமார் எழுநூறு நூல்கள் இயற்றியுள்ளார் என்றும், நூற்றுக்கணக்கானவை இன்னும் அச்சேறாமல் கையெழுத்துப் பிரதிகளாகவே இருக்கின்றன என்றும் கூறினர் பாஷ்யம். ஒவ்வோர் ஆண்டும் குருபூஜையின் போது, சீடர்களால் வெளியிடப்பட்டுள்ள, ஞானிதர்சன லட்சணம், பிரும்மோபந்நியாசம், பாரத தேசம், ஜீவாசாரம், ஞான ரகசியம், சமயோசித சிந்தாமணி, அனுபவானந்தம், பரவாசுதேவ தெய்வம், பரமாத்ம எச்சரிக்கை, நமக்குள் இருக்கும் தெய்வம், கோபிநாதம், ஞானசாரம், விலட்சணனந்தபோதம், ஸ்ரீ வெங்கடேச தபோநாதம், ஸ்ரீ ராமச்சந்திர தெய்வம், குமணாரண்ய குஞ்சரம் முதலிய நூல்களைத் தந்தார். அவற்றைப் படிக்கும் போது ஸ்ரீ விலட்சணனந்தர் தெய்வ வழிபாட்டுக்கும், அத்வைத தத்துவத்திற்கும், ஞானமார்க்கத்திற்கும் ஆற்றியுள்ள அரும்பெரும் சேவையை ஒருவாறு உணர முடிகிறது.

தங்கால் ஸ்ரீ மௌனகுரு சுவாமிகள் விலட்சணனந்தரிடம் பெரும் மதிப்பு வைத்திருந்தார் என்றும், இருவரும் சந்தித்து உரையாடியிருக்கிறார்கள் என்றும் பாஷ்யத்திடமிருந்து அறிந்தேன். ஒவ்வோர் ஆண்டும் கார்த்திகை மாதம் நடைபெறும் குருபூஜைக்கு ஸ்ரீ மௌன சுவாமிகள் தவருது வருகை தந்து சிறப்பிப்பதாகவும் கூறினர் அவர்.

மேல்மாயிலிலிருந்து மகாதேவ மலையைக் காணச் சென்றோம். ரயிலில் வர விரும்புகிறவர்கள் குடியாத்தம் ரயில் பாதையிலுள்ள காவனூர் ரயில் நிலையத்தில் இறங்க வேண்டும். அங்கிருந்து அம்மலை இரண்டு மைல் தொலைவிலிருக்கிறது. அதனடிவாரத்தில் காங்குப்பம் என்ற கிராமம் இருக்கிறது.

ஸ்ரீ காமாட்சி அன்னையுடன் மகாதேவர், கோயில் கொண்டிருக்கும் இம்மலையே சக்தி வடிவானது என்று மகாதேவ புராணம் கூறுகிறது. விநாயகர், முருகர் மற்றும் பல தேவர்களாலும் முனிவர்களாலும் வழிபடப் பெற்ற தலம் இது. மலை மீது குகைகளும் பல தீர்த்தங்களும் உள்ளன. அற்புத மூலிகைகளும் இங்கு கிடைக்கின்றன.

திருக்கழுக்குன்றத்தில் வருவது போன்றே இங்கும் சமீப காலம்வரை இரண்டு கழுகுகள் பகல் நேரத்தில் வந்து உணவு உட்கொண்டு சென்றதாகக் கூறினர்கள். என்ன காரணத்தாலோ தற்போது அக்கழுகுகள் வருவதில்லையாம்.

மலையடிவாரத்தில் ஸ்ரீ தேவானந்த சுவாமிகளின் ஆச்ரமம் இருக்கிறது. 1966-ம் ஆண்டு இறைவனடி சேர்ந்த அவரது சமாதிக் கோயிலும் அருகிலேயே இருக்கிறது.

ஸ்ரீ குரும்பேரி சச்சிதானந்த சுவாமிகளின் அடியாராகிய தேவானந்த சுவாமிகள், ஜோலார்பேட்டை பால்னுங்குப்பம் கிராமத்தைச்சேர்ந்தவர்.

மகாதேவ மலைத் தோற்றம்



பூர்வாச்ரமத்தில் சிறை சென்ற சிறந்த தேசபக்தர். பஞ்சாயத்து போர்டு தலைவராக இருந்தவர். 1953-ம் வருடம் காங்குப்பம் மயானத்தில் தீ வளர்த்து, ஒரு மண்டலம் யோக நிஷ்டையில் அமர்ந்து, திருநீறு பிரசாதத்தினால் பேய் பிசாசுகள் பிடித்திருந்தவர்களைக் குணப்படுத்தியிருக்கிறார்.

ஸ்ரீ தேவானந்த சுவாமிகளின் நன்முயற்சியால், பல அன்பர்கள் சேர்ந்து மலைக்குப் படிகள் அமைத்துக் கொடுத்தனர். விளக்குகள் வரவழைத்தனர். கோயிலுக்கு முன் மண்டபம் ஒன்றும் எழுப்பினர். சுவாமிகள், மகாதேவ மலை சுப்பிரமணிய சுவாமிக்கு ஸ்ரீ வள்ளி கல்யாணம், சூர சம்மாரம் முதலிய திருவிழாக்களைத் தொடங்கி வைத்தார். ஆடிக் கிருத்திகையன்று புஷ்ப விமானத் திருவிழா நடைபெறவும் காரணமா யிருந்தார். மலையடிவாரத்தில், ஸ்ரீ விநாயகர், பழநியாண்டவர், நவக்கிரகங்கள் ஆலயங்கள் கட்டினார். பெருமுயற்சி எடுத்து ஏட்டுச் சுவடியிலிருந்த மகாதேவர் புராணத்தை அச்சேற்றிய பெருமையும் தேவானந்த சுவாமிகளுக்கு உண்டு.

மலைக்குப் படிக்கட்டுகள் கட்டி முடியும்வரை மகாதேவரைத் தரிசிப்பதில்லை என்று தீவிர விரதம் இருந்து வைராக்கியத்துடன் தெய்வப் பணி புரிந்த தேவானந்த சுவாமிகளைப் பற்றிக் காங்குப்பம் வாசிகள் பெருமையோடு பேசுகிறார்கள். சுவாமிகள் முக்தி யடைந்த செய்தியைக் கேள்வியுற்றதும், வள்ளி மலையிலிருந்த மௌன சுவாமிகள் நடந்தே வந்து, இறுதிவரை அங்கேயே அமர்ந்திருந்து, எல்லா சடங்குகளையும் மேற்பார்வையிட்ட நிகழ்ச்சியை நன்றியுணர்வோடு நினைவு கூர்ந்தார் ஒரு பெரியவர்.

'தொண்டான் துளசி'க் குன்றிலும் மகாதேவ மலையிலும் இருந்த பிறகு ஸ்ரீ மௌன குரு சுவாமிகள் வேலூரை அடுத்துள்ள பகவதிமலையிலும் பாலமதி மலையிலும் சில வருடங்கள் தங்கியிருக்கிறார்.

வேலூரிலிருந்து போளூர் செல்லும் சாலையில் சிறிது தூரம் சென்றால் பாலமதி மலைக்குச் செல்லும் வழியொன்று பிரிகிறது. அப்பாதையில் ஒரு மைல் சென்றதும் கண்ணன், காரை நிறுத்தினார். நாங்கள் இறங்கினோம்.

''இதோ பார்த்தீர்களா, இதுதான் பகவதி மலை. மேலே பகவதியம்மன் கோயில் இருக்கிறது. ஒரு குகையும் இருக்கிறது. அங்கு சில வருடங்கள் மௌன சுவாமிகள் இருந்திருக்கிறார்'' என்றார்.

பின்னர், எதிர்ப்புறத்திலுள்ள பாலமதி மலையை நோக்கிக் காரில் பயணமானோம்.

பாலமதி மலையில் நாங்கள் ஏறிச் சென்றபோது பகலவன் நெருப்பாய்க் காய்ந்து கொண்டிருந்தான். அப்படி யிருந்தும் ரம்மியமான சுற்றுப்புறக் காட்சிகளும், பசுமையான பள்ளத்தாக்குகளும், தொலைவில் தெரிந்த சோலைகளும் கண்ணுக்குக் குளிர்ச்சியாகவும், மனத்திற்கு இதமாகவும் இருந்தன.

அந்த மலையில் காரும் பஸ்ஸும் செல்வதற்கு ஏற்ற வகையில் அண்மையில் ஒரு பாதை அமைத்திருக்கிறார்கள். அம்மலை அதிக உயரம் இல்லாவிட்டாலும் அப் பாதையில் ஏறிப் போகும்போது ஒரு பெரிய மலைப் பயணம் செய்யும் உணர்வையும், உற்சாகத்தையும் நாம் பெறுகிறோம்.

சிறிது தொலைவு சென்ற பிறகு இடப்புறத்தில் உயர்ந்த பாறை ஒன்றின் உச்சியில் ஒரு சிறு கொட்டகை தெரிந்தது.

''அது ஒரு புதுக் கோயில். அங்கே சமீபத்தில் ஒரு வேல் ஸ்தாபனம் செய்யப்பட்டிருக்கிறது'' என்று கண்ணன் கூறினார். கார் நின்றது. எல்லோரும் இறங்கி கரடுமுரடான அந்தப் பாதையில் அடிமேல் அடி வைத்து உச்சியை அடைந்தோம்.

அங்கு ஏழெட்டு அடி உயரமுள்ள ஒரு பெரிய வேல் இருக்கிறது. செங்கல் மேடையின் மீது ஒரு முருகர் படம் வைக்கப்பட்டிருக்கிறது. நாங்கள் சென்றபோது நாலைந்து கிராம மக்கள், பூ வைத்து, சூடம் கொளுத்திக் கொண்டிருந்தனர். வலம் வந்து நாங்களும் தொழுதோம்.

அங்கிருந்து ஸ்ரீ மௌன சுவாமிகள் முன்பு தங்கியிருந்த மணியம் ரங்கநாதன் தோட்டத்தைக் காணச் சென்றோம். செல்லும் வழியில் ஓர் ஆலயம் தென்பட்டது. எங்கள் கார் நின்றது. ஆலயத்தினுள் சென்றோம்.

அது வீர ஆஞ்சநேயர் கோயில். பாறை ஒன்றில் இருந்த ஸ்ரீ ஆஞ்சநேய மூர்த்தியை அப் பகுதி மக்கள் பல ஆண்டுகளாகவே வழிபட்டு வந்திருக்கிறார்கள். ஐம்பது அறுபது ஆண்டுகளுக்கு முன் அங்கு வந்த ஏகாங்கி ஸ்ரீ கோபால ராமானுஜ சுவாமிகள் என்பவர், பெரு முயற்சி எடுத்துக் கொண்டு, பொருள் திரட்டி, உள்ளூர் மக்களின் உதவி கொண்டு அக் கோயிலைக் கட்டியதாகக் கூறினார்கள். அந்தக் கோயிலில் ஸ்ரீ ராமனுக்கும் ஒரு சந்நிதி ஏற்படுத்த வேண்டும் என்று அந்தப் பேரருளாளர் திட்டமிட்டு, கட்டடமும் கட்டி முடித்து விட்டார். ஆனால், அங்கு சிலர் விக்ரகங்களைப் பிரதிஷ்டை செய்வதற்கு முன்பே இறைவன் அவரை அழைத்துக் கொண்டு விட்டார். 1947-ம் ஆண்டு முக்தி அடைந்த சுவாமிகளின் சமாதியும் அருகிலேயே இருக்கிறது. அங்கு அவருடைய உருவச்சிலை ஒன்றும் வைக்கப்பட்டிருக்கிறது. அவரது மறைவைப் பற்றிய விவரங்கள் பொறிக்கப்பட்டுள்ள கல்லில் பாலமதியைத் 'தென் பத்ராசலம்' என்று குறிப்பிட்டிருக்கிறார்கள்.

பாலமதியில் தங்கியிருந்த போது ஸ்ரீ மௌன சுவாமிகள் ஸ்ரீ ஆஞ்சநேயர் கோயிலுக்கு அடிக்கடி வருவார் என்றும், சிறிது நேரம் தியானத்தில் ஆழ்ந்து விட்டுச் செல்வது வழக்கம் என்றும் தற்போது அங்கு பூஜை செய்து கொண்டிருக்கும் வயோதிகர் கூறினார்.

பின்னர், மணியக்காரரின் தோட்டத்திற்குச் சென்றோம். அங்கு செழித்தோங்கி வளர்ந்திருந்த மாமரங்களையும் தென்னை மரங்களையும் ஸ்ரீ மௌன குரு சுவாமிகள்தான் பயிராக்கினார் என்று அங்கிருந்த வேலையாட்கள் கூறினார்கள். சுவாமிகள் தங்கியிருந்த சிறு ஓட்டு வீட்டையும் காட்டினார்கள்.

பாலமதியிலிருந்து சுவாமிகள், வள்ளிமலைக்குச் சென்றதன் காரணத்தை பின்னர் ஒருமுறை தங்கால் ஆச்ரமத்திற்குச் சென்றிருந்த போது அவரிடம் கேட்டேன். அதற்கு ஒரு புன்னகைதான் எனக்குப் பதிலாகக் கிடைத்தது. ''வள்ளிமலை திருப்புகழ் சுவாமிகளைத் தாங்கள் சந்தித்தது உண்டா?'' என்று கேட்டதற்கு, சந்தித்திருப்பதாகவும், வாத்தியம் வாசித்துக் கொண்டு திருப்புகழ் பாடியதைக் கேட்டிருப் பதாகவும் சைகையால் கூறினார் சுவாமிகள்.

வேலூரில் சுவாமிகளின் பக்தர்கள் சிலரைச் சந்தித்துப் பேசினேன். ஒவ்வொருவரும் உணர்ச்சி ததும்ப தங்கள் அனுபவங்களைக் கூறும் போது சுவாமிகள் மீது நமக்குள்ள மதிப்பும் மரியாதையும் பன்மடங்கு உயருகிறது.

மணியக்காரர் ரங்கநாதன் தமது இளம் வயதில் தொண்டான் துளசி திப்பையில் சுவாமிகளைத் தரிசித்த நாட்களையும், தங்கம் போல் பளபளக் கும் மேனியழகுடன் சிங்கம் போல் நிமிர்ந்து நடக்கும் அவரது கம்பீரத் தையும் வர்ணித்தார்.

''சாமியை அப்போ பார்க்கணுங்க. ஆசனம் போட்டுத் தியா னத்திலே உட்கார்ந்துட்டார்னு ஜோதியா ஜொலிப்பாருங்க. அப்போ தெல்லாம் அவருடைய கை, கால் எல்லாம் நீளமாயிருந்தது. நெட்டையா யிருப்பாரு. இப்போ எப்படித்தான் உடம்பைச் சுருக்கிக்கிட்டாரோ தெரியலே. எல்லாம் தபஸ் சக்திங்க'' என்றார் அவர்.

நாராயண திருமல் பாட் என்பவர் தெய்வத்தின் மீதோ, சாமியார் கள் மீதோ அதிகம் நம்பிக்கையில்லாமல் இருந்தவர். தமது தீராத நீரிழிவு நோயையும், தாங்க முடியாத வயிற்று வலியையும் சுவாமிகள் மாயமாகப் போக்கடித்தது முதல் அவருக்கு எல்லையற்ற நம்பிக்கை பிறந்து விட்டது. ''சாமியார் கொடுக்கும் திருநீறுதான் எனக்கு மாமருந்து. நான் இன்னிக்கு மனுஷனா நடமாடிக்கிட்டிருப்பது அவர் கொடுத்த பிச்சைதான்'' என்கிறார் திருமல் பாட்.

பஞ்சாட்சரம் என்ற இளைஞர் ஒரு டாக்சி டிரைவர். கண்ணனுக்கு மிகவும் நெருங்கிய நண்பர். சில ஆண்டுகளுக்கு முன்பு சென்னை பூந்த மல்லி நெடுஞ்சாலையில் டாக்சியை ஓட்டிச் சென்றவர்,பெரும் விபத்துக்கு உள்ளானார். உடல் முழுவதும் காயம். மண்டையில் பலமான அடி. பேச்சு மூச்சற்றுப் போனவரைப் பொது மருத்துவ மனையில் கொண்டு போய்ச் சேர்த்தார்கள். அரைகுறை நினைவோடு இருந்தவருக்கு அசுர வைத்தியம் செய்தார்கள். மூளை வேறு கலங்கி விட்டிருந்தது. பஞ்சாட்சரத்தால் யாரையுமே அடையாளம் கண்டு கொள்ள முடியவில்லை. அவர் பிழைப் பார் என்ற நம்பிக்கையே உறவினர்களுக்கு இல்லை. டாக்டர்களும் நம்பிக்கை அளிக்கவில்லை.

கண்ணன், தங்கால் ஆச்ரமத்திற்குச் சென்றார். நண்பரின் பரிதாப நிலையைச் சுவாமிகளிடம் எடுத்துக் கூறினார். அடுத்த கணம் பயணத்திற் குத் தயாராகி விட்டார் கருணை வள்ளல். அவரை ஏற்றிக் கொண்டு கார் சென்னையை நோக்கிப் பறந்தது.

பொது மருத்துவ மனையில் இறங்கிய சுவாமிகள் வேகமாக நடந்தார். எல்லோரும் ஒதுங்கி நின்று வழி விட்டனர். பஞ்சாட்சரம் படுத்திருந்த அறை அவருக்கு எப்படித்தான் தெரிந்ததோ? நேரே அவரது கட்டிலின் அருகில் போய் நின்ருர்.

ஸ்ரீ பக்த வீர ஆஞ்சநேயர் ஆலயம்
(பாலமதி மலை)

அதுவரை நெருங்கிய உறவினர்களையே அடையாளம் கண்டு கொள்ளக்கூட முடியாமல் கலங்கியிருந்த பஞ்சாட்சரம், எப்படியோ சுவாமிகளைத் தெரிந்து கொண்டு விட்டார். கைகளைத் தூக்க முடியவில்லை. வாய் திறந்து பேச முடியவில்லை. கண்களால் நமஸ்காரம் செய்தார். தனது நன்றியைத் தெரிவித்தார்.

சுவாமிகள் திருநீற்றை எடுத்துப் பஞ்சாட்சரத்தின் உடலெங்கும் பூசினுர். கண்களை மூடி, கைகளைக் கூப்பித் தொழுது விட்டு, வந்த வேகத்திலேயே ஆச்ரமத்திற்குத் திரும்பி விட்டார். ஒரு வாரத்திற்கெல்லாம் பஞ்சாட்சரம் பூரண குணம் அடைந்தார். அத்தனை பெரிய விபத்தில் சிக்கியவர் எப்படிப் பிழைத்தார் என்று மருத்துவர்களே ஆச்சரியம் அடைந்தனர்.

இந்த அற்புத நிகழ்ச்சியை நெஞ்சடைக்கக் கூறினுர் பஞ்சாட்சரம். ''சார், லட்சாதிபதிகளெல்லாம் காரை வெச்சுக்கிட்டு சாமியை தங்கள் வீட்டுக்கு அழைச்சுக்கிட்டுப் போகக் காத்திருப்பாங்க. அவங்க கார்லே எல்லாம் ஏருதவர், இந்த ஏழையைப் பார்க்க ஆஸ்பத்திரிக்கு ஓடோடி வந்தாரே... அந்தக் கருணையை நினைச்சுப் பார்க்கறபோதெல்லாம் என் உடல் நடுங்குதுங்க'' என்று இளைஞர் பஞ்சாட்சரம் உணர்ச்சி வசப்பட்டுக் கூறினுர்.

வீட்டுக்கு வந்த பிறகு பஞ்சாட்சரத்திற்குக் கண்கள் சரியாகத் தெரியவில்லையாம். ஏதேதோ வைத்தியம் செய்தும் சரியாகவில்லையாம், 'குருடாகி விடுவோமா, டாக்சி ஓட்டும் பிழைப்பில் மண் விழுந்துவிடுமோ' என்று எண்ணி எண்ணி வருந்தினுராம். ஒரு நாள் ஆச்ரமத்திற்குச் சென்று சுவாமிகளிடம் அதைப்பற்றிக் கூறினுராம். சுவாமிகள் கண்களைத் தடவிக் கொடுத்தார். பின்னர், மெள்ள மெள்ள கண் நன்ருகத் தெரிய ஆரம்பித்து விட்டது. இப்போது வேலூரில் அந்த இளைஞர் மீண்டும் டாக்சி ஓட்டிக் கொண்டிருக்கிருர்.

சென்னையிலும் சுவாமிகளின் அடியார்கள் ஒரிருவரைச் சந்திக்கும் வாய்ப்பு எனக்குக் கிடைத்தது. திருவல்லிக்கேணி வாசியான மணி செட்டியார், சுவாமிகள் முன்பெல்லாம் தவருமல் ஒவ்வோர் ஆண்டும் கபாலீச்வரர் கோயில் பிரும்மோற்சவத்தின்போது வருவது வழக்கம் என்றும்,

கோயிலுக்கு எதிரிலுள்ள அன்னதான சத்திரத்தில் தங்கி பக்தர்களுக்குத் தரிசனம் தருவார் என்றும் கூறினர்.

பூந்தமல்லியைச் சேர்ந்த துளசிபாய் அம்மாள் இல்லத்திற்கு சுவாமிகள் பலமுறை வருகை தந்திருக்கிருர். அவர்கள் அன்புடன் தரும் ஆகாரத்தை உட்கொள்ளுவார். சுவாமிகளின் அரும் பெரும் சக்திகளே உணர்த்த ஒரு நிகழ்ச்சியை உதாரணமாக எடுத்துக் கூறினர் அந்த அம்மையார்.

துளசிபாய் அம்மாளின் மருமகனை காலஞ் சென்ற சால்வேயின் இல்லத்தில் ஓர் இரவு சுவாமிகள் தங்கியிருந்தார். திடீரென்று நடுநிசியில் அவர் எழுந்து, ''நான் உடனே வள்ளிமலேக்குச் செல்ல வேண்டும். அங்கு ஆச்ரமத்திலுள்ள பசு ஒன்றைப் புலி அடித்துப் போட்டு விட்டது...'' என்று சால்வேயிடம் கூறினர். சால்வே தம்பதிக்குக் கைகால் ஓடவில்லே. விடிந்ததும் போகலாம் என்று அவர்கள் யோசனே கூறியதை சுவாமிகள் ஏற்றுக்கொள்ளவில்லே. உடனேயே புறப்பட வேண்டும் என்று வற்புறுத்தினர். அடுத்த கணம் எல்லோரும் காரில் புறப்பட்டுச் சென்ருர்கள். என்ன ஆச்சரியம்!...வள்ளிமலே ஆச்ரமத்தில் ஒரு பசுவைப் புலியொன்று அடித்துப் போட்டிருந்தது.

மயிலாப்பூரிலிருக்கும் குருஜி சுந்தரராமன் என்பவர் மௌன சுவாமிகளின் பேரன்பிற்குப் பாத்திரமான முக்கிய சீடர் என்று கேள்விப்பட்டு, அவரைக் காணச் சென்றிருந்தேன். தம்மைப் பற்றி அதிகம் தெரிவித்துக் கொள்ள விரும்பவில்லேயாளுலும், தியானத்தாலும், உபாசனேயினலும் அவர் அரிய சக்திகளேப் பெற்றிருப்பவர் என்பது புலனுயிற்று. அவரது ஆழ்ந்த ஆன்மிக உணர்வுகளே அடக்கமான, ஆனல், அழுத்தமான அவரது பேச்சுக்களிலிருந்து அறிய முடிந்தது.

மௌன சுவாமிகளின் யோக சாதனேகளே நேரில் காணும் வாய்ப்பைப் பெற்றிருக்கிருர் சுந்தரராமன். வள்ளிமலே ஆச்ரமத்தில் சுவாமிகள் இவருக்குப் பலவித அபூர்வ ஆசனங்களேப் போட்டுக் காட்டி பிரமிப்பில் ஆழ்த்தியிருக்கிருர். கைக் கட்டை விரலேப் பூமியில் அழுத்தித் தலேகீழாக சுவாமிகள் நின்றிருப்பதை இவர் பார்த்திருக்கிருர்.

சுவாமிகள் கேரளத்தில் பிறந்தவர் என்று கூறியதற்கு மேல் அவரது பூர்வாச்ரமத்தைப் பற்றித் தமக்குத் தெரிந்த விவரங்களேக் கூற மறுத்து விட்டார் சுந்தரராமன். அதைப் பற்றி தாம் பேசுவதற்கு சுவாமிகளின் கட்டளே தடையாயிருப்பதாக அவர் கூறியதால் மேலும் வற்புறுத்தி அவரது மௌனத்தைக் கலேக்கவோ, உறுதியைக் குலேக்கவோ நான் விரும்பவில்லே.

நாம் ஒன்று நினேக்க தெய்வம் ஒன்று நினேக்கிறது. சொந்த அனுபவம் ஏற்படும்போது இந்தப் பழமொழியில் புதைந்துள்ள பேருண்மையை நாம் முழுமையாக உணருகிருேம்.

தங்கால் ஸ்ரீ மௌன குரு சுவாமிகளேப் பற்றிய பெருமைகள் விகடனில் வெளி வந்து கொண்டிருந்த நேரத்தில் திடீரென்று அந்த

மகானின் ஜீவன் உடற் கூட்டிலிருந்து பிரிந்து, ஆன்ம ஜோதியாய்ப் பிரகாசிக்கப் போகிறது என்று யாருமே எதிர்பார்த்திருக்க முடியாது. குடத்திற்குள் விளக்காய் விளங்கிக் கொண்டிருந்தவரின் புகழைப் பல்லாயிரக் கணக்கானவர்கள் முதல் முறையாக அறிந்து, அவரைத் தரிசிக்க வேண்டும் என்று துடித்துக் கொண்டிருந்த போது, சுவாமிகள் எல்லோர் கண்களிலிருந்தும் மறைந்து விட வேண்டும் என்பது திருவருளின் திட்டமாக அமைந்திருக்கிறது.

சுவாமிகள் சமாதியடைந்த 1971-ம் ஆண்டு மே மாதம் மூன்றாந் தேதி மாலை ஆறு மணிக்கு நான், ஆதிசங்கரர் அவதரித்த புனிதத் தலமான காலடியிலிருந்தேன். புதன்கிழமை சென்னைக்குத் திரும்பிய பின்னர் தான், குருஜி சுந்தரராமனின் தந்தியின் மூலம் அச் செய்தியை அறிந்து திடுக்கிட்டுப் போனேன்.

அன்று இரவே குருஜியைக் காண்பதற்கு மயிலைக்குச் சென்றேன். அவர் தங்காலில் இருப்பதாகவும், நள்ளிரவுக்குள் திரும்பி விடுவார் என்றும் அறிந்து வீடு திரும்பினேன். மறு நாள், குருவாரத்தன்று காலை மீண்டும் குருஜியின் இல்லத்திற்குச் சென்றேன்.

குருஜியும் அவரது வீட்டுப் பெண்டிரும் சோகமே உருவாக நின்றிருந்தனர். மௌனி, உருவத்தை மறைத்து, அருவமாகி தெய்வ நிலைக்கு உயர்ந்து விட்டிருந்தாலும், நெருங்கிப் பழகிய பாசத்தின் காரணத்தால் மகானின் மறைவு, பேரிழப்பாக குருஜியின் குடும்பத்தினரை வாட்டிக் கொண்டிருந்ததைக் கண்டேன். அறையில் குருஜியின் பத்தொன்பது வயது மகன் துக்கம் தாங்க முடியாமல் மூர்ச்சையாகி விழுந்து கிடந்தான். சுவாமிகளின் மீது உயிரையே வைத்திருந்த அவன், கடந்த பத்து நாட்களாக சுவாமிகளோடு தங்கியிருந்துவிட்டு, வீடு திரும்பியதும் எதிர்பாராத செய்தியைக் கேள்வியுற்று, அடிக்கடி மயங்கி விழுவதாகக் கூறினார் குருஜி.

குருஜி அமைதியாக என்னெதிரில் வந்து அமர்ந்தார். அவரிடம், ''ஐயா, இப்படியொரு சூழ்நிலையில் தங்களைச் சந்திப்பேன் என்று நான் நினைக்கவேயில்லை. சுவாமிகளைப் பற்றி எழுதத் தொடங்கிய போது, அவர் சமாதியடைந்த விவரத்தையும் எழுதப்போகிறேன் என்று நான் கனவு

ஸ்ரீ மௌன குரு சுவாமிகள்



கூடக் காணவில்லை. நாட்டின் பல பகுதிகளிலிருந்து, மௌன சுவாமிகளைத் தரிசிக்க வர வேண்டும் என்றும், தங்கால் ஆச்ரமத்திற்கு எப்படிச் செல்ல வேண்டும் என்று கேட்டும் எனக்குப் பல கடிதங்கள் வந்து கொண்டிருக்கின்றன. அவர்களுக்கு நான் 'சுவாமிகளை இனி நேரில் காண முடியாது' என்று எழுதும்படி நேர்ந்து விட்டது. அவர்களுக்கும் சுவாமிகளின் சீடர்களுக்கும் அவரது இறுதி நாட்களையும், சமாதி நிலை எய்திய விவரத்தையும் தெரிவித்தால் ஒரு வகையில் சற்று சமாதானமாக இருக்கும் என்று கருதுகிறேன். அந்த நோக்கத்துடனேயே தங்களைக் காண வந்திருக்கிறேன்'' என்றேன் நான்.

நெஞ்சில் தேங்கி நின்ற துயரத்தை மறைத்துக் கொண்டு, குருஜி மெள்ளப் பேசினார். பத்துப் பதினைந்து நாட்களாக ஆச்ரமத்தில் அவருக்கு நேர்ந்த அனுபவங்களை அவர் கூறிக் கொண்டிருந்த போது, அவரது உள்ளுணர்வு பல்வேறு சிந்தனை அலைகளால் அவ்வப்போது தாக்கப்படுவதையும், வாழ்க்கையில் கிடைப்பதற்கரிய பேறுபெற்ற பெருமிதத்தில் அவரது உள்ளம் மிதந்ததையும் என்னால் உணர முடிந்தது.

சுவாமிகளுக்கு முழங்காலில் ஏதோ ஒரு வலி ஏற்பட்டு, அதனால் அவர் நடக்க முடியாமல் கஷ்டப்படுவதாகக் கேள்வியுற்று தம் குடும்பத்தோடு ஆச்ரமத்திற்குச் சென்றார் குருஜி. முன்பு சுவாமிகள் ஓரிரு முறை நோய்வாய்ப்பட்டிருந்தபோது ஹோமம் வளர்த்துப் பூஜை செய்திருக்கிறார் குருஜி. இம் முறையும் அவ்வாறே பூஜை செய்து, சுவாமிகளின் முழங்காலில் விபூதியைத் தடவினார். அந்த வலி மெள்ள மெள்ளக் குறைந்து அவருக்குக் குணமாகி விட்டது. பின்னர் மீண்டும் பழையபடி சுவாமிகள் நடக்க ஆரம்பித்து விட்டார்.

பத்து நாட்கள் கடந்தன. குருஜியின் குடும்பத்தினருக்கு மட்டும் சென்னைக்குத் திரும்ப உத்தரவு கிடைத்ததே தவிர, குருஜிக்கு அனுமதி கிடைக்கவில்லை. குருஜி ஓரிரு முறை உத்தரவு கேட்டபோது, சுவாமிகளுக்குக் கோபம் கூட வந்து விட்டது. அறையில் போய்ப் படுத்துக் கொண்டு விட்டார். குருஜி, ஆச்ரமத்திலேயே இருப்பதாக வாக்களித்த பிறகுதான் சுவாமிகள் மீண்டும் எல்லோருடனும் சிரித்துப் பழகத் தொடங்கினார்.

இரண்டாந் தேதி ஞாயிற்றுக் கிழமை கூட சுவாமிகள் எல்லோருடனும் 'குஷி'யாகத்தான் 'பேசி'க் கொண்டிருந்தார். சென்னை ஸ்டான்லி மருத்துவ மனையைச் சேர்ந்த டாக்டர் சுவாமிநாதன் முதன் முறையாக ஆச்ரமத்திற்கு வந்திருந்தார். அப்போது திருவண்ணாமலை காட்டு சாமியாரைப் பற்றியும், அவரோடு தமக்கிருந்த தொடர்பைப் பற்றியும் சுவாமிகள் கூறினார். ஜட்ஜ் சுவாமிகள் தம்மிடம் கொண்டிருந்த பேரன்பைப்பற்றியும் நினைவு கூர்ந்தார். அந்தச் சமயத்தில் சுவாமிகளைத் தரிசிக்க வந்த அன்பர் ஒருவர், ஜட்ஜ் சுவாமிகளோடு மௌனி இருக்கும் போட்டோ ஒன்றைக் கையோடு கொண்டு வந்த அதிசயமும் நிகழ்ந்தது.

மறுநாள் திங்கட்கிழமை சுவாமிகளுக்கு சிறிது வயிற்றுவலி வந்தது. வயிற்றைத் தம் கையால் குத்திக் குத்திக் காட்டினார். சுவாமிகளிடம்





குருஜி சுந்தரராமன்

திருமதி புனிதவதி - திரு கந்தஞானி

அனுமதி கேட்டு நன்னாரி சர்பத் கரைத்துக் கொடுத்தார் குருஜி. வயிற்று வலி சற்று குறைந்தது போல் தோன்றியது. ஆனால், அது மீண்டும் வந்தது. இருப்பினும் சுவாமிகள் நடமாடிக் கொண்டிருந்தார். அவ்வப்போது சோர்ந்து போய் உட்கார்ந்தார். சில சமயம் களைத்துப் போய் சுருண்டும் படுத்துக் கொண்டார்.

அந் நிலையிலும் ஓரிருவருக்கு விபூதிப் பிரசாதம் கொடுத்து ஆசி வழங்கினார் சுவாமிகள். யாரும் இல்லாத சமயம் குருஜியிடம் ஒரு நெல் கொண்டு வரச் சொன்னார். அதை வாங்கி அவர் நாவில் ஏதோ அட்சரங் களை எழுதினார். உள்ளேயிருந்து வெள்ளி வேலைக் கொணர்ந்து, அதைக் கொண்டும் அட்சரங்கள் எழுதினார். பின்னர் அறையில் போய் அமர்ந்து விட்டார். மதியத்திற்கு மேல் தரிசனத்திற்கு வந்தவர்கள் சுவாமிகளைக் காண அனுமதிக்கப்படவில்லை.

சுவாமிகள் பார்ப்பதற்குச் சாதாரணமாகத்தான் இருந்தார். ஆனால், குருஜியின் உள்ளுணர்வு மட்டும், அன்று நிகழப் போகும் பெரும் மாறுதலை அறிவித்துக் கொண்டே யிருந்தது. அந்த நினைவுகளில் சிக் குண்டவர் திகைத்துப் போயிருந்தார். சுவாமிகளிடம் ஜாடையாக ஓரிரு முறை கூறிப் பார்த்தார். மருத்துவரை அழைக்க வேண்டாம் என்றும் யாருக்கும் சொல்லி அனுப்ப வேண்டாம் என்றும் சுவாமிகள் கண்டிப்பா கக் கூறி விடவே, குருஜி பேசாமல் இருந்து விட்டார்.

மாலை ஐந்தரை மணி யிருக்கும். சுவாமிகள் எழுந்து, தெற்கு திசை நோக்கி ஆசனம் போட்டுக் கொண்டு அமர்ந்தார். பூஜையைத் தொடங் கும்படி குருஜிக்கு குறிப்பால் உணர்த்தினார். எல்லாம் முன்பே சுவாமிகள் சொல்லித் தந்திருந்த பூஜை முறைதான். மூன்று எலுமிச்சம் பழங்களை எதிரில் வைத்து அவற்றின் மீது கற்பூரத்தை வைத்தார் குருஜி. அதற்கு இருபுறமும் மூன்று மூன்று கற்பூரக் கட்டிகளை வைத்தார். பின்னர் கற்பூரக் கட்டிகளை ஏற்றினார். அவை கொழுந்து விட்டு எரிந்தன. மஞ்சள் பூசி தயாராய் வைத்திருந்த தேங்காயை எடுத்து தமது முன் மண்டையில் நாலைந்து முறை அடித்துக் கொண்டார் குருஜி. அதில் சிறு விரிசல் கண்டு,

நீர் அவர் முகத்தில் வழிந்தது. உடனே தேங்காயை எடுத்து நடுவில் உள்ள எலுமிச்சம் பழத்தின் மீது அடித்தார். உடனே மற்ற இரண்டு எலுமிச்சம் பழங்களும் பிளந்தன. அதே நேரத்தில் கற்பூர ஜ்வாலைகள் சட்டென்று அணைந்தன. ஜீவன், ஆன்ம ஜோதியில் கலக்கப் போவதற்கு அறிகுறி அதுதான். குருஜிக்கு முன்பே தெரிந்திருந்த ரகசியம் அது. மறு கணம் சுவாமிகளின் திருமேனி குருஜியின் மீது சாய்ந்தது. அதை அப்படியே தாங்கிக் கொண்டார் அவர். திறந்த கண்ணோடு, குத்திட்ட பார்வையோடு அடங்கி விட்டார் மௌன சுவாமிகள்.

அப்போது அந்த அறையில், தங்கால் பஞ்சாயத்து போர்டு தலைவர் திரு ரத்தின நாயக்கரும், சுவாமிகளுடன் மிக நெருங்கிப் பழகிய பக்தர் வள்ளிமலை குருநாதனும், சித்தூரிலிருந்து வந்திருந்த ஓர் இளைஞரும், ஆச்ரமப் பணியாட்களும் இருந்தனர்.

ரத்தின நாயக்கரின் தந்தை ஒரு சமயம் தீராத குடல் நோயால் வருந்தினார். அப்போது அவரது தந்தைக்கு முருகனே கனவில் தோன்றி, ஆச்ரமத்திற்குப் பின்னால் இருக்கும் ஈசன் மலையில் அதற்கான மூலிகை இருப்பதாகக் கூறி மறைந்தார். அதன்படி தேடிச் சென்ற போது அந்த மூலிகை கிடைத்தது. தீராத நோயைத் தீர்த்து வைத்த முருகருக்கு அம் மலையில் ஓர் ஆலயத்தைக் கட்டியிருக்கிறார் ரத்தின நாயக்கரின் தந்தை.

வள்ளிமலையைச் சேர்ந்த குருநாதன், சுவாமிகளை நிழலாகத் தொடருவார். சாதாரண நிலையில் இருந்தவர், சுவாமிகளின் கட்டளைக்கிணங்க ஒரு வெற்றிலை பாக்குக் கடை வைத்து, சிறுகச் சிறுக செழித்து தற்போது பெரிய மளிகை வியாபாரம் செய்து வருகிறார்.

சுவாமிகள் சமாதி நிலை எய்து விட்ட சிறிது நேரத்திற்கெல்லாம் சித்தூர் அன்பர் சுப்பிரமணிய நாயக்கரும் ஆச்ரமத்திற்கு ஓடோடி வந்தார்.

செய்தி பரவியது. பக்தர்கள் கூடினர். புனிதரின் புன்னகையழகைக் காணாமல் அவர்கள் உள்ளம் புழுங்கி அழுதனர். கருணை விழிகள் மௌன மொழி பேசாததைக் கண்டு கண்ணீர் வடித்து, நெஞ்சடைக்க, துடித்துப் போய் நின்றனர்.

கற்பூரக் கட்டிகள் வந்தன. உப்பு மூட்டைகள் வந்தன. விபூதிப் பொட்டலங்கள் வந்தன. ஊதுவத்தியின் நறுமணம் கமழ்ந்தது. கங்கை நீரின் புனிதமும் கூடியது.

களைந்த உடற் சட்டையைப் போட்டு வைக்க சுவாமிகள் முன்னேற்பாடாக முன்பே கட்டி வைத்திருந்த பாதாள அறைக் குழியில் அவருக்கு சமாதி அமைக்கப்பட்டது.

[பின்னர் ஸ்ரீ குருஜி சுந்தரராமன் தங்கால் ஆச்ரமத்தில் ஸ்ரீ மௌன குரு சுவாமிகளுக்கு ஒரு சமாதி ஆலயம் அமைப்பதிலும் பெரு முயற்சி எடுத்துக்கொண்டார். சமாதியின் மீது முறைப்படி ஒரு சிவலிங்கத்தையும் எதிரில் பலிபீடத்தையும் நந்திகேச்வரரையும், இரு பக்கங்களிலும் ஸ்ரீகணபதி, பால முருகன் உருவச் சிலைகளையும் பிரதிஷ்டை செய்திருக்கிறார்.]



ஸ்ரீ மௌனகுரு சுவாமிகளின் சமாதியின் மீதுள்ள சிவலிங்கம்

அன்று மாலை குருஜி என் இல்லத்திற்கு ஒரு தம்பதியை அழைத்து வந்தார். அவர்கள் இலங்கையைச் சேர்ந்த தமிழர்கள். கணவரின் பெயர் கந்தஞானி. அரசு ஊழியராயிருந்து ஓய்வு பெற்றவர். மனைவியின் பெயர் புனிதவதி. அந்த அம்மையாருக்கு ஐம்பது வயதிருக்கும்.

மார்ச் மாதம் திடீரென்று ஒரு நாள் உணவு உட்கொள்ள முடியாமல் அந்த அம்மையார் அவதியுற்றார். மருத்துவ மனைக்குச் சென்றார். டாக்டர் பரிசோதித்தார். எக்ஸ்ரே எடுத்துப் பார்த்தார். சந்தேகமில்லை. உணவுக்குழாயில் புற்று நோய் பரவி யிருக்கிறது. சதை வ்ளர்ந்திருக்கிறது. உடனே அறுவை சிகிச்சை செய்தாக வேண்டும் என்று டாக்டர் கூறி விட்டார். மார்ச் இருபத்தோராம் தேதி நாளும் குறித்தாகி விட்டது.

பயங்கர நோய்க்கு உட்பட்ட புனிதவதி கதிகலங்கிப் போனார். கணவரோ, கவலையே உருவானார். தெய்வ நம்பிக்கை மிக்க அத் தம்பதிக்கு ஒரு யோசனை தோன்றியது. இந்தியாவுக்குச் சென்று, தென்னாட்டுத் திருக் கோயில்களைத் தரிசித்து இறையருளைப் பெற்றுப் பின்னர் அறுவை சிகிச்சை பெறலாம் என்று நினைத்தார்கள். வேலூர் டாக்டர்களிடமும் காண்பித்து, தேவையானால் அங்கேயே ஆபரேஷன் செய்து கொண்டு விடலாம் என்றும் முடிவு செய்தார்கள்.

கணவரும் மனைவியும் இந்தியாவுக்குப் பறந்து வந்தனர். சமயபுரம் மாரியம்மனையும், திருவானைக்கா அகிலாண்டேச்வரியையும், ஸ்ரீ ரங்கநாதனையும், உச்சிப் பிள்ளையாரையும் தரிசித்துக் கொண்டு, மதுரைக்குச் சென்றனர். மீனாட்சி தேவியை வணங்கிவிட்டு, திருப்பரங்குன்றம், பழநி, திருச்செந்தூர், திருத்தணி முதலிய தலங்களுக்குச் சென்று, முருகனை வழிபட்டு வேலூர் வந்து சேர்ந்தனர். தலைமை டாக்டரைச் சந்தித்து, சிலோன் டாக்டர் தந்த 'ரிப்போர்ட்'டைக் காட்டினர். மீண்டும் ஒரு முறை பரிசோதனை செய்து பார்த்த பிறகு தேவையானால் ஆபரேஷன் செய்வதாக வேலூர் டாக்டர் கூறினர். அதற்காக அத் தம்பதி வேலூர் சி. எம். சி. மருத்துவ மனையில் தங்கி யிருந்தபோது ஓர் அதிசயம் நடந்தது. அந்த நிகழ்ச்சியில் தெய்வம் அவர்களுக்குத் துணை நின்ற சான்று தெரிந்தது.

ஏப்ரல் இருபத்தைந்தாம் தேதி இருவரும், மருத்துவ மனையில் இருக்கும் பழக் கடையில் பழ ரசம் அருந்தச் சென்றனர். அப்போது கண்ணனும் வேலூர் ஈச்வரனும் மௌனகுரு சுவாமிகளைப்பற்றியும், விகடனில் வெளி வந்த கட்டுரைகளின் காரணமாக தங்கால் ஆச்ரமத்தில் கூட்டம்

அதிகரித்துக் கொண்டு வருவதைப் பற்றியும், பலர் சுவாமிகளைத் தரிசித்துப் பயனடைந்து வருவதைப் பற்றியும் பேசிக் கொண்டிருந்தது இலங்கை தம்பதியின் காதில் விழுந்தது. அந்த மகானைத் தாங்களும் தரிசித்துப் பயனடையலாமே என்ற பேராவலில், கண்ணனிடம் விசாரித்தார் சுந்தஞானி. விகடன் பிரதிகளை எடுத்துக் கொடுத்தார் கண்ணன். அவற்றைப் படித்துப் பார்த்ததும், கண்ணனை அழைத்துக் கொண்டு மனைவியோடு தங்காலுக்குக் கிளம்பி விட்டார் அவர்.

தம்பதி வணங்கி எழுந்ததும், கணவர், மனைவியின் நோயைப்பற்றிக் கூறுவதற்கு முன்பே சுவாமிகள், புனிதவதியைப் பார்த்து 'சாப்பிடுவது சிரமமாக இருக்கிறதா?' என்று சைகையால் கேட்டார். 'ஆமாம்' என்று கூறிவிட்டு மனைவிக்குப் புற்று நோய் வந்திருப்பதைப் பற்றியும் ஆபரேஷன் செய்து கொள்ளப் போவதைப் பற்றியும் தெரிவித்தார் கந்தஞானி. அதை சுவாமிகள் கேட்டு, ''உன் மனைவிக்குப் புற்று நோய் இல்லை. கவலைப்படாதே. வாழைப் பழத்தை அத்திப் பாலில் தோய்த்து ஏழு வேளை சாப்பிடச் சொல், எல்லாம் சரியாகி விடும்'' என்று கூறி அனுப்பினர்.

சுவாமிகளின் ஆசியையும் விபூதிப் பிரசாதத்தையும் பெற்றுக் கொண்டு அத் தம்பதி வேலூர் திரும்பினர். இருபத்தொன்பதாம் தேதி மூன்று மணி நேரம் பரிசோதனை நடந்தது. எக்ஸ்ரேயும் எடுத்துப் பார்த்தனர். என்ன அதிசயம்! உணவுக் குழாயில் சதை வளர்ந்திருக்கும் அடையாளமோ, புற்று நோய் பரவியிருக்கும் அடையாளமோ இல்லை. எனவே, ஆபரேஷனுக்கு அவசியமேயில்லை. அப்படி ஒரு 'ரிப்போர்ட்'டும் எழுதித் தந்து விட்டார் டாக்டர். முப்பதாம் தேதி ஆச்ரமத்திற்குச் சென்று சுவாமிகளிடம் மகிழ்ச்சிகரமான செய்தியைத் தெரிவித்தனர் அத் தம்பதி. அதைக் கேட்டு மௌனி மோகனப்புன்னகை புரிந்தார்.

பின்னர் அலுவல் காரணமாக சென்னைக்கு வந்த கந்தஞானியும் புனிதவதியும் குருஜியின் இல்லத்திற்குச் சென்றபோது சுவாமிகள் சமாதியான செய்தியைக் கேட்டு அதிர்ச்சி யடைந்து விட்டனர். எந்த மகானுடைய தரிசனத்தால் தங்கள் வாழ்வில் ஒளி சேர்ந்ததோ, அவரை இனி தரிசிக்கவே முடியாது என்று உணர்ந்த போது அவர்களுடைய துயரத்திற்கு எல்லையேயில்லை.

அவர் திருமேனியையாவது தரிசிக்கலாம் என்று தங்காலுக்கு விரைந்தனர். ஆனால், அதற்குள் எல்லாம் முடிந்து விட்டிருந்தது, பாவம்!

என் இல்லத்திலிருந்து விடை பெறு முன் ஓர் உண்மையைக் கூறிச் சென்றார் கந்தஞானி: ''பாரதப் புண்ணிய பூமியை மிதித்ததாலேயே எங்கள் வாழ்வில் ஒளி கிடைத்தது. இது தெய்வங்களும், மகான்களும் வாழும் பூமி. நம்பிக்கையோடு வருபவர்களுக்கு இங்கு நல் வாழ்வும் நற்கதியும் கிடைக்கும். ஆன்ம தரிசனமும் கிட்டும். சந்தேகமில்லை. இதற்கு நாங்களே சாட்சி.''

அருணாசல மகிமை நம் புனித பாரதத்தின் இப் பெருமையை உலகிற்குப் பறை சாற்றுகிறது.



ஸ்ரீ காஞ்சி காமகோடி ஆசாரிய சுவாமிகள்

செல்வத்தில் கொழித்து, இன்பத்தில் திளைத்து, விஞ்ஞான நாகரிகத்தின் பெயரால் அன்றாட வாழ்க்கைக்குத் தேவையான வசதிகள் அத்தனையும் கிடைக்கப் பெற்று, 'முன்னேற்றம்' அடைந்து வரும் மேல்நாட்டினர், மனச் சாந்தியிழந்து, வேறு ஏதோ ஒன்றைத் தேடி யலைவதைக் காண்கிறோம். இருள் கவிந்த தங்கள் உள்ளத்திற்கு ஒளியும், சூன்யம் சூழ்ந்த தங்கள் வாழ்விற்குப் பொருளும் தேடி, கிழக்குத் திசை நோக்கி அவர்கள் வருகின்றனர். இவ்வாறு ஆன்மிக சாந்தியை நாடி வரும் வெளிநாட்டினரை அன்போடு வரவேற்று, அரவணைத்து, ஆறுதலளித்து, ஆன்மிக ஒளி வழங்கி, பேரமைதி நல்கி வரும் நம் பாரதப் புண்ணிய மண்ணிற்கு நாற்பது ஆண்டுகளுக்கு முன் பால் பிரண்டன் (Paul Brunton) என்ற ஓர் ஆங்கிலேயர் வந்தார். நம் நாட்டின் ஆன்மிக வளத்தின் ரகசியத்தை ஆராய்ந்தறிவதற்கும் அச் செல்வத்தைச் சம்பாதித்து வைத்திருக்கும் மகான்களைத் தரிசித்து மன அமைதி பெறுவதற்கும் வந்தவரை, அருணாசலத்தின் ஞான ஒளி வாவென்று அழைத்தது. அந்த ஒளியின் வடிவாக, மாமலையின்

அடிவாரத்தில் அமர்ந்திருந்த ஸ்ரீ ரமண மகரிஷியின் பாதங்களில் அமர்ந்து, விடை காணுப் புதிருக்கு விடை கண்டார் அவர்.

ஆருயிரம் மைல்களுக்கு அப்பாலிருந்து வந்தவரின் அகக் கண்களைத் திறந்து, அருணுசல மகிமையை உணர்த்தியவர், ஞான ஒளியாகவும் தவ மலையாகவும் இன்று நம்மிடையே நடமாடிக் கொண்டிருக்கும் ஸ்ரீ காஞ்சி காமகோடி ஆசாரிய சுவாமிகளாகும்.

எங்கோ பிறந்து, வேறு எந்தச் சூழ்நிலையிலோ வளர்ந்து, பாரதப் பண்பிற்கும், கலாசாரத்திற்கும் முற்றிலும் மாறுபட்ட பழக்க வழக்கங்களுக்கு அடிமையாகியிருந்தும், முற்பிறவியின் நல்வினைப் பயனுலும், அறிவிற்கப்பாற்பட்ட பேரருளின் பெருங்கருணையாலும், உலக குருவான ஸ்ரீ சங்கராசாரிய சுவாமிகளைத் தரிசிக்கும் பாக்கியம் பெற்றதோடு, தேடிவந்த நிதியிருக்கும் இடத்தையும் கேட்டறிந்தார் பால் பிரண்டன். சாத்திர நூல்களைப் புரட்டிப் படித்தாலும், காடு, மலைகளில் தேடி அலைந்தாலும் கண்ணுக்குப் புலப்படாத சத்தியப் பொருள், குருவருள் துணையிருந்தால் எளிதில் கிட்டும் என்பதைப் பால் பிரண்டனின் அனுபவம் நமக்குத் தெளிவாக உணர்த்துகிறது.

பால் பிரண்டன் ஒரு பத்திரிகையாளர். சிறந்த எழுத்தாளர். ஆன்மிக வாழ்வில் ஆழ்ந்த நாட்டம் கொண்டவர். இந்து சமயத்தின் உன்னத கோட்பாடுகளிலும், நம் வேதாந்த தத்துவங்களிலும் அவருக்குப் பெரும் மதிப்புண்டு. பாரதத்தின் பெருமைக்கோர் எடுத்துக்காட்டாக விளங்கும் மகான்களையும், ஸித்த புருஷர்களையும், யோகிச்வரர்களையும் நேரில் தரிசிக்க வேண்டும் என்ற தணியாத வேட்கையின் காரணமாக 1930-ம் ஆண்டு இந்தியாவிற்கு வந்த அவர், வட நாட்டிலும் தென்னுட்டிலும் பல சாதுக்களையும் யோக மார்க்கத்தில் முன்னேறி யிருந்த பெரியோர்களையும் தரிசித்தார். இருப்பினும் அவருக்கு மனத் திருப்தி ஏற்படவில்லை. தேடி வந்த அமைதி கிட்டவில்லை. சென்னையில் தங்கியிருந்தபோது பிரபல எழுத்தாளர் கே.எஸ். வேங்கடரமணியைச் சந்தித்தார் பால் பிரண்டன். அவரது நன்முயற்சியாலும் பேருதவியாலும் அவருக்கு 'கும்பகோணம் சுவாமிகள்' என்று அப்போது அழைக்கப்பட்டு வந்த ஸ்ரீ ஆசாரிய சுவாமிகளின் தரிசனம் கிடைத்தது.

1931-ம் ஆண்டு சுவாமிகள் செங்கற்பட்டில் முகாமிட்டிருந்தார். அதுவரை வெளிநாட்டினருக்குத் தரிசனமே கொடுத்திராத சுவாமிகள், பெரும் கருணை கொண்டு, பால் பிரண்டனைச் சந்திக்க ஒப்புக் கொண்டார்.

மலர் மாலைகளையும், ஆரஞ்சுப் பழங்களையும் வாங்கிக் கொண்டு சுவாமிகள் தங்கியிருந்த வீட்டிற்குள் வேங்கடரமணியுடன் நுழைந்தார் பால் பிரண்டன். இருள் சூழ்ந்த ஓர் அறையில், மங்கலாக எரிந்த எண்ணெய் விளக்கின் அரை குறை வெளிச்சத்தில் நின்ற சுவாமிகளின் சிறிய தோற்றத்தையும் அப்பொன்னிற மேனியில் பளிச்சிட்ட ஆன்மிக ஒளியையும், கண்களில் தேங்கி நின்ற அருள் வெள்ளத்தையும் கண்டு தம் உள்ளத்தைப் பறி கொடுத்தார் அந்த ஆங்கிலேயர். சுவாமிகளின் பாதங்களில் விழுந்து எழுந்தார். தமக்குத் தரிசனம் தருவதற்கு

ஒப்புக் கொண்டதற்காக அவருக்கு முதலில் நன்றி தெரிவித்துக் கொண்டார். அதைக் கேட்டு சுவாமிகள் புன்முறுவல் பூத்தார்.

பின்னர் அந்தப் பத்திரிகையாளர், உலகத்தின் எதிர்காலத்தைப் பற்றி சுவாமிகளிடம் பல கேள்விகள் கேட்டார். உலக நாடுகள் ஆயுதங் களை உற்பத்தி செய்து கொண்டு ஒன்றை யொன்று அழிப்பதற்குத் தயா ராகிக் கொண்டிருந்த நேரமது. மன நிம்மதியற்று வாழ்ந்த மேல் நாட்டி னர் பகை தீர்ந்து, நல்லெண்ணத்தோடும், நட்புறவோடும் வாழ்வதற்கு ஆன்மிக நெறியைத் தவிர வேறு வழியில்லை என்று சுவாமிகள் எடுத்துக் கூறினர். உலகில் மலிந்து வரும் அக்கிரமங்களைக் காணும் போது, நாம் நம்பிக்கையிழக்க நேரிட்டாலும், கடவுளின் பேரன்பால் மனித குலம் உய்ய வழி பிறக்கும் என்றும், உலகில் துன்பமும், துயரமும் பெருகிக் கொண்டே போகும் போது, தெய்வ சக்தியுடன் திகழும் மனிதர்கள் அவ்வப்போது தோன்றி நல்வழி காட்டுவார்கள் என்றும் கூறியருளினர். மனித சக்திக்கு மீறிய தெய்வ சக்தியொன்று நம்மை யெல்லாம் இயக்கி வைக்கிறது என்று மனிதன் உணரும் போது, உலகில் தற்போது காணும் பல இன்னல்கள் மறைந்து விடும் என்றும் ஸ்ரீ ஆசாரிய சுவாமிகள் பால் பிரண்டனிடம் உரைத்தார்.

பின்னர், தனது பாரதப் பயணத்தின் நோக்கத்தை விளக்கிக் கூறினர் பால் பிரண்டன். பாரதத்தில் அவர் சந்தித்த சாதுக்களையும் யோகிகளை யும் பற்றி விசாரித்தறிந்தார் சுவாமிகள். ஓர் உண்மையான யோகியைத் தரிசித்துப் பயனடைய வேண்டும் என்ற பால் பிரண்டனின் பேராவலைப் புரிந்து கொண்ட சுவாமிகள், ''உங்கள் உள்ளத்தில் ஓர் ஒளி தோன்றத் தொடங்கியிருக்கிறது, அது உங்களுக்கு நிச்சயம் வழிகாட்டும்'' என்ருர்.

சுவாமிகள் கூறியதன் பொருள் பால் பிரண்டனுக்குத் தெளிவாய்ப் புரியவில்லை. தமது எண்ணம் ஈடேறுவதற்கு எந்த மார்க்கத்தைக் கடைப் பிடிக்க வேண்டும் என்று கூறும்படி சுவாமிகளிடம் வினவினர் அவர்.

''தங்கள் பயணத்தைத் தொடருங்கள். இறுதியில் தாங்கள் சந்தித்த யோகிகளையும் மகான்களையும் பற்றி நன்ருகச் சிந்தித்துப் பாருங் கள். அவர்களில் உங்கள் உள்ளத்தை அதிகமாக எவர் கவருகிருரோ, அவரிடமே மீண்டும் செல்லுங்கள். அவர் உங்களுக்கு உபதேசம் செய் தருளுவார்'' என்ருர் சுவாமிகள்.

''ஒருவருமே அப்படி என் உள்ளத்தைக் கவராவிட்டால் நான் என்ன செய்வது?'' என்ற தம் சந்தேகத்தைக் கேட்டார் பால் பிரண்டன்.

''அப்படி யொருவரும் தங்களுக்குக் கிடைக்கா விட்டால், கடவுளே குருவாயிருந்து உபதேசிக்கும் வரையில் தாங்கள் சொந்த முயற்சியில் ஈடுபடுங்கள். தியான முறையை மேற் கொள்ளுங்கள். உள்ளத்தில் அன்பை நிரப்பி, உயரிய நோக்கங்களில் மனத்தைச் செலுத்துங்கள். தங்களது ஆன்மாவைப் பற்றி அடிக்கடி சிந்தனை செய்யுங்கள். தியானம் செய்வதற்கு விடியற்காலையும் சந்தியா காலமும் ஏற்ற நேரங்கள். சுற்றுப் புறமெங்கும் அமைதி தவழும் அச்சமயங்களில் அதிக இடையூறுகளின்றித் தியானம் செய்யலாம்.''

இப்படிக் கூறிவிட்டு அன்பரைக் கருணையோடு பார்த்தார் ஆசாரிய சுவாமிகள். துறவியின் திருவதனத்தில் குடியிருந்த பேரமைதியைக் கண்டார் பால் பிரண்டன். 'பிறரை வீணுகத் தேடியலேவானேன். இவரிடமே சரணுகதியடைந்து விட்டால் என்ன?' என்று மின்னல் போல் பளிச்சென்று அவருக்கு ஒரு யோசனே தோன்றியது. அடுத்த விநாடி சுவாமிகளிடம் அதைப் பற்றிக் கேட்டும் விட்டார்.

''என் சொந்த முயற்சியில் எனக்குப் பலன் கிடைக்கா விட்டால் தங்களிடமே மீண்டும் வரலாமா?''

'அது சாத்தியமில்லே' என்பது போல் சுவாமிகள் லேசாகத் தலேயை அசைத்தார்.

''நான் ஒரு மடாதிபதி. என் நேரத்தை எல்லாம் ஸ்ரீமடத்தின் பணியில் செலவிட வேண்டியவனுயிருக்கிறேன். எனவே, தனிப்பட்ட சீடர்களே ஏற்றுக்கொள்ள எனக்கு அவகாசம் இல்லே. தங்களேப் போன்ற தனிப்பட்ட சீடர்களேக் கவனித்துப் பயிற்சி யளிப்பதற்கேற்ற ஒரு குருவையே தாங்கள் நாடவேண்டும்'' என்று உறுதியாகவும் உள்ளன்போடும் கூறினுர் ஆசாரிய சுவாமிகள்.

''உண்மையான குருவைக் காண்பது அரிதென்கிறுர்களே! அதிலும் என்னேப் போன்ற ஒரு வெள்ளேயன் அவர்களே நெருங்க முடியாது என்று கூறுகிறுர்களே!''—கவலேயோடு மொழிந்தார் பால் பிரண்டன்.

நம்பிக்கையிழந்தவருக்கு நம்பிக்கை பிறக்கும் வகையில் சுவாமிகள் தெளிவாகப் பதில் அளித்தார்:

''உலகில் சத்தியம் நிலவுகிறது. அதை நீங்கள் ஒரு நாள் நிச்சயம் தரிசிக்கலாம்.''

சுவாமிகளின் ஒவ்வொரு வார்த்தையும் பால் பிரண்டனுக்கு மேலும் மேலும் தென்பளித்தது.

''சுவாமி, யோக மார்க்கத்தில் பரிபூரணமாக நிலேத்து, அதன் உண்மை நிலேயை எனக்கு உணர்த்திக் காட்டக் கூடிய ஒரு குருயோகியிடம் என்னே அனுப்பி வைப்பீர்களா?''

சட்டென்று கேட்டு விடுகிறுர் பால் பிரண்டன். தமக்கொரு குருவைக் காட்டும்படி உலக குருவிடம் மன்றுடுகிறுர்.

நீண்ட நேர யோசனேக்குப் பிறகு சுவாமிகள் திருவாய் மலர்ந்தார்.

''நீங்கள் விரும்பும் ஆன்மசாந்தியை அளிக்கவல்ல மகான்கள் எனக்குத் தெரிந்தவரையில் இந்தியாவில் இருவரே உள்ளனர். ஒருவர் காசியில் காடுகளுக்கிடையே வசிக்கிறுர். அவரை நீங்கள் காண முடியாது. இதுவரை வெகு சிலரே அவரைத் தரிசித்திருக்கின்றனர். அவரிடம் உங்களே அனுப்பிப் பயனில்லே. வெளிநாட்டினரை ஏற்றுக் கொள்ள அவர் மறுத்து விடலாம்.......''

கூறி முடிப்பதற்குள் பொறுமையை யிழந்து விடுகிறுர் பால் பிரண்டன்.

''மற்ருெரு மகான் இருப்பதாகக் கூறினீர்களே, அவர் யார்?''

''மற்ருெருவர் தென்னுட்டில்தான் வசிக்கிருர். அவர் உயர்ந்த நிலேயிலிருக்கும் ஒரு மகான். நீங்கள் அவரை நாடிச் சென்ருல் பயனடைய லாம் என்று எனக்குத் தோன்றுகிறது.''

''அவர் யார்?''—ஆர்வத் துடிப்புடன் கேட்கிருர் பால் பிரண்டன்.

''அவரை மகரிஷி என்று அழைப்பார்கள். ஜோதிமலேயான அருணு சலத்தில் அவர் வாசம் செய்கிருர். அம்மலே திருவண்ணுமலே என்ற ஊரில் இருக்கிறது. தேவையானுல் அவருடைய ஆச்ரமத்திற்கு எப்படிச் செல்ல வேண்டும் என்ற விவரங்களே யெல்லாம் கூறுகிறேன்'' என்ருர் சுவாமிகள்.

சத்திய தரிசனம் காட்டியருளவே அவதரித்துள்ள ஆசாரிய சுவாமிகள், அருணுசல சிவனேயடையும்படி ஆங்கிலேய பக்தருக்கு அருளுரை வழங்கினுர். ஆருயிரம் மைல்களுக்கு அப்பாலிருந்து வந்தவரை அன்புத் தெய்வம் ஆட்கொண்டது.

அப்போது பால் பிரண்டனுக்கு, அருணுசலத்தைப் பற்றி முன்பு ஒரு சாது தம்மிடம் கூறியது சட்டென்று நினேவுக்கு வந்தது.

''சுவாமி, தாங்கள் அடியேனிடம் காட்டும் பரிவுக்கு நான் பெரிதும் கடமைப் பட்டிருக்கிறேன். அந்த ஆச்ரமத்தைச் சேர்ந்த ஒரு சாது எனக்கு ஏற்கெனவே அறிமுகமாயிருக்கிருர்.''

''அப்படியானுல் நீங்கள் மறக்காமல் திருவண்ணுமலேக்குப் போகிறீர் களா?''—அன்புடன் விசாரிக்கிருர் சுவாமிகள்.

பால் பிரண்டன் சற்றுத் தயங்கிப் பதில் கூறுகிருர்:

''தென்னகத்தில் என் பயணம் முடிந்து விட்டது. நாளே நான் சென்னேயிலிருந்து புறப்படுவதற்கான ஏற்பாடுகள் பூர்த்தியாகிவிட்டன'' என்று இழுத்தார் அவர்.

''அப்படியானுல் உங்கள் பயணத் திட்டங்களே மாற்றிக் கொள் ளுங்கள். மகரிஷியைத் தரிசிக்காமல் நீங்கள் தென்னுட்டை விட்டுச் செல்லக் கூடாது.''

இந்த அன்புக் கட்டளேயை மறுக்க முடியாமல் திணறினுர் பால் பிரண்டன். சுவாமிகள் கோரியபடியே வாக்குறுதியும் அளித்தார்.

விடை பெற்றுச் செல்லும் போது சுவாமிகள், பால் பிரண்டனிடம் ''நீங்கள் வீணுகக் கவலேப்பட வேண்டாம். நீங்கள் தேடி வந்ததை நிச்சயமாகக் கண்டு பிடிப்பீர்கள்'' என்று ஆசி வழங்கி அனுப்பினுர்.

அன்று நடுநிசியில் சென்னேக்குத் திரும்பிய பால் பிரண்டன், தமது விடுதிக்குள் நுழைந்தார். என்ன ஆச்சரியம்? சற்றும் எதிர்பாராதவகை யில் சுப்பிரமணியம் என்ற சாது அங்கு அவருக்காகக் காத்திருந்தார். பால் பிரண்டனேத் திருவண்ணுமலேக்கு அழைத்துச் செல்லவே அன்று அவர் வந்து காத்திருந்தார். ஒரு மாபெரும் சக்தியின் திட்டத்திற்குட் பட்டு நடைபெறும் நிகழ்ச்சிகளேப் பற்றி மனத்திற்குள் வியந்து கொண்டே படுக்கச் சென்ருர் பால் பிரண்டன்.

நன்ருக உறங்கிக் கொண்டிருந்தவர் திடீரென்று விழித்துக் கொண்டார். அறையெங்கும் இருள் கப்பி யிருந்தது. அவரது நரம்புகளெல்லாம் புடைத்துக் கொண்டன. மின்சாரச் சூழலில் சிக்கியது போன்ற ஓர் உணர்ச்சி மேலிட்டது. உடனே தலையணைக்கடியிலிருந்து கடிகாரத்தை எடுத்து மணியைப் பார்த்தார். இரண்டே முக்கால் ஆகியிருந்தது. அப்போதுதான் தன்னுடைய கால்மாட்டில் ஒரு பேரொளி பளிச்சிட்டதைக் கண்டார் அவர். உடனே எழுந்து உட்கார்ந்து அதையே உற்று நோக்கினர்.

அந்த ஒளிப் பிழம்பில், காலையில் அவர் தரிசித்த ஆசாரிய சுவாமிகளின் தோற்றம் மின்னியது. சந்தேகத்திற்கு இடமின்றி மிகத் தெளிவாகத் தெரிந்தது. அது ஆவியுருவாகத் தோன்றவில்லை. நேரில் பார்ப்பது போலவே, முழு மனித உருவிலேயே காட்சி தந்தார் சுவாமிகள்.

அவரது திருமேனியைச் சுற்றிலும் ஒரு பேரொளி படர்ந்திருந்தது. அந்த ஒளி,அறையில் கவிந்திருந்த இருளிலிருந்து சுவாமிகளின் உருவத்தை தனியே பிரித்துக் காட்டியது.

வியப்பு மேலிட்ட பால் பிரண்டனுக்கு வியர்த்துக் கொட்டியது. ''நம்ப முடியாத காட்சியாக இருக்கிறதே! சுவாமிகள் எப்படி இங்கே வர முடியும்? அவர் செங்கற்பட்டிலல்லவா இருக்கிருர்.''—உண்மை நிலையைப் பரிசோதிப்பதற்காகக் கண்களை இறுக மூடிக் கொண்டார் அவர். அப்போதும் சுவாமிகளின் தோற்றம் அவர் கண்களிலிருந்து மறையவில்லை.

அன்புத் தெய்வம் தனக்கு நேரில் காட்சி தந்ததாகவே நினைத்தார் பால் பிரண்டன். கண்களைத் திறந்து பார்த்த போது, சுவாமிகளின் புன்னகை தவழும் உதடுகள் மெள்ள அசைவது தெரிந்தது.

''அடக்கத்துடனும் எளிமையுடனும் இரு. நீ தேடுவது உனக்குக் கிட்டும்.''

ஆவி பேசவில்லை. சுவாமிகளே நேரில் வந்து பேசினர். பால் பிரண்டனுக்கு அப்படித்தான் தோன்றியது.

அடுத்த கணம் அந்தத் தெய்விகத் தோற்றம் மறைந்து விட்டது. அந்த அசாதாரணக் காட்சியைக் கண்டு கலங்கவில்லை பால் பிரண்டன். மாருக மகிழ்ச்சியில் திளைத்தார்.

விழித்துக் கொண்டவர் அதற்குப் பிறகு தூங்கவேயில்லை.

**சா**து சுப்பிரமணியத்துடன் அருணசலத்திற்குப் புறப்பட்டுச் சென்ருர் பால் பிரண்டன். திருவண்ணுமலை ரயில் நிலையத்திலிருந்தே புனித மலையைத் தரிசித்தார். அதன் சிகரம் பனி மூட்டத்தில் மறைக்கப் பட்டிருந்தது. அந்த ரம்மியமான காட்சியை ரசித்துக் கொண்டே, மாட்டு வண்டியில் ஆமை வேகத்தில் நகர்ந்து கொண்டிருந்தார் அந்த ஆங்கிலேயர். மாமலையை நெருங்க நெருங்க, அதன்

அசாதாரணத் தோற்றமும் கம்பீர எழிலும் தெய்விக வனப்பும் அவர் உள்ளத்தில் ஆயிரம் எண்ணங்களைத் தோற்றுவித்துக் கொண்டிருந்தன.

வண்டி ரமணாச்ரமத்திற்குள் நுழைந்தது. மலையைப் பின்னணித் திரையாகக் கொண்டு, மரங்களின் நிழலில், அமைதியான சூழலில் அமைந் திருந்த அந்த ஆடம்பரமற்ற ஆச்ரமம் பால் பிரண்டனை நேசத்தோடு வரவேற்றது. சாது சுப்பிரமணியம் அழைத்துச் செல்ல, மகரிஷி வீற்றி ருந்த அறைக்குள் நுழைந்தார் அவர். அங்கு அமர்ந்திருந்த இருபது நபர்கள், 'உள்ளே வருவது யார்?' என்றறியும் ஆவலில் வாயிற்புறம் திரும்பிப் பார்த்தனர்.

ஒரு மூலையில், பெஞ்சின் மீது அசையாமல் அமர்ந்திருக்கிறார் மகரிஷி. அறையில் சாம்பிராணி புகை, சூழ்ந்திருக்கிறது. ஊதுவத்தியின் நறுமணம் 'கம்'மென்று வீசுகிறது. அறையில் இருந்த ஒருவரையும் அவர் கவனிப்ப தாகத் தோன்றவில்லை. ஜன்னலுக்கு வெளியே தமது பார்வையைச் செலுத்தி, எங்கோ, எதையோ பார்த்துக் கொண்டிருந்தார் அவர். தம் பக்கம் அவரது கவனத்தைத் திருப்பும் நோக்கத்துடன், தாம் கொண்டு வந்திருந்த பழங்களை மகரிஷியின் அருகே வைத்து விட்டு, பின்னாலேயே மெள்ள நடந்து வந்து, எதிரில் அமர்ந்தார் பால் பிரண்டன். மகரிஷி தமது பக்கம் திரும்பி விசாரிப்பார் என்று எதிர்பார்த்துக் காத்துக் கொண்டிருந்தார் அவர்.

ஆனால், புதிதாக அந்த அறையினுள் ஒருவர் நுழைந்ததை மகரிஷி கவனித்ததாகவே தெரியவில்லை. அவர் லேசாகக் கூட தலையைத் திருப்ப வில்லை. கண்ணின் மணிகள் கூட அசையவில்லை. அவர் கற்சிலையாக அமர்ந்திருந்தார். அந்த உருவத்தை, அந்த அகன்ற நெற்றியை, ஒளி நிறைந்த கண்களை, வைத்த கண் வாங்காமல் பார்த்துக் கொண்டிருந் தார் பால் பிரண்டன். நீண்ட கரங்களையும் கால்களையும் பார்த்து, 'இவர் எழுந்து நின்றால் நல்ல உயரம் இருப்பார்' என்று தமக்குள் எண்ணிக் கொண்டார்.

அந்த அறையில் பேரமைதி குடிகொண்டிருந்தது. ஒரு குண்டூசி விழுந்தால் கூட சப்தம் கேட்டிருக்கும். சீடர் ஒருவர் 'பங்கா' இழுக்கும் சப்தம் மட்டும் கேட்கிறது. பால் பிரண்டன் மகரிஷியின் கண்களையே பார்த்துக் கொண்டிருக்கிறார். 'இந்தப் பக்கம் திரும்பி ஒரு முறை நம்மைப் பார்க்க மாட்டாரா?' என்ற கொள்ளை ஏக்கம் அவருக்கு.

அறையில் இருந்த கடிகாரம் ஓடிக்கொண்டிருந்தது. அரை மணியாயிற்று; ஒரு மணியாயிற்று. அங்கு இருந்தவர்கள் அத்தனை பேரும் ஒரு வார்த்தை கூடப் பேசாமல் அமர்ந்திருந்தார்கள். மகரிஷி யும் அப்படியே யிருந்தார். அவர் எதிரில் வைக்கப்பட்ட பழங்கள் அப்படியே யிருந்தன. பால் பிரண்டன் மகரிஷியின் முகத்தையே பார்த்துக் கொண்டிருந்தார். ஆழ்ந்த மௌனத்தில் நிலைத்திருந்த மகரிஷி மட்டுமே தற்போது பால் பிரண்டனின் கண்களுக்குத் தெரிந்தார்.

தமக்கு இப்படியோர் 'அலட்சிய வரவேற்பு' கிடைக்கும் என்று பால் பிரண்டன் அங்கு வரும் போது சற்றும் எதிர்பார்க்கவில்லை. எதையோ எதிர்பார்த்து வந்தவருக்கு இந்தச் சூழ்நிலை பெரும் ஏமாற்ற மாக இருந்தது. 'இந்த மனிதர் தமது பக்தர்களுக்காக இப்படியொரு வேஷம் போடுகிறாரோ!' என்று கூட அவர் முதலில் எண்ணினார்.

ஆனால், நேரம் ஆக ஆக மகரிஷி காந்தமாகத் தம்மை வசீகரித்ததை உணர்ந்தார் பால் பிரண்டன். அவரிடமிருந்து தமது பார்வையை வேறு திசையில் திருப்பவே முடியவில்லை என்பதை உணர்ந்தார். தம்மை இவர் ஏன் இத்தனை அலட்சியப்படுத்துகிறார் என்று முதலில் புரியாமல் தவித்தவர், அந்த எண்ணத்திலிருந்து மெள்ள மெள்ள விடுபட்டார். தம்மையுமறியாமல் மனத்திற்குள் ஏற்பட்டு வரும் மாற்றத்தை அவரால் உணர முடிந்தது. ரயிலில் வரும் போது, மகரிஷியிடம் கேட்க வேண்டும் என்று அவர் தீர்மானித்து வைத்திருந்த கேள்விகள் அவர் மனத்தி லிருந்து ஒவ்வொன்றாக மறையத் தொடங்கின.

அந்தக் கேள்விகளுக்கெல்லாம் இனி அவசியம் இருப்பதாகவே அவருக்குத் தோன்றவில்லை. தம் மனத்தை வாட்டி வரும் பிரச்னைகளைத் தீர்க்க வேண்டும் என்ற எண்ணம் கூட இப்போது இல்லை. தம் அருகில் அமைதியான ஆறு ஒன்று ஓடுவதுபோலத் தோன்றியது அவருக்கு. ஆழ்ந்த அமைதி தம்முள் புகுந்து உடலெங்கும் பரவுவது போல சிலிர்ப்பு மேலிட்டது. எண்ண அலைகளால் தாக்குண்ட தம் மூளை கொதிப் படைந்து, பின்னர் சற்று அடங்கி, ஓய்வு பெறுவது போல் உணர்ந்தார்.

இதுவரை தம் மனத்தில் எழுந்த கேள்விகளெல்லாம் அர்த்தமற் றவை போல் தோன்றியது அவருக்கு. தம் புத்தி தேவையற்ற பிரச்னை களைக் கிளப்பி, அவற்றைத் தீர்க்கும் முயற்சியில் தம் மனத்தை மேலும் குழப்பிக் கொண்டு திண்டாடுவதாக அப்போது அவருக்கு ஒரு புதிய எண்ணம் பளிச்சிட்டது.

இரண்டு மணி நேரம் இப்படி யோர் அபூர்வமான மனநிலையில் அமர்ந்திருந்தார் பால் பிரண்டன். மனத்தில் உருவாகியிருந்த பழைய சந்தேகங்களெல்லாம் தவிடு பொடி யாகி விட்டிருந்தன. புதிய சந்தேகம் ஒன்று மெள்ளத் தலை தூக்கியது.

'மலர், செடியிலிருந்தவாறே எங்கும் நறுமணத்தை வீசுவது போல், அமர்ந்த இடத்திலிருந்தே மகரிஷி ஆன்ம சாந்தியை உலக மெங்கும் பரப்புகிறாரோ?'

ஸ்ரீ ரமண மகரிஷி



பால் பிரண்டனுக்கு ஆச்சரியம் தாங்க முடியவில்லை. 'மகரிஷியோ நான் வந்திருப்பதைப் பற்றி அக்கறை செலுத்தவேயில்லை. என் பக்கம் கூட திரும்பிப் பார்க்கவில்லை. அப்படியிருக்கும் போது அவர் எப்படி அல்லலுற்ற என் மனத்திற்கு அமைதியைத் தேடித் தந்தார்? சந்தேக மில்லை. மகரிஷியின் ஆன்மாவிலிருந்து புறப்பட்ட கதிரியக்க அணுக்கள் என்னுள் புகுந்து இம் மாபெரும் மாற்றத்தைத் தோற்றுவித்திருக் கின்றன' என்று அவர் தமக்குள் எண்ணிக் கொண்டார்.

சலனமற்ற, சாந்தியெனும் தெளிந்த நீரோடையை அருகிலிருந்த யாரோ ஒருவர் கலக்கினார்:

''மகரிஷியினிடம் நீங்கள் கேள்வியொன்றும் கேட்கவில்லையா?''

அன்பரின் கேள்வி பால் பிரண்டனை நினைவுலகிற்கு அழைத்துவந்தது.

நிறைய கேள்விகள் கேட்க வேண்டும் என்றுதான் வந்தேன். ஆனால், தற்போது சந்தேகங்களற்ற பேரமைதியில் திளைத்துக் கொண்டிருக்கிறேன். என் ஆன்மா என்ற கப்பல், அமைதியான கடலில் தன் பேரின்பப் பயணத்தைத் தொடங்கி யிருக்கிறது. அதை உலக விவகாரம் என்ற துறைமுகத்திற்கு மீண்டும் ஏன் அழைத்து வருகிறீர்கள்?'—அவர் உள்ளத்தில் இப்படியொரு கேள்வி எழுந்தது. ஆனால், அதை அந்த நபரிடம் கேட்கவில்லை.

அன்பரின் பேச்சு, அறையில் நிலவிய அமைதியைக் கலைக்கவே, தியானம் முடிந்து ஒவ்வொருவராக எழுந்து செல்லத் தொடங்கினர். எங்கும் பேச்சரவம் கேட்டது. என்ன ஆச்சரியம்! மகரிஷியின் இமைகள் கூட அசைந்தன. அவர் தலையும் லேசாக அசைந்தது. அவர் தமது முகத்தை மெள்ளத் திருப்பினார். மகரிஷியின் பார்வை தம் மீது படியாதா என்ற ஆர்வத்தில் பால் பிரண்டன் அவரையே உற்றுப் பார்த்துக் கொண்டிருந்தார். மகரிஷியின் தலை சற்றுத் திரும்பியது. அவரது பார்வை படர்ந்த எல்லைக்குள் பால் பிரண்டனின் முகம் தெரியவே, மகரிஷியின் அருள் நோக்கு அவர் மீது படிந்தது. ஆயிரம் நிலவுகளின் தண்ணொளியில் மூழ்கி எழுந்த உணர்வு பெற்றார் பால் பிரண்டன். அவர் உள்ளமும் உடலும் குளிர்ந்தன.

அன்பர், பால் பிரண்டனிடம் ''ஏதாவது சந்தேகம் இருந்தால் கேளுங்கள்'' என்று மீண்டும் கூறினார்.

பால் பிரண்டன் மகரிஷியைப் பார்க்கிறார். ''எல்லையற்ற மனச்

ஸ்ரீ காஞ்சி மாமுனிவர்



சாந்தியை அனுபவித்த உனக்கு இன்னுமா சந்தேகங்கள் இருக்கின்றன?'' என்று மகரிஷி கேட்பது போல் தோன்றுகிறது அவருக்கு.

அந்த அன்பரைப் பார்த்து, ''இப்போது எதுவுமே கேட்க வேண்டும் என்று எனக்குத் தோன்றவில்லை. பிறகு பார்க்கலாம்'' என்று கூறிவிட்டு அங்கிருந்து எழுந்து விட்டார் பால் பிரண்டன்.

பகல் உணவுக்குப் பிறகு தரிசனத்திற்காக வந்திருந்தவர்கள் எல்லோரும் களைப்புத் திர படுக்கச் சென்று விட்டனர். மகரிஷியைத் தனிமையில் காண இதுவே தருணம் என்று எண்ணிய பால் பிரண்டன், தரிசன அறைக்குள் நுழைந்தார். அப்போது பகவான் ரமணர், ஏதோ ஒரு நோட்டுப் புத்தகத்தைக் கையில் வைத்துக் கொண்டு, திண்டின் மீது சாய்ந்தவாறு அதைத் திருத்திக் கொண்டிருந்தார். பால் பிரண்டன் அவர் அருகில் சென்று, வணங்கி விட்டு எதிரில் அமர்ந்தார். சற்றைக் கெல்லாம், நோட்டுப் புத்தகத்தை மூடிப் பக்கத்தில் வைத்து விட்டு, அருகிலிருந்த சீடரிடம் தமிழில் ஏதோ பேசினர் மகரிஷி. சீடர் அதை மொழி பெயர்த்த போது, மனம் நெகிழ்ந்து போனர் பால் பிரண்டன்.

ஆச்ரமத்தின் உணவை அவர் சாப்பிட முடியாமல் போனதற்குத் தாம் வருந்துவதாகவும், அங்கு வெளி நாட்டினருக்காக சமைத்துப் பழக்கமில்லாததால் அவருக்குத் தேவையான உணவைத் தயாரிக்க முடியவில்லை யென்றும் மகரிஷி கூறினர். அதைக் கேட்ட பால் பிரண்டன், ''அதனுல் பரவாயில்லை சுவாமி. எதையாவது சாப்பிட்டு விட்டுப் போகிறேன். நான் எதை நாடித் தங்களிடம் வந்தேனே, அதைத்தான் மிக முக்கியமானதாக நான் கருதுகிறேன். என் சாப்பாட்டை அல்ல'' என்று பணிவுடன் கூறினர்.

அதைக் கேட்ட மகரிஷி, ''நல்ல காரியம்'' என்று மட்டும் கூறிவிட்டு மௌனமாக இருந்து விட்டார்.

சற்று தைரியம் வரவே, பால் பிரண்டன் மேலும் தொடர்ந்தார்:

''சுவாமி, நான் மேல்நாட்டு ஆன்மிக தத்துவ போதனைகளையும், விஞ்ஞான ஆராய்ச்சிகளையும் படித்தறிந்திருக்கிறேன். நெரிசல் மிக்க நகரங்களில், மக்களோடு நெருங்கிப் பழகி, வாழ்ந்து, உழைத்து உழன்றிருக்கிறேன். அவர்கள் பங்கு கொள்ளும் இன்பக் கேளிக்கைகளில் திளைத்திருக்கிறேன். சில சமயங்களில் தனிமையை நாடிச் சென்று, ஆழ்ந்த சிந்தனையில் லயித்திருக்கிறேன். மேல் நாட்டு ஞானிகளைச் சந்தித்து உரையாடியிருக்கிறேன். தற்போது கிழக்குத் திசை நோக்கி, மனத் தெளிவும் ஒளியும் தேடி வந்திருக்கிறேன்.''

'உன் நோக்கம் எனக்குப் புரிகிறது' என்பது போல் மகரிஷி தலையை அசைக்கிறார்.

பால் பிரண்டன் தொடர்ந்து கூறுகிறார்:

''சுவாமி, பலவிதமான அபிப்பிராயங்களையும் சமயக் கருத்துக்களையும் நான் கேட்டறிந்துள்ளேன். ஆனல், சொந்த அனுபவத்தால்

உணர்ந்து கொள்ள முடியாதவற்றை என் புத்தி ஏற்றுக் கொள்ள மறுக்கிறது. நான் மதவாதியல்ல. மனிதனின் அன்றாட உலக வாழ்க்கைக்கு அப்பால் ஏதாவது இருக்கிறதா? அப்படியொன்று இருக்குமானால், அதை நானே அறிந்து, தெளிந்து, உணர முடியுமா?''

இதற்கு மகரிஷி பதில் கூறவில்லை. அவர் ஏதோ ஒரு யோசனையில் ஆழ்ந்து விட்டதாகத் தோன்றியது பால் பிரண்டனுக்கு. இத்தனை ஆண்டுகளாக மனத்தில் தேக்கி வைத்திருந்தவற்றையெல்லாம் கொட்டி விட வேண்டும் என்று தோன்றவே மீண்டும் பேசினார் அவர்:

''மேல் நாட்டுப் பேரறிஞர்களான விஞ்ஞானிகளை நாங்கள் பெரிதும் கௌரவிக்கிறோம். ஆனால், அவர்கள் கூட, மனித வாழ்வுக்கு அப்பாலுள்ள பேருண்மையைப் பற்றி ஒன்றுமே கூற முடியாத நிலையில் இருப்பதை ஒப்புக் கொள்கிறார்கள். மேல் நாட்டு ஞானிகளுக்குப் புலப்படாத உண்மைகளை எடுத்துக் கூறும் அருள் பெற்ற மகான்கள் பாரத நாட்டில் இருப்பதாகச் சொல்கிறார்களே! அது நிஜமா? உண்மையை உணர்ந்து விளக்கம் பெற தாங்கள் எனக்கு உதவ முடியுமா? அல்லது உண்மையை நாடிச் செல்வதே ஒரு மாயத் தோற்றந்தானா?''

கேட்க வேண்டியதையெல்லாம் கேட்டு முடித்து விட்டு மகரிஷியின் பதிலுக்காகக் காத்திருந்தார் பால் பிரண்டன். பத்து நிமிடங்கள் அவரையே பார்த்துக் கொண்டிருந்த மகரிஷியின் உதடுகள் லேசாக அசைந்தன. மொழி பெயர்ப்பாளரின் உதவியை நாடாமல் ஆங்கிலத்திலேயே, நேரிடையாகவே கேட்டார் மகரிஷி:

'''நான்' என்றும், 'எனக்குத் தெரிய வேண்டும்' என்றும் நீ கூறுகிறாயே, அந்த 'நான்' என்பது யார் என்று சொல் பார்க்கலாம்?''

மகரிஷியின் கேள்வி, பால் பிரண்டனுக்குப் புரியவில்லை.

''தங்கள் கேள்வி எனக்குப் புரியவில்லை'' என்று தைரியமாகக் கூறினார் பால் பிரண்டன்.

''புரியவில்லையா? நன்றாகச் சிந்தித்துப் பார்.''

சற்று நேரம் யோசித்து விட்டு, விரலால் தன்னைச் சுட்டிக் காட்டி ''நான் பால் பிரண்டன்'' என்றார் அவர்.

''அவரை உனக்குத் தெரியுமா?''

''பிறந்தது முதல் தெரியும்'' என்று பதிலளித்தார் பால் பிரண்டன் சிரித்துக் கொண்டே.

''ஆனால், நீ உன் உடலைத்தானே 'நான்' என்று கூறுகிறாய். மறுபடியும் கேட்கிறேன் சொல்: 'நீ யார்?' ''

இந்த நூதனமான கேள்விக்கு பால் பிரண்டனால் சட்டென்று பதில் கூற முடியவில்லை. விழித்தார்.

''அந்த 'நான்' யார் என்பதை முதலில் அறிந்து கொள். பின்னர் உனக்கு உண்மை புலப்படும்.''—மகரிஷி நிதானமாகக் கூறினார்.

பால் பிரண்டனின் மனம் குழம்பியது. திக்குமுக்காடிப் போனுர். தன் மன நிலையை மகரிஷியிடம் ஒளிவு மறைவின்றிக் கூறினுர்.

இப்போது தமிழில் பேசினுர் மகரிஷி.

''ஒருவழிதான் இருக்கிறது. உட்புறம் மனத்தைத் திருப்பி, உன்னைப் பற்றியே சிந்தனை செய். அதைச் சரியான முறையில் செய்தால், உன் கேள்விகளுக்கெல்லாம் விடை கிடைத்து விடும். உன் சந்தேகங்களெல்லாம் தீர்ந்து விடும்.''

இந்த உபதேசம் பால் பிரண்டனை மேலும் குழப்பியது.

''சுவாமி, நான் என்ன செய்ய வேண்டும் என்று சொல்லுங்கள். எந்த முறையை நான் பின்பற்ற வேண்டும்?''

''உன்னுடைய உண்மையான தன்மையைப் பற்றி நீ சிந்தித்து, இடைவிடாத தியானத்தில் ஆழ்ந்திருந்தால் சத்திய ஒளியைத் தரிசிக்கலாம்.''

''சுவாமி, உண்மைப் பொருளைக் குறித்து நான் அடிக்கடி சிரத்தையுடன் தியானித்து வருகிறேன். அப்படியிருந்தும் ஆன்ம விசாரத்தில் நான் முன்னேறியதாகவே தெரியவில்லை.''

''முன்னேற்றமேயடையவில்லை என்று உனக்கு எப்படித் தெரியும்? ஆன்மிகத் துறையில் முன்னேறி யிருக்கிறேமா, இல்லையா என்பதைக் கண்டு பிடிப்பது எளிதான காரியமல்ல.''

''அதற்கு குருவின் துணை அவசியமா?''

''தேவைப்படலாம்.''

''தாங்கள் கூறுவது போல் நம்மைப் பற்றி உணர்ந்து கொள்ள குரு நமக்கு உதவ முடியுமா?''

''ஆன்ம விசாரணை செய்ய குருவால் உனக்கு உதவ முடியும். ஆனுல், சொந்த அனுபவத்தின் மூலம்தான் ஆன்ம ஒளி பெற முடியும்.''

''குருவின் துணையோடு ஆன்ம விசாரணையில் சிறிது முன்னேற எத்தனை காலம் பிடிக்கும்?''

''அது சாதகனின் மனப் பக்குவத்தைப் பொறுத்த விஷயம். வெடி மருந்து சீக்கிரம் பற்றிக் கொள்ளுகிறது. அடுப்புக் கரியில் தீப் பிடிக்க சிறிது நேரம் ஆகிறது.''

ஆன்ம விசாரத்தைப்பற்றி இந்த விளக்கத்திற்கு மேல் மகரிஷி வேறு எதுவுமே பேசாமல் இருந்து விட்டதால், பால் பிரண்டன் பொதுவாகச் சில கேள்விகள் கேட்கத் தொடங்கினுர்:

''சுவாமி, நாங்கள் மிகவும் நெருக்கடியான காலத்தில் வாழ்கிறேம். உலகின் எதிர்காலம் எப்படி யிருக்கும் என்று தாங்கள் அபிப்பிராயம் கூற முடியுமா?'' என்று கேட்டார் பால் பிரண்டன்.

''நீ எதிர்காலத்தைப் பற்றி ஏன் கவலைப்பட வேண்டும்? இப்போது என்ன நடக்கிறது என்பதே உனக்கு சரியாகத் தெரியாதே. நிகழ்காலத்தைப் பற்றி முதலில் கவனி. எதிர்காலம் தன்னால் சரியாகி விடும்.''

பால் பிரண்டன் விடுவதாக இல்லை: ''சுவாமி, உலகத்தில் நட்புறவும் நல்லெண்ணமும் மேலோங்கி சமாதானம் நிலைக்குமா? அல்லது, மனித குலம் போரில் குதித்து அழிவுப் பாதையை நோக்கிப் போகுமா?''

இந்தக் கேள்வி மகரிஷிக்குப் பிடிக்கவில்லை. இருந்தும் கருணையோடு பதில் சொன்னார்:

''இந்த உலகத்தை ஒருவன் ஆள்கிறான். உலகத்தைக் கவனித்துக் கொள்வது அவன் வேலை. இந்த உலகத்தை உண்டாக்கியவன் அதைக் காப்பாற்றும் பாரத்தையும் ஏற்றுக் கொள்கிறான். நீ அல்ல.''

சில நாட்களுக்கு முன் செங்கற்பட்டில் ஸ்ரீ காமகோடி ஆசாரிய சுவாமிகள், ''உலகத்தில் தன்னை மீறிய தெய்வ சக்தி ஒன்று இயங்குகிறது என்று மனிதன் உணர்ந்து விட்டால் உலகில் பாதிப் பிரச்னைகள் மறைந்து விடும்'' என்று பால் பிரண்டனுக்குக் கூறிய அறிவுரைக்கும், மகரிஷியின் அருள் வாக்குக்கும் தான் எத்தனை ஒற்றுமை!

''உலகத்தில் நடைபெறும் நிகழ்ச்சிகளைக் காணும் போது அப்படியொரு அன்புச் சக்தி இருக்கிறதா என்பதே சந்தேகமாக இருக்கிறது'' என்று பால் பிரண்டன் மறுத்துக் கூறினார்.

அதற்கும் பதில் கூறினார் மகரிஷி:

''நீ எப்படி யிருக்கிறாயோ, அப்படித்தான் இருக்கும் நீ வாழும் உலகமும். உன்னைப் புரிந்து கொள்ளாமல் உலகத்தைப் புரிந்து கொள்ள முயலுவதில் அர்த்தமேயில்லை. இம் மாதிரி பிரச்னைகளைப் பற்றி தத்துவ விசாரணை செய்வதால் நேரம்தான் வீணாகும். முதலில் நம்மைப் பற்றிய உண்மையை அறிந்து கொண்டால், உலகத்தைப் பற்றிய உண்மை எளிதாகப் புரிந்து விடும். நாம் வேறு, உலகம் வேறு அல்ல.''

அப்போது அன்பர் ஒருவர் ஊதுவத்தி யொன்றை ஏற்றினார். அதன் நீலப் புகை, மேலே எழும்பி சுழன்று சுழன்று செல்வதைக் கவனித்துக் கொண்டே, நோட்டுப் புத்தகத்தை மீண்டும் கையிலெடுக்கிறார் பகவான். குறிப்பிட்ட பக்கத்தைப் புரட்டி, திருத்த ஆரம்பிக்கிறார்.

அங்கிருந்து செல்வதற்குத் தமக்கு உத்தரவு கிடைத்து விட்டதை உணர்ந்த பால் பிரண்டன் அறையிலிருந்து புறப்படுகிறார்.

மகரிஷியிடம் நெருங்கிப் பேச வேண்டும் என்று பால் பிரண்டன் பல முறை முயன்றார். ஆனால், முடியவில்லை. இரண்டு நாட்கள் தங்குவதற்காக ஆச்ரமத்திற்கு வந்தவர், இரண்டு வாரங்கள் இருந்து விட்டார். பகவான் ரமணர் மௌனத்தாலேயே அவரது வாழ்வில் மகத்தான மலர்ச்சியை உண்டு பண்ணி விட்டதை உணர்ந்த போதிலும், அவருடன் மீண்டும் ஒரு முறை பேசி விட வேண்டும் என்ற தணியாத வேட்கைக்கு ஆளானார் பால் பிரண்டன். வயதான ஆச்ரமவாசி ஒருவரிடம் தம்

விருப்பத்தை வெளியிட்டார். அவர் பகவானிடம் சென்று முறை யிட்டார்.

கருணைக் கடலான பகவான், பால் பிரண்டனிடம் மீண்டும் பேசு வதற்கு ஒப்புக் கொண்டார். இதை அறிந்ததும், தரிசன அறைக்குச் சென்று, மகரிஷியின் எதிரில் போய் அமர்ந்தார் பால் பிரண்டன். திருவதனத்தில் மந்தஹாசம் தவழ, பகவான் அன்பரை அன்புடன் வரவேற்றார். முதற் கேள்வியைக் கேட்டார் பால் பிரண்டன்:

''உண்மைப் பொருளைத் தரிசிக்க வேண்டுமென்றால், உலக வாழ்க் கையை விட்டு விட்டு, காடுகளையும் மலைகளையும் தேடிச் செல்ல வேண்டும் என்று யோகிகள் சொல்கிறார்கள். எங்களது வாழ்க்கை முறை முற்றிலும் மாறுபட்டிருப்பதால் மேலை நாடுகளில் இவ்விதம் செய்வது சாத்திய மில்லையே. யோகிகள் கூறுவதைத் தாங்கள் ஒப்புக் கொள்கிறீர்களா?''

மகரிஷி கூறிய பதிலை ஒரு சீடர் மொழி பெயர்க்கிறார்:

''நம் வாழ்க்கை முறையை நாம் துறக்க வேண்டியதில்லை. தினமும் ஒரு மணி நேரமோ, இரண்டு மணி நேரமோ தியானம் செய்தால் போதும். அன்றாட அலுவல்களில் ஈடுபட்டாலும் சரியான முறையில், தவறாமல் தியானம் செய்து வந்தால், அதனால் ஏற்படும் மனப் பக்குவம், இதர பணிகள் புரிவதற்கும் நமக்குப் பெரும் உதவியாயிருக்கும்.''

''அதனால் என்ன பலன் ஏற்படும்?''

''நாள் ஆக ஆக, பிறரிடம் பழகும் தன்மையில் நீயே ஒரு மாறுதலைக் காண்பாய். தியானத்தினால் ஏற்படும் உள்ளமைதி, உன்னையறியாம லேயே உன் நடவடிக்கைகளில் பிரதிபலிப்பதை உணருவாய்.''

''அப்படியானால் யோகிகள் கூறுவது போல் மலை, காடுகளைத் தேடிச் செல்ல வேண்டாம் என்கிறீர்களா?''

மீண்டும் வற்புறுத்திக் கேட்கிறார் பால் பிரண்டன். இதற்கு பகவான் நேரிடையாகப் பதில் கூறவில்லை.

''மனிதன் உலகத்துடன் தன்னைப் பிணைக்கும் பந்த பாசங்களை விட்டு விட வேண்டும். 'நான்' 'எனது' என்ற தவறான பாச உணர்வுகளை மனத்திலிருந்து அகற்றி விடுவதே உண்மையான துறவு நிலையாகும்.''

சந்நியாச யோகத்தின் மேன்மையை சாதாரண மொழியில் எடுத்துக் கூறுகிறார் மகரிஷி. பால் பிரண்டனுக்குப் புதிய சந்தேகம் ஒன்று தோன்று கிறது.

''சம்சார பந்தத்தில் சிக்கியிருப்பவன் தன்னை மறந்தும், சொந்த பந்தங்களைத் துறந்தும் வாழ முடியுமா?''

''அன்றாட அலுவல்களில் ஈடுபடும் கர்ம மார்க்கமும், விவேகமுடன் வாழும் ஞான மார்க்கமும் ஒன்றுக்கொன்று முரணானவை யல்ல. உலக வாழ்க்கையில் தன்னை ஈடுபடுத்திக் கொண்டே ஒருவன் ஞானியாகவும் இருக்கலாம்.''

''அதாவது ஒருவன் தன் உத்தியோக சம்பந்தமான அலுவல்கள் எதையுமே விடாமல் ஆன்ம ஞானம் பெற முடியும் என்று தாங்கள் கூறுகிறீர்களா?''

''ஆமாம்! அந் நிலையில் 'நாம்' செய்கிறோம் என்ற எண்ணம் கொஞ்சம் கொஞ்சமாக மறைந்து, 'அது'வாகிய உண்மைப் பொருளோடு மனம் லயித்து விடும்.''

''நாம் எப்போதும் ஏதாவது ஒரு வேலையில் ஈடுபட்டிருப்பதால், தியானம் செய்ய நேரம் கிடைப்பது கடினமாயிற்றே.''



மகரிஷியின் மலரடிகளில் பால் பிரண்டன்

''ஆன்மிகத் துறையில் புதிதாக ஈடுபட்டிருப்பவன்தான் தியானம் செய்வதற்கென்று தனியாக நேரம் ஒதுக்க வேண்டும். பயிற்சி பெறப் பெற, வேலை செய்தாலும் செய்யா விட்டாலும் அவன் எப்போதும் ஆழ்ந்த அமைதியிலும் பேரானந்தத்திலும் மூழ்கி யிருப்பான். சமுதாயத்தில் ஒருவனாக உலகில் வாழ்ந்து கொண்டிருந்தாலும் அவன் சிந்தனை மட்டும் தனிமைப் பெரு வெளியில் தெளிவோடு இயங்கிக் கொண்டிருக்கும்.''

''தாங்கள் பிறருக்கும் யோக மார்க்கத்தைக் கற்றுத் தருவதில்லையா?''

''மாடு மேய்ப்பவன் மாட்டைக் கைக் குச்சியால் ஓட்டுவது போல் யோகியானவன் தன் மனத்தை இலக்கை நோக்கி செலுத்துகிறான். சாதகனோ, கையில் புல்லை வைத்துக் கொண்டு அந்த மாட்டை 'தாஜா' செய்து அழைக்கிறான்.''

''அதை எப்படிச் செய்வது?''

'''நான் யார்?' என்று உன்னைப் பார்த்தே நீ விடாமல் கேட்க வேண்டும். இப்படியே விசாரித்துக் கொண்டு போனால் இறுதியில் உன்னுள், உன் மனத்திற்கப்பால் இருக்கும் ஒன்றை நீ கண்டுபிடிப்பாய். அதைக் கண்டு பிடித்து விட்டால் மற்ற எல்லா பிரச்னைகளும் தானாகவே தீர்ந்து விடும்.''

மகரிஷியின் இந்த பதில் பால் பிரண்டனை சற்று திணற அடிக்கிறது. ஜன்னலின் வழியே, சூரிய ஒளி படர்ந்திருக்கும் மலைச் சரிவின் எழிற் காட்சியை சற்று நேரம் ரசிக்கிறார் அவர்.

மகரிஷி தொடர்ந்து பேசுகிருர் :

''உனக்குப் புரியும்படி சொல்கிறேன், கேள். ஒவ்வொரு மனிதனும் துன்பத்தின் கலப்பே இல்லாத ஆனந்தத்தைத் தேடியலேகிருன். நிரந்தர மாக இருக்கும் பேரானந்தத்தை அனுபவிக்க வேண்டும் என்று நினேக் கிருன். இது எல்லாருக்கும் இருக்கும் இயற்கையான உணர்வு. ஆனல், அதே சமயத்தில் ஒவ்வொரு மனிதனும் தன் மீது எல்லேயற்ற அன்பு வைத்திருக்கிருன், இல்லேயா?''

''ஆமாம்.''

''மனிதன் தன் மீது கொண்டுள்ள ஆசையையும், எப்படியாவது— குடியின் உதவியினுலேயோ, மதத்தின் துணே கொண்டோ — ஆனந்தத் தைப் பெற அவன் முயலுவதையும் இணேத்துப் பார். மனிதனின் உண்மையான சொரூபம் என்னவென்பது உனக்குப் புரியும்.''

''தாங்கள் கூறுவது எனக்குப் புரியவில்லேயே!''

''எல்லேயற்ற ஆனந்தம்தான் மனிதனின் உண்மையான சொரூபம். அவன் அந்த ஆனந்தத்தைத் தேடும் போது தன்னேயறியாமல் தன் உண்மையான சொரூபத்தையே தேடியலேகிருன். அந்த ஆன்ம சொரூபம் அழிவற்றது; எனவேதான் தன் உண்மை நிலேயை அறியும் போது, முடிவற்ற ஆனந்தத்தில் மூழ்கி விடுகிருன்.''

''உலகில் எல்லோரும் துன்பப்படுகிருர்களே, அது ஏன்?''

''எல்லோரும் தங்களுடைய உண்மையான சொரூபத்தைத் தெரிந்து கொள்ளாததுதான் இந்தத் துன்பத்திற்கெல்லாம் காரணம். எல்லோரும் அறிந்தோ அறியாமலோ, ஆன்ம சொரூபத்தைத்தான் தேடிக் கொண்டிருக்கிருர்கள்.''

''கொலேகாரன், கொள்ளேயடிப்பவன், அயோக்கியன் எல்லோருமா தங்கள் ஆன்ம சொரூபத்தைத் தேடிக் கொண்டிருக்கிருர்கள்?''

''ஆமாம். அவர்கள் கூட தாங்கள் செய்யும் பாவத்தின் மூலம் ஆனந்தத்தைத்தான் பெற நினேக்கிருர்கள். தவருன வழிகளேப் பின்பற்றி ஞலும் அவர்களுடைய லட்சியம் என்னவோ ஆனந்தமாயிருப்பதுதான். ஆனல், ஆன்ம சொரூபத்தைத் தேடுகிருேம் என்று அவர்களுக்குத் தெரி யாது. வழி தவருக இருப்பதால்தான் பலனும் விபரீதமாகி விடுகிறது.''

''மனிதன் தன் உண்மையான தன்மையைப் புரிந்து கொண்டு விட்டால், அவன் நிரந்தரமான சந்தோஷத்தை அனுபவிக்கலாம் என்று கூறுகிறீர்களா?'' என்று கேட்டார் பால் பிரண்டன்.

''ஆமாம்'' என்று தலேயசைக்கிருர் மகரிஷி. பின்னர், பால் பிரண்டன் 'நான் யார்?' என்ற விசாரணேயைப் பற்றி தன் சித்தம் தெளிவடைவதற் காக மகரிஷியிடம் மேலும் பல கேள்விகள் கேட்கிருர். அவரது சந்தேகங் களேப் போக்கும் வகையில் மகரிஷி எல்லாவற்றுக்கும் பொறுமையுடன் பதிலளிக்கிருர். இறுதியில், ''மனிதன் உலகைப் பற்றியெல்லாம் தெரிந்து கொண்டு விட்டு, தன்னேப்பற்றி அறிந்து கொள்ளா விட்டால் என்ன பிரயோஜனம்? நம் உண்மை சொரூபத்தைப் பற்றிய விசாரணேயைவிட முக்கியமானது வேறு என்ன இருக்க முடியும்?'' என்று கேட்டார் மகரிஷி.

''சுலபமாகக் கூறி விட்டீர்கள்! இந்த ஆன்ம விசாரணை மிகக் கடின மானது. மனிதன் சக்திக்கு அப்பாற்பட்டது'' என்றார் பால் பிரண்டன்.

''இது முடியுமா, முடியாதா என்பது அவரவர்களுடைய சொந்த அனுபவத்தைப் பொறுத்த விஷயம். நீ நினைப்பது போல் இது அத்தனை கஷ்டமானது அல்ல. 'நான் யார்?' என்ற விசாரணையில் ஆழ்ந்து, இந்த உடலும் புத்தியும் மனமும் 'நான்' அல்ல என்று உணரத் தொடங்கினால், அந்தத் தியானமே உனக்கு உண்மையைப் புலப்படுத்தும். உன்னையே நீ அறிந்து கொள்வாய். உன்னைப் புரிந்து கொண்டு விட்ட பிறகு, சந்தேகங் களுக்கே இடமிருக்காது'' என்றார் மகரிஷி.

பகவானின் சொற்களில் மனத்தை ஈடுபடுத்தி, தீவிர சிந்தனையில் ஆழ்ந்த பால் பிரண்டன் பேசாமல் இருந்தார்.

பகவானும் மௌனமாகி, முகத்தை வேறு பக்கம் திருப்பி, பார்வையை எங்கோ செலுத்தி விட்டார். குறிப்பறிந்த பால் பிரண்டன் அறையை விட்டு வெளியேறினார்.

அன்று மாலை ஊருக்குப் புறப்படும் முன் மீண்டும் ஒருமுறை மகரிஷியைத் தரிசிக்கச் சென்றார் அவர். அப்போது மகரிஷி ஒன்றுமே பேசவில்லை. கருணை விழிகளால் பால் பிரண்டனையே பார்த்துக் கொண் டிருந்தார். அந்தப் பார்வை அவர் இதயத்தில் புகுந்து, உட்புறமெல் லாம் ஊடுருவி, ஆனந்தப் பேரமைதியில் மூழ்கடிக்கிறது. 'தான்' என்ற தனித் தன்மை கரைந்து போய், அவரது மனம் மகரிஷியின் உள்ளத் தோடு ஒன்றி விடுகிறது. கால ஓட்டமும் நின்று விடுவது போல் பிரமை தட்டுகிறது.

வெளியில் தயாராய் நின்ற வண்டியில் பூட்டப்பட்டிருந்த மாடு அசையவே, அதன் கழுத்தில் இருந்த மணி சிறு ஒலி எழுப்புகிறது. அந்த ஒலியலைகள் பால் பிரண்டனை மீண்டும் மண்ணுலகிற்கு அழைத்து வருகின் றன. கரம் குவித்து, மகரிஷியிடம் மௌனமாக விடைபெற்றுக் கொண்டு வெளியே வந்து வண்டியில் ஏறி அமர்கிறார் அவர். அவரது பாரதப் பயணம் தொடர்கிறது.

இரண்டு மூன்று ஆண்டுகள் இந்தியாவின் பல பகுதிகளில் சுற்றி யலைந்து விட்டு, பல யோகிகளையும், சாமியார்களையும் சந்தித்து விட்டு, பம்பாய்க்குத் திரும்பினார் பால் பிரண்டன். ஓயாத அலைச்சலால் உடல் நலமற்றிருந்தார் அவர். அலுப்பும் அசதியும் மேலிடவே, ஐரோப்பா வுக்கே திரும்பி விடுவது என்று முடிவு செய்தார். அத்தனை மகான்களைத் தரிசித்தும், அவர்களிடம் விளக்கம் கேட்டும் அவருக்கு சாந்தியே கிடைக்கவில்லை. 'எது மெய்?' 'எது பொய்?' 'யாரை நம்புவது? 'யாரை நம்பாமல் இருப்பது?' என்பது போன்ற கேள்விகள் அவர் மனத்தைக் குழப்பின.

கப்பல் பிரயாணத்திற்கு டிக்கெட்டும் வாங்கி விட்டார். இன்னும் மூன்று நாட்களில் புறப்பட வேண்டும். மன உளைச்சலுடன் கடற்கரையில் அமர்ந்திருந்தவரின் உள்ளுணர்வு உறுத்திற்று:

'ஆமாம். நீ இந்தியாவை விட்டுப் புறப்பட்டுப் போகிருயே. நீ சந்தித்த ஒரு மகானுமா உன் மனத்தைக் கவரவில்லே?'

அப்போது அவருக்கு ரமண மகரிஷியின் நினைவு வந்தது. மௌன மாக அமர்ந்து, அருட்பார்வையால் தம்மை ஆட்கொண்ட அந்த மகா னின் முகமண்டலம் அவருக்கு அடிக்கடி நினைவுக்கு வந்தது என்னவோ உண்மைதான். இருப்பினும் தம் விஷயத்தில் மகரிஷி அதிக அக்கறை காட்டவில்லே யென்ற ஒரு குறையும் அவருக்கு இருந்தது.

அதை அறிந்த அவரது மனச்சாட்சி, ''மகரிஷி உன்னிடம் அலட்சிய மாக இருந்தார் என்று எப்படிக் கூறுகிருய்? நீ அங்கே அதிக நாட்கள் தங்காமல் அவசரப்பட்டுக் கொண்டு ஓடி வந்து விட்டாயே'' என்று அவரை இடித்துக் காட்டியது.

இதற்குப் பிறகு திருவண்ணுமலேக்குத் திரும்புவதைப் பற்றி அவர் மனத்தில் பெரும் போராட்டப் புயல் வீசியது. மகரிஷியிடமே மீண்டும் போகும்படி ஏதோ ஒரு சக்தி அவரைத் தூண்டிக் கொண்டே யிருந்தது. இறுதியில், ''உன் பயணத் திட்டங்களே மாற்றிக் கொண்டு நீ மகரிஷியிடமே போய்த்தான் ஆக வேண்டும்'' என்று உள்ளிருந்து ஒரு மெல்லிய குரல் கூறியது.

அதை எதிர்த்துப் பேச முடியாத பால் பிரண்டன் அவ்வாறே செய்வது என்று முடிவு செய்து,கப்பல் டிக்கெட்டை ரத்து செய்து விட்டு, தமிழகத்தை நோக்கி மீண்டும் பயணமானுர்.

சென்னேயில் நாவலாசிரியர் கே. எஸ். வேங்கடரமணியை அவர் சந்தித்தார். ஐரோப்பாவுக்குக் கிளம்பத் திட்டமிட்டிருந்ததை மாற்றி தாம் மகரிஷியை மீண்டும் தரிசிக்க வந்த விவரத்தை அவரிடம் விளக்கிக் கூறினுர் பால் பிரண்டன்.

அதைக் கேட்ட வேங்கடரமணி, ''நீங்கள் திருவண்ணுமலேக்கே திரும்பி வருவீர்கள் என்று எனக்குத் தெரியும்'' என்ருர் சிரித்துக் கொண்டே.

''உங்களுக்கு எப்படித் தெரியும்?'' என்று ஆச்சரியத்துடன் கேட் டார் பால் பிரண்டன்.

''அன்று செங்கற்பட்டில் சங்கராசாரிய சுவாமிகளிடம் தாங்கள் விடைபெற்ற பிறகு என்னிடம் அவர் தனியே பேசிக் கொண்டிருந்தாரே, உங்களுக்கு நினேவு இருக்கிறதா?'' என்று கேட்டார் வேங்கடரமணி.

''ஆமாம். அந்த நிகழ்ச்சி இப்போது நினேவுக்கு வருகிறது'' என்ருர் பால் பிரண்டன்.

''அப்போது சுவாமிகள், 'வெங்கடரமணி, உன் நண்பர் இந்தியா முழுவதும் சுற்றுவார். அவர் பல யோகிகளேத் தரிசிப்பார். பல ஆசாரி யர்களுடன் பேசுவார். ஆனுல், கடைசியில் மகரிஷியிடமே திரும்பி வருவார். மகரிஷி ஒருவரே அவருக்கு ஏற்ற குரு' என்று என்னிடம் கூறினுர்.''

இந்தச் சொற்கள் பால் பிரண்டனின் இதயத்தைத் தொட்டன. சங்கராசாரிய சுவாமிகளின் தீர்க்க தரிசனத்திற்கு இதை விட என்ன

சான்று வேண்டும்? தாம் சரியான பாதையில் போய்க் கொண்டிருக்கிறோம் என்பதற்கு இதுவே அடையாளம் என்று எண்ணி மகிழ்ந்தார் அவர்.

தம் பிறந்த நாட்டுக்குப் புறப்பட்டுச் செல்லத் திட்டமிட்டிருந்த பால் பிரண்டனை, பேரருட் சக்தியொன்று மீண்டும் அருணாசலத்திற்கே அழைத்து வந்தது. உண்மையை அறிய வேண்டும் என்று உள்ளத் தூய்மையோடு எண்ணுபவர்களுக்கு அந்த சக்தி நல்வழி காட்டுகிறது. அந்த சக்தியே குருவாக இருந்து அவர்களை உயர்த்தியும் விடுகிறது.

ரமணாசிரமத்திற்கு வந்த பால் பிரண்டன், தரிசன அறைக்குள் நுழைகிறார். புலித் தோல் ஆசனத்தில் அன்பே வடிவாக அண்ணல் ரமண பகவான் அமர்ந்திருக்கிறார். கீழே சில பக்தர்கள் உட்கார்ந்திருக்கின்றனர். 'பங்கா'வின் ஒலி கேட்கிறது. அறையெங்கும் ஊதுவத்தியின் நறுமணம் கமழ்கிறது.

பகவானைப் பார்க்கிறார் பால் பிரண்டன். முதன் முதலில் தாம் அந்த அறைக்குள் வந்தபோது, அசையாமல் ஆடாமல், சமாதியில் ஆழ்ந்திருந்த மகரிஷியை அருணாசலமாகவே தரிசித்ததை ஒரு கணம் நினைவுபடுத்திக் கொண்டார் அவர். அப்போது,வேறு உலகத்தில் நிலைத்து விட்ட மகரிஷியின் பார்வைக்கும், தற்போது இவ்வுலகில் நிலவிய பார்வைக்கும் உள்ள வேற்றுமையை உணர்ந்தார். முன்பு தாம் வந்து அமர்ந்ததைக் கூட அறியாமல் நிட்டையில் ஆழ்ந்திருந்த பகவான், தற்போது தாம் வணங்கியபோது கனிவோடு பார்த்துப் புன்முறுவல் பூத்துக் கருணையோடு வரவேற்ற காட்சி, பால் பிரண்டனின் இதயத்தைத் தொட்டது.

தம்மைச் சீடராக ஏற்றுக் கொள்ளும்படி வேண்டிக் கொள்ளவே அவர் வந்திருக்கிறார். தம் வேண்டுகோளுக்கு மகரிஷி நிச்சயம் செவி சாய்ப்பார் என்ற நம்பிக்கை அவருக்கு முழுமையாக இருந்தது. அந்த நம்பிக்கையோடும், தைரியத்தோடும் மகரிஷியை அணுகினார். தமது சுற்றுப் பயண அனுபவங்களைப் பற்றிச் சுருக்கமாகக் கூறி விட்டு, தம்மைச் சீடராக ஏற்றுக் கொள்ளும்படிக் கேட்டுக் கொண்டார். சுற்றி வளைக்காமல், நேரிடையாகவே, 'சட்'டென்று கேட்டு விட்டார் அவர்.

மகரிஷி பதில் கூறவில்லை. மாறாக அவர் திருவதனத்தில் புன்னகையொன்று அரும்பியது.

பால் பிரண்டன் விடவில்லை. இன்னும் சற்று அழுத்தமாக அதே கேள்வியை மீண்டும் கேட்டார் அவர்.

அப்போதும் மௌனமாகவே இருந்தார் மகரிஷி. பொறுமையை இழக்காமல் காத்திருந்தார் பால் பிரண்டன்.

இறுதியாக மகரிஷி பேசினார்:

''குருவாவது, சீடராவது? தன்னை உணர்ந்து கொள்ளாதவன் மனத்தில்தான் இம்மாதிரியான பேத உணர்ச்சிகள் தோன்றும். ஆன்ம சொருபத்தை உணர்ந்து கொண்ட ஞானியைப் பொறுத்த வரையில்,

குரு என்றும் சீடர் என்றும் வெவ்வேறு நபர்கள் கிடையாது. ஞானி, எல்லோரையும் ஒரே நோக்குடன்தான் பார்க்கிறான்.''

இதைக் கேட்டு விட்டு, தமக்கு குருவாக இருக்க மகரிஷி ஒப்புக் கொள்ள மறுக்கிறார் என்றே நினைத்தார் பால் பிரண்டன். தம் வேண்டு கோளுக்குச் செவி சாய்க்கும்படி என்னவெல்லாமோ கூறி மன்றாடிப் பார்த்தார் அவர். பதிலளிக்கும் வகையில் பகவான் தமது நிலையை விளக்கிக் கூறினார்.

''நீ உன்னுள்ளேயே உன் குருவைக் காண வேண்டும். இந்தச் சரீரத்தை குரு என்று நினைக்காதே. இது அழியக் கூடியது.''

தம் கேள்விக்கு மகரிஷி நேரிடையாகப் பதில் சொல்லப் போவ தில்லை என்பது பால் பிரண்டனுக்கு ஒருவாறு புரிந்து விட்டது. மகரிஷி கூறும் ஆன்ம விசார முறைகளின் மூலம்தான் அதற்கு விடை கிடைக்கப் போகிறது என்று உணர்ந்து கொண்ட அவர், அதற்கு மேல் ஒன்றும் வற்புறுத்தாமல் அன்று விடை பெற்றுக் கொண்டு விட்டார்.

குருவைப் பற்றியும், குருவருள் பற்றியும் பக்தர்களுக்கு மகரிஷி பல சமயங்களில் விளக்கி யிருக்கிறார்.

தன்னைக் கீழ் நிலையில் இருப்பவனாக நினைக்கும் மனிதன், தன்னையும் உலகையும் ஆட்டுவிக்கும் மாபெரும் சக்தியாகிய கடவுளிடம் சரண டைந்து, பக்தியோடு வழிபடுகிறான். அதனால் அவன் உள்ளம் பரிசுத்த மாகி பண்படும் போது, அவன் தொழும் ஆண்டவன், குருவாக வந்து அவனுக்கு நல்வழி காட்டியருளுகிறார். அந்த குரு அவனை நோக்கி ''கடவுள் உன்னுள்ளேயே இருக்கிறார். உன் சிந்தையை உட்புறம் செலுத்தி அந்த உண்மையை உணர்ந்து கொள்'' என்று அறிவுரை வழங்குகிறார். கடவுள், குரு, ஆத்மா எல்லாம் ஒன்றுதான்.

உபதேசங்கள், சொற்பொழிவுகள், தியானங்கள் எல்லாவற்றையும் விட, உயர்நிலை எய்தி மெய்ப் பொருளைக் காண, குருவருளே முக்கிய மானது.

குருவருள் நமக்கு எப்போதுமே இருக்கிறது. அது எங்கேயோ ஆகாயத்தில் இருப்பதாகவும், அந்த உயரத்திலிருந்து கீழிறங்கி நம்மிடம் வரவேண்டும் என்றும் நாம் வீணாகக் கற்பனை செய்து கொள்கிறோம். குருவருள் நம் இதயத்திலேயே உறைகிறது. எந்த முறையிலாவது நம் எண்ணங்கள் அடங்கி, மனம் ஆன்மாவில் ஒடுங்கும் போது குருவருள் உள்ளிருந்து ஊற்றெனப் பெருக்கெடுக்கிறது.

குரு உடலுருவில் மட்டும் தோற்றமளிக்கவில்லை. எனவேதான், அவரது உடல் மறைந்தாலும் அவரிடம் நமக்குள்ள தொடர்பு அறுவ தில்லை. அவரருள் என்றும் நீடித்திருக்கிறது.

பால் பிரண்டன், ஆச்ரமத்தின் அருகில், இயற்கையன்னை எழில் ஓவியமாக தீட்டியுள்ள இனிமையான சூழலில், தனிக்குடில் அமைத்து அதில் தங்கி விடுகிறார். விடியற்காலையில் எழுந்து, குளத்தில் நீராடி விட்டு, பூத்துக் குலுங்கும் வகை வகையான வண்ண மலர்களைக் கண்டு ரசித்து

விட்டு, இளம் வெய்யிலில் ஆச்ரமத்தை ஒரு சுற்றுச் சுற்றி விட்டு, மகரிஷியின் தரிசனத்திற்கு வந்து விடுவார் அவர். அவரெதிரில் அமர்ந்து ஏதாவது படிப்பார். எழுதுவார். சில சமயங்களில் தியானத்தில் ஆழ்ந்து விடுவார். அவ்வப்போது மனத்தில் தோன்றும் சந்தேகங்களுக்குப் பகவானிடம் விளக்கங்களும் கேட்பார்.

நாள் ஆக ஆக மகரிஷியின் தரிசனமும், ஆச்ரமத்தின் சூழ்நிலையும் அவரது சிந்தனையில் விளக்க முடியாத ஒரு மாற்றத்தை உண்டு பண்ணின. அதிலும் மகரிஷியின் அருகில் அமர்ந்திருக்கும் போதெல்லாம் ஏதோ ஒரு சக்தி இருவர் உள்ளங்களை ஒன்றாகப் பிணைப்பதையும், மகரிஷியின் ஆன்மிகப் பேரொளி தம்முள்ளும் படர்வதால், அமைதியுற்ற மனம் எல்லையற்ற ஆனந்தத்தில் திளைப்பதையும் உணர்ந்தறிந்தார் பால் பிரண்டன்.

சில சமயங்களில் பகல் உணவிற்குப் பிறகு மகரிஷி, எதிர்பாராமல், திடீரென்று பால் பிரண்டனின் குடிலுக்குள் வந்து விடுவார். அந்த நல்ல வாய்ப்பைப் பயன்படுத்திக் கொண்டு பால் பிரண்டன் அவரிடம் ஏதாவது கேள்விகள் கேட்பது வழக்கம்.

எத்தனை முறை கேட்டாலும், கருணாமூர்த்தி கனிவோடும், பொறுமையோடும் பதில் கூறுவார். அவை பெரும்பாலும் முழு வாக்கியங்களாக இருக்காது. ஓரிரு வார்த்தைகளாகவே இருக்கும்.

ஒருநாள் ஒரு புதிய சந்தேகத்தைக் கேட்டார் பால் பிரண்டன். அதற்கு மகரிஷி பதில் கூறவில்லை. மாறாக, தொலைவில் தெரிந்த அருணாசல மலையை உற்றுப் பார்த்துக் கொண்டிருந்தார். நின்ற இடத்திலிருந்து அவர் சற்றும் அசையவே யில்லை. மலையுச்சியில் படிந்த பார்வையும் அதை விட்டு அகலவில்லை.

மகரிஷி என்ன செய்து கொண்டிருக்கிறார் என்பதே பால் பிரண்டனுக்குப் புரியவில்லை. அவர் வெகு தொலைவிலுள்ள ஓர் அமானுஷ்ய சக்தியுடன் தொடர்பு கொண்டிருக்கிறாரா, அல்லது தம் சிந்தனையை உட்புறம் செலுத்தி யிருக்கிறாரா என்பது அவருக்குத் தெளிவாகத் தெரியவில்லை. தாம் கேட்டது மகரிஷியின் காதில் விழவில்லையோ என்று கூட அவர் நினைத்தார். மீண்டும் அந்தக் கேள்வியைக் கேட்கலாம் என்றாலோ அப்போது அந்த அறையில் நிலவிய பேரமைதியைக் குலைப்பதற்கு அவருக்கு மனம் வரவில்லை. அந்த மௌனத்தில் பிறந்து வளர்ந்த சக்தியொன்று, அவரது பகுத்தறிவு ஆற்றலையும் அடக்கி, அவரைப் பிரமிப்பில் ஆழ்த்தியது.

திகைப்புத் திரை மெள்ள மெள்ள விலகியது. தம் சந்தேகங்களுக்கு முடிவே இருக்கப் போவதில்லை என்ற உண்மை திடீரென்று பளிச்சிட்டது. எண்ணங்கள் ஒன்றையொன்று துரத்திக் கொண்டு கண்ணாம்பூச்சி ஆடுவதற்கு முடிவேது? எண்ணங்கள் அடங்கும் வரை சலனமும் சஞ்சலமும் இருந்து கொண்டுதான் இருக்கும். தமக்குத் தேவையான சத்திய ஒளி, தம்முள்ளேயே இருப்பதையும் அவரால் உணர முடிந்தது. அர்த்தமற்ற சந்தேகங்களுக்கும்,கேள்விகளுக்கும் முற்றுப்புள்ளி வைத்து விட்டு,

எல்லையற்ற தம் ஆன்ம சக்தியில் நம்பிக்கை வைப்பதே பலனளிக்கும் என்று அவருக்குத் தோன்றியது. எனவே, மகரிஷியையே பார்த்துக் கொண்டு மௌனமாகக் காத்திருந்தார்.

அரை மணி நேரத்திற்கு மேலாகியும் மகரிஷி அப்படியே சிலை போல் நின்றிருந்தார். பால் பிரண்டன் அருகில் நிற்பதைக் கூட அவர் மறந்து விட்டதைப் போல் தோன்றியது. மகரிஷி தம்மிடம் பேசாவிட்டாலும், தம் மனத்துள் சற்று முன்பு திடீரென்று ஏற்பட்ட ஞானோதயத்திற்கு அவரே காரணம் என்பது பால் பிரண்டனுக்கு உள்ளங்கை நெல்லிக்கனி போல் விளங்கியது. ஞானயோகியின் எண்ண எழுச்சிகளிலிருந்து சிதறிப் புறப்பட்ட சிற்றலைகள் தம் உள்ளத்திலும் பரவி, பேருண்மையை உணரும்படிச் செய்தன என்பதில் அவருக்குச் சிறிதும் சந்தேகமில்லை.

ஒரு நாள் மகரிஷி, பால் பிரண்டனின் குடிலுக்கு வந்தார். அப்போது பால் பிரண்டன் நம்பிக்கை இழந்த நிலையில் மனம் குழம்பிக் காணப்பட்டார். 'நான் யார்?' என்ற ஆன்ம விசாரத்தில் ஈடுபடும் மனித னுக்குக் கிட்டும் பேரின்பத்தைப் பற்றி விவரித்தார் மகரிஷி.

அதைக் கேட்ட பால் பிரண்டன், ''மகரிஷி அவர்களே, நீங்கள் கூறும் முறை கடினமாக இருக்கிறது. என்னுடைய பலவீனங்களும் எனக்கு நன்ருகத் தெரிகின்றன'' என்ருர்.

'''நாம் வெற்றி பெற மாட்டோம்' என்ற அவநம்பிக்கையும், 'நம்மால் முடியாது' என்ற எண்ணமும் ஆன்ம விசாரத்திற்குக் குறுக்கே நிற்கும் பெரும் தடைகளாகும்'' என்ருர் மகரிஷி.

''நான் கூறும் கஷ்டங்களும் பலவீனங்களும் உண்மையா யிருந்தால் என்ன செய்வது?''—வற்புறுத்திக் கேட்டார் பால் பிரண்டன்.

''அது உண்மையல்ல. பலவீனமுடையவனுகவும், தீயவனுகவும் இருப்பது தமது இயற்கைத் தன்மை என்று மனிதன் நினைத்துக் கொள்வது பெரிய தவருகும். ஒவ்வொரு மனிதனுள்ளும் வலிமை மிக்க தெய்விக சக்தி குடி கொண்டிருக்கிறது. அவனுடைய பழக்க வழக்கங்களும் ஆசைகளும், எண்ணங்களும்தான் நலிவுற்றும், தீமை நிறைந்ததாகவும் இருக்கின்றன. அவன் ஆன்மா பரிசுத்தமாகவே இருக்கிறது.''

மகரிஷியின் வார்த்தைகள் பால் பிரண்டனின் உள்ளத்திற்குத் தெம்பு அளிக்கும் 'டானிக்'காக இருந்தன. சாதாரண மனிதர் யாரா வது இவ்வாறு பேசி யிருந்தால் அவற்றை அவர் மறுத்துக் கூறியிருப்பார். ஆனல், மகரிஷியின் சொற்கள் ஆழ்ந்த ஆன்மானுபவத்தின் பிரதி பலிப்புக்களாகவே அவருக்குத் தோன்றினவேயன்றி, வறட்டு வேதாந்தி ஒருவரின் வார்த்தை ஜாலமாகத் தோன்றவில்லை.

மகரிஷியின் அருகாமையில் இருந்ததால் பால் பிரண்டன் அதுவரை கண்டறியாத உள்ளமைதியைப் பெற்ருர். தம் ஆன்மிக வாழ்வு மெள்ள மெள்ள மலருவதையும் உணர்ந்தார் அவர். ஆனல், தாம் விரும்பியது போல் ஆச்ரமத்தில் அதிக நாட்கள் அவரால் தங்க முடியவில்லை. அவருக்குப் பழக்கப்பட்ட ஆகார வசதிகள் அங்கு கிடைக்கவில்லை.

வெய்யிலின் கடுமையையும் அவரால் தாங்க முடியவில்லை. அதனால் அவரது உடல் நலம் குன்றியது. திருவண்ணாமலையிலேயே சிறிது காலம் தங்க வேண்டும் என்று மனம் விழைந்தது. ஆனால், 'உடனே உன் ஊருக்குப் புறப்படு' என்று உடல் உத்தரவு போட்டது. வேறு வழியின்றி சற்றும் மனமில்லாமல் தம் பயணத்திற்கான ஏற்பாடுகளைச் செய்யத் தொடங்கினார் பால் பிரண்டன்.

ஊருக்குப் புறப்படுவதற்கு முன் மகரிஷியின் அருள் தமக்குப் பரிபூரணமாகக் கிடைத்த நிகழ்ச்சியை பால் பிரண்டன் 'ரகசிய இந்தியாவில் ஒரு சோதனை' (A Search in Secret India) என்ற நூலில் வெகு அற்புதமாக விவரித்திருக்கிறார்.

திருவண்ணாமலையை விட்டுப் புறப்படுவதற்கு இரண்டு நாட்களுக்கு முன்பு அவர் உடலில் திடீரென்று ஒரு குளிர் நடுக்கம் ஏற்பட்டது. அதைத் தொடர்ந்து அவருக்கு வியர்த்துக் கொட்டியது. காய்ச்சல் வருவதற்கான அறிகுறிகள் தோன்றின. உடனே, தரிசன அறைக்கு விரைந்து, மகரிஷியின் முன்பு கண்களை மூடித் தியானத்தில் அமர்ந்தார்.

சற்றைக்கெல்லாம் மகரிஷியின் தெய்விகத் தோற்றம் அவர் மனக் கண்முன் தோன்றியது. மகரிஷி கூறியிருந்ததை நினைவு படுத்திக் கொண்டு, உருவத்தை மறந்து, மகானின் உருவமற்ற ஆன்ம சொரூபத்தில் தம் மனத்தை லயிக்கச் செய்தார். எண்ண ஓட்டங்கள் அடங்கி, மனம் ஒரு நிலைப்பட்டது. ஏதோ ஒரு புதுமையான, வலிமை மிக்க சக்தி அவருள் புகுந்து, அவரை மிக வேகமாகக் கீழே இழுத்துச் சென்றது. அங்கு பேரமைதி நிலவியது. இன்பமயமான உணர்வில் மிதந்தார் அவர்.

அந் நிலையில் மனத்தில் தோன்றித்தோன்றி மறையும் எண்ணங்களைக் கூர்ந்து கவனித்தார் அவர். அந்த எண்ணங்களின் பிடியிலிருந்து தப்பித்துக் கொள்ள வேண்டும் என்று அவருக்குத் தோன்றியது.

பின்னர் அவருக்கு ஏற்பட்ட அனுபவங்களைப் பால் பிரண்டனின் சொற்களிலேயே சுருக்கமாகக் காண்போம்:

> காலம் காலமாக எண்ணங்களின் கொடூர ஆட்சிக்கு உட்பட்டு வாழும் நாம், எவ்வாறு அவற்றினிடமிருந்து விடுபடுவது? எண்ண ஓட்டங்களையே நிறுத்தி விட வேண்டும் என்று மகரிஷி ஒரு போதும் கூறவில்லை.
>
> 'எண்ணங்கள் எங்கிருந்து புறப்படுகின்றன என்று பார்த்துக் கொண்டே அதன் மூலத்திற்குப் போ. அந்நிலையில் உன் உண்மையான சொரூபம் வெளியாவதற்காகக் காத்திரு. அதற்குப் பிறகு உன் எண்ணங்கள் தாமாகவே மடிந்து விடும்' என்று மகரிஷி அடிக்கடி கூறியிருக்கிறார். எனவே, அப்போதிருந்த நிலையில், எண்ணங்களின் பிறப்பிடத்தைக் கண்டு பிடித்து விட்டதாக நான் நினைத்து, பின்னர் நிகழப் போவதற்காக, பாம்பு தன் இரைக்காகக் காத்திருப்பது போல் தயாராகக் காத்திருந்தேன்.
>
> அடுத்து என்ன நடக்கும் என்று மகரிஷி கூறியது போலவே என் அனுபவங்கள் அமைந்திருந்தன. எண்ண அலைகள் குறைந்து,

அடங்க ஆரம்பிக்கின்றன. பகுத்தறிவு, செயலிழந்து போகிறது. இதுவரை அனுபவித்தறியாத ஓர் அபூர்வ உணர்விற்கு நான் ஆளாகிறேன். உடலைப் பற்றிய நினைவோ, இந்திரியங்களைப் பற்றிய உணர்வோ அற்றுப் போகிறது.

இறுதியில் எதிர்பார்த்தது நடந்தே விடுகிறது. மெழுகுவத்தி அணைவது போல் கடைசி எண்ணமும் அழிந்து போகிறது. ஆழ்ந்த தூக்கத்தில் ஏற்படுவதுபோல் மனம் எண்ண எழுச்சிகளற்ற நினைவுக்குள் அடைக்கலமடைகிறது. சலனமற்ற நிலையில் நான் யார் என்பதும் என்ன நடந்து கொண்டிருக்கிறது என்பதும் எனக்குத் தெரிகிறது. 'நான்' என்ற தனித் தன்மை அகன்று, அகண்டப் பெரு வெளியாக என்னை உணர்கிறேன். நான் இருக்கிறேன். ஆனால், அந்த 'நான்', மாறி விட்ட, பிரகாசமான ஒரு புதிய 'நான்'. இதுவரை நானாக இருந்த அற்பமான உருவம் மறைந்து, தெய்விகமானதொரு 'நான்' உதயமாகிறது. அப்போது, சிறையிலிருந்து வெளியுலகிற்கு வருவது போல் விவரிக்க முடியாத சுதந்திர உணர்வு பெறுகிறேன்.

நம் உலகின் நினைவே எனக்கில்லை. இந்த பூமி என் கண்களை விட்டு மறைகிறது. பிரகாசமான ஒளிக்கடலின் நடுவில் நான் இருக்கிறேன். அந்தப் பேரொளியிலிருந்துதான் எல்லா உலகங்களும் தோன்றுவதாக நான் உணர்கிறேன். நான்—புதிய நான் — பிரும்மானந்தத்தின் மடியில் அமைதி பெறுகிறேன். அனைத்தையும், அனைவரையும் அணைத்துக் கொள்ளும் அழிவில்லாப் பேரன்பு என்னை ஆட்கொள்கிறது.



ஸ்ரீ பகவான் ரமணர்

மகரிஷியிடமிருந்து இறுதியாக விடை பெற்றுச் சென்ற காட்சியை மிக உருக்கமாக விவரிக்கிறார் பால் பிரண்டன்.

அந்தி வேளை. சூரியன் மறைந்து விட்டான். பால் பிரண்டன் எல்லோரிடமும் விடைபெற்றுக் கொண்டு விட்டார். இனி மகரிஷி ஒருவரிடம் தான் சொல்லிக் கொள்ள வேண்டும். தம்முடைய உயிருக்குயிரான பகுத்தறிவை விட்டுக் கொடுக்காமல் ஆன்மிகத் துறையில் ஓரளவு வெற்றி பெற்றதில் அவருக்குப் பரம திருப்தி. ஆனால், அந்தத் திருப்தி சிறிது நேரமே நீடித்திருந்தது.

தம்மை வழியனுப்ப மகரிஷி சற்று தூரம் நடந்து வந்ததைக் கண்டதும் அவர் நெஞ்சம் நெகிழ்ந்து விட்டார். பகவானை விட்டுப் பிரிய மனமில்லாமல் உணர்ச்சிவசப்பட்டு விட்டார். மகரிஷி அவர் மனத்தை எப்படியோ கவர்ந்து விட்டார். அவர் மீது வெற்றி கொண்டு விட்டார். ''ஒரு விதத்தில் எனக்கு அவர் விடுதலை அளித்திருந்தார். ஆனால், மற்றொரு விதத்தில் என்னை அவர் அடிமைப்படுத்தி விட்டார்.

கண்ணுக்குத் தெரியாத இரும்புக் கொக்கிகளால் தம் ஆன்மாவுடன் என்னை இறுக்கமாகப் பிணைத்துக் கொண்டு விட்டார்'' என்று கூறுகிறார் பால் பிரண்டன்.

தம் மனத்தில் எழுந்த எண்ண வெழுச்சிகளை வெளியிட முடியாத காரணத்தால் விடை பெற முடியாமல் சற்று நேரம் தயங்கித் தயங்கி நின்றார் அவர். வானத்தில் ஆயிரமாயிரம் நட்சத்திரங்கள் மின்னிக் கொண்டிருந்தன. கிழக்கில் பிறை சந்திரன், வெள்ளியிழையாக ஒளி பரப்பிக் கொண்டிருந்தது. இடப் புறத்தில் மின்மினிப் பூச்சிகள் பளிச் சிட்டுக் கொண்டிருந்தன. பனை மரங்கள் நிழற் படங்களாக நின்று கொண் டிருந்தன.

பால் பிரண்டனுக்கு உள்ளத்தளவில் பெரிய மாற்றம் ஏற்பட்டு விட்டது. காலச் சக்கரம் சுழலும் போது மீண்டும் ஒருமுறை அருணாசலத் திற்கு வருவோம் என்ற நம்பிக்கை அவரிடம் வேரூன்றியது. இந்திய மரபுப்படி இரு கரங்குவித்து விடை பெற்றார் அவர். மகரிஷி, சிரித்துக் கொண்டே பால் பிரண்டனையே உற்றுப் பார்த்தார். ஒரு வார்த்தையும் பேசவில்லை.

கடைசியாக ஒரு முறை பகவானைப் பார்த்தார் பால் பிரண்டன். அந்த மங்கலான விளக்கு வெளிச்சத்தில், கண்கள் ஜொலிக்கும் அந்த நெடிய உருவத்தை நோக்கி மீண்டும் ஒரு முறை கும்பிட்டார். பகவான் 'சென்று வா' என்பது போல் தமது வலக் கரத்தை அசைத்தார்.

காத்துக் கொண்டிருந்த வண்டியில் ஏறி அமர்ந்தார் பால் பிரண்டன். வண்டிக்காரன் சாட்டையை வீசினான். சொன்ன பேச்சைக் கேட்கும் அந்த மாடுகள், தோட்டத்தை விட்டு நகர்ந்து கரடுமுரடான பாதையில் வேகமாக ஓடின. மகரிஷியைப் பற்றிய நினைவைப் போல், அந்த இரவில் வழி யெங்கும் மல்லிகையின் நறுமணம் தொடர்ந்தது.

ஸ்ரீரமண மகரிஷி இந்து சமயத்தின் குருவல்ல. அவர் மனித குலத்திற்கே பொதுவான குரு. அவர் மதகுரு அல்ல; மனித குரு. இந்துவாகப் பிறந்தாலும், சாதி, குல, மதவேற்றுமையின்றி அனைவரது அஞ்ஞான இருளைப் போக்கி, அருணாசல ஒளியாக இருந்து ஆன்ம தரிசனம் அருளவே அவதரித்தவர்.

மகரிஷி மலையின் மீது வாசம் செய்தபோதே ஓரிரு வெளி நாட்டினர் அவரைத் தரிசிக்க வந்திருந்த போதிலும், பால் பிரண்டன் வந்து சிறிது காலம் தங்கிய பிறகுதான் பகவானைப் பற்றி மேல் நாட்டினர் அறியும் வாய்ப்புக் கிட்டியது. ரமணாச்ரமத்தில் தாம் பெற்ற அனுபவங்களையும், பகவானைப்பற்றிய தமது கருத்துக்களைப்பற்றியும் பால்பிரண்டன் தமக்கே உரிய நடையில் சுவைபட எழுதியவற்றைப் படித்த எத்தனையோ மேல் நாட்டினர், மகரிஷியைப் பற்றி மேலும் அறிய ஆவல் கொண்டனர். அவரைத் தரிசிக்க ரமணாச்ரமம் வந்தனர். அது மட்டுமல்ல. மேல் நாட்டினரைப் போலவே, பகுத்தறிவிற்கே முதலிடம் தந்து, ஆன்ம விசாரத்தைப் பற்றி அலட்சியமாகப் பேசி வந்த இந்துக்களில் பலர் கூட,

பால் பிரண்டனின் புத்தகங்களைப் படித்த பிறகே ரமண பக்தர்க ளானார்கள்...! வெளி நாட்டவர் புகழ்ந்த பிறகுதான் நமது பெருமை நம்மவர்களில் சிலருக்குத் தெரிகிறது!

பால் பிரண்டனுக்குப் பிறகு, பகவானின் 'நான் யார்?' தத்துவத்தை யும் 'அருணசல மகிமை'யையும் வெளியுலகிற்குப் பரப்பியவர் ஆர்தர் ஆஸ்போர்ன் என்னும் ஆங்கிலேயப் பண்பாளர். குடும்பத்தோடு ஆச்ரமத்திலேயே தங்கிவிட்ட அவர், ஒரு முனிவரைப போல் தன்னலமற்று, தன்னடக்கத்துடன் வாழ்ந்தார். வந்த காரியம் முடிந்து, கடந்த ஆண்டு பகவானின் திருவடிகளை அடைந்து விட்டார்.

அறுபத்தைந்து வருடங்களுக்கு முன் இங்கிலாந்தில், தலைமையாசிரி யர் ஒருவரின் மகனுகப் பிறந்தார் ஆர்தர். பயிர்த் தொழிலில் ஈடுபட்டு ஒரு விவசாயியாக வாழ வேண்டும் என்று நினைத்தான் மகன். ஆனுல், மக்களின் மனத்தைப் பண்படுத்தும் ஆன்மிக விவசாயி ஆனுர். இலக்கிய மும் சரித்திரமும் படித்துப் பட்டம் பெற்ற அவருக்கு அத்துறைகளில் நாட்டம் இருக்கவில்லை. வாழ்க்கையின் ரகசியத்தை அறிய வேண்டும் என்ற பேராவல் கொண்டார். பிறவியெனும் புதிர் விளங்காமல் மனம் அலைந்தது. அவரும் அங்குமிங்கும் அலைந்து திரிந்தார்.

இத்தாலியிலும் இதர நாடுகளிலும் சுற்றி விட்டுப் போலந்துக்கு வந்தார். அங்கு லூசியா என்ற பெண்ணை மணந்து கொண்டார். அங்கு ஒரு கல்லூரியில் ஆசிரியராக நான்கு ஆண்டுகள் பணியாற்றினுர். ஆங்கிலோ — போலிஷ் சங்கத்திற்குக் காரியதரிசியாயிருந்த அவர், பொழுதுபோக்குக்காக சில நகைச்சுவை நாடகங்களும் எழுதினுர். பல கவிதைகளும் புனைந்தார்.

அப்போது பிரெஞ்சு நாட்டு சிந்தனையாளரும் வேதாந்தியுமான ரெனி கினே என்பவரின் புத்தகங்களைப் படித்தார் அவர். 'இருப்பது ஒன்றுதான்' என்ற அவருடைய தத்துவ போதனை அவரைக் கவர்ந்தது. அது உண்மை என்று அவருக்குத் தோன்றியது. 'இருப்பது ஒன்றுதான். அதைத் தவிர இரண்டாவது வஸ்து இல்லையென்ருல், நான் யார்?' என்ற கேள்வி அவருள் எழுந்தது. இருக்கும் பொருளிலிருந்து மாறுபட்டவனுக 'நான்' இருக்க முடியாது. எனவே தன்னையறிந்து கொண்டால், இரண்டும் ஒன்று தான் என்பதை அறிந்து கொண்டு விடலாம். இந்த ஆன்ம விசாரத்தி லேயே தமது வாழ்க்கை முழுவதும் ஈடுபட்டிருந்தார் ஆர்தர்.

போலந்தில் இருக்கும் போதே அவர் ரமண மகரிஷியைப் பற்றிக் கேள்விப்பட்டிருந்தார். அவருடைய போட்டோ ஒன்றையும் பார்த்திருக் கிருர். பின்னர் பாங்காக்கில் அவர் ஆசிரியராகப் பணியாற்றியபோது மகரிஷிகளின் புத்தகங்கள் சிலவற்றைப் படித்தார். இருப்பினும், ஆன்ம சாந்திக்கு ரமணர் காட்டிய வழி, நடை முறைக்கு ஒவ்வாதவை என்றே நினைத்திருந்தார். ஆர்தரைச் சார்ந்தவர்களும் அவருடைய குருவும் அவ்வாறு என்னும்படி அவர் மனத்தைக் கெடுத்திருந்தார்கள். ஆனுல், உள்ளுக்குள் ரமணரின் தத்துவங்கள் ஆழப் பதிந்திருந்தன. இந்தியாவுக் குச் சென்ருல் திருவண்ணுமலைக்குச் செல்ல வேண்டும் என்று எண்ணிக் கொண்டிருந்தார் ஆஸ்போர்ன்.

மூன்று வருடங்களுக்குப் பின் அவருக்கு ஆறு மாதம் விடுமுறை கிடைத்தது. நண்பர் உதவியுடன் குடும்பத்தோடு காஷ்மீர் வந்து தங்கினுர். ஆனுல், நினைத்தபடி திருவண்ணுமலைக்குச் செல்ல முடியவில்லை. அப்போது இரண்டாவது உலகப் போர் நடந்து கொண்டிருந்தது. ஜப்பானியர் சயாமை நோக்கி வேகமாக வந்து கொண்டிருந்த சமயம் அது. ஆஸ்போர்ன் மட்டும் பாங்க்காக்கிற்குச் சென்றுர். அவரது மனைவியும் மூன்று சிறு குழந்தைகளும், திருவண்ணுமலையிலுள்ள நண்பர் ஒருவர் இல்லத்தில் வந்து தங்கினர்.

ஜப்பானியர் சயாமைத் தாக்கினர். அங்கிருந்த வெள்ளையரெல்லாம் சிறையிலடைக்கப்பட்டனர். ஆர்தரும் கைதாகிக் காவலில் வைக்கப் பட்டார்.

அப்போது ரமணுச்ரமத்தில், ஆர்தரின் சின்னஞ்சிறு குழந்தைகள் பகவானிடம் செல்லும் போதெல்லாம் ''எங்கப்பாவைக் காப்பாற்றுங்கள்'' என்று கேட்டுக் கொண்டன. பகவான் அதைக் கேட்டுத் தலையை அசைத்துச் சிரிப்பார்.

சிறையில் வேதனைப்படவில்லை ஆர்தர். மாருக, தமது ஆன்மிகப் பயிற்சியில் ஈடுபட்டிருந்தார். ஆன்ம சாந்தி பெறும் கடும் பயிற்சியில் எந்நேரமும் மூழ்கியிருந்தார். தமது மேல்நாட்டு குரு காட்டிய வழியைப் பின்பற்றினுலும், ரமண மகரிஷியே அவரது நினைவில் குடி கொண்டிருந்தார். அவரது முயற்சிகளுக்குப் பகவான் பெருந் துணையாக இருப்பதை அவர் உணர்ந்தார்.

மூன்றரை ஆண்டுகள் கழித்து, ஜப்பானின் சரணுகதியை யடுத்து போர் நின்றது. விடுதலையானதும் ஆர்தர், நேரே திருவண்ணுமலைக்குச் சென்றுர். அருணுசலம் அவரை அவசரமாக அழைத்தது.

ஆச்ரமத்திற்கு வந்த அன்றே தரிசன அறைக்குள் நுழைந்தார் ஆஸ்போர்ன். அப்போது பகவான் அங்கில்லை. மலைப் பகுதியில் நடக்கச் சென்றவர் இன்னும் திரும்பவில்லை. அந்த அறை அத்தனை சிறியதாக இருப்பதையும், மகரிஷிக்கு வெகு அருகில் தாம் உட்காரப் போவதையும் நினைத்து ஆச்சரியப்பட்டார் அவர். அந்த அறை அதை விடப் பெரியதாகவும் படாடோபமாகவும் இருக்கும் என்று அவர் கற்பனை செய்து வைத்திருந்தார்.

மகரிஷி உள்ளே வந்தார். அவரைப் பார்த்து ஆர்தர் அசந்து போய் விடவில்லை. மகரிஷியின் படங்களைப் பார்த்து அவர் இப்படித்தான் இருப்பார் என்று தீர்மானித்து வைத்திருந்தார் ஆர்தர். நரைத்த முடி, சற்றுக் கூனல் விழுந்திருந்த முதுகு, வாதத்தினுல் இழுத்து இழுத்து நடக்கும் நடை, கனிவான பார்வை. கட்டிலில் அமர்ந்த பிறகு, அங்கிருந்தவர்களையும் ஆர்தரின் சிறு பிள்ளையையும் பார்த்து, ''இந்தப் பையனுடைய பிரார்த்தனை பலித்து விட்டது. அவன் அப்பா சௌக்கியமாக வந்து சேர்ந்து விட்டார்'' என்றுர் பகவான். அவருடைய எல்லையற்ற கருணையைப் பருகினுர் ஆர்தர்.

நாட்கள் ஆக ஆக ஆர்தரின் மீது அன்பை வாரி வாரிச் சொரிந்தார் பகவான். சிறை வாழ்க்கையால் முறுக்கேறியிருந்த நரம்புகள் சற்று தளர்ந்தன. அல்லலுற்றிருந்த மனம் அமைதியுற்றது. ஆனால், குறிப்பிடும் படியான பெரிய மாற்றம் எதுவும் ஏற்படவில்லை. மகரிஷியிடம் உபதேசம் பெறும் தகுதி தமக்கு இல்லையே என்ற ஏமாற்றம் ஆர்தருக்கு. அவர் ஒரு குருவல்ல என்று தாம் ஏற்கெனவே கேள்விப்பட்டிருந்தது உண்மை என்றே தோன்றியது. அவர் அந்த எண்ணத்தை மாற்றிக் கொள்ளும் அளவுக்குப் பகவானும் ஒன்றும் கூறிவிடவில்லை.

ஒரு நாள் அந்த அதிசய நிகழ்ச்சி நடந்தது. அன்று ஏதோ ஒரு பண்டிகைப் பெருவிழா. ஆச்ரமத்தில் ஒரே கூட்டம். வெளியே பகவான் கட்டிலில் உட்கார்ந்து கொண்டிருக்கிறார். ஆர்தர் முதல் வரிசையில் அமர்ந்திருக்கிறார். பகவான் ஆர்தரைப் பார்க்கிறார். அவருடைய ஒளிமிகு கண்கள், ஆர்தரின் கண்களை ஊடுருவுகின்றன. அதன் சக்தியை வார்த்தைகளில் விவரிக்க இயலாது.

''நான்தான் சொல்லி விட்டேனே. இன்னும் அறிந்து கொள்ளாமல் இருக்கிறாயே?'' என்று பகவான் கேட்பது போலிருந்தது.

பின்னர், நிசப்தம், ஆழ்ந்த அமைதி, இன்பம், ஆனந்தம், பேரானந்தம். குருவின் கருணையும் அருளும் இருந்தால் என்ன நடக்கும் என்று வாழ்க்கையில் முதன் முறையாக, உணர்ந்து கொண்டார் அவர். ஆர்தரின் இதயத்தில் பகவானின் மீது பேரன்பு மலர்ந்தது. பகவானின் சக்தியும் ஆன்மிக எழிலும் அவருக்குப் புரியத் தொடங்கின. மறு நாள் மகரிஷியின் எதிரில் அமர்ந்து, 'நான் யார்?' என்ற ஆன்ம விசாரத்தில் இறங்கி விட்டார் ஆர்தர். தன்னிச்சையாக அவ்விதம் செய்ததாக முதலில் நினைத்தார் அவர். பின்னர்தான், பகவானுடைய கண் பார்வை தம் மன ஓட்டத்தை மாற்றியமைத்திருக்கிறது என்பதைப் புரிந்து கொண்டார் அவர்.

பகவான் மீது ஆர்தருக்கு இருந்த அன்பும் பக்தியும் பன்மடங்காகப் பெருகின. குருவருள் தமக்குக் கிட்டியதைக் குறித்து அவருள்ளம் மகிழ்ச்சியில் துள்ளிக் குதித்தது. ''மகரிஷியே குரு. வானத்தையும் பூமியையும் இணைப்பவர் அவரே; கடவுளையும் என்னையும் பிணைப்பவர் அவரே, அருவமாய் உள்ள சக்தியையும் என் இதயத்தையும் இணைப்பவரும் அவரே'' என்று அவர் வாய் முணு முணுத்துக் கொண்டிருந்தது. பகவான் அவரிடம் எப்போதும் கருணையோடு நடந்து கொண்டார். தம் கண்ணெதிரிலேயே அமர்ந்து தியானம் செய்யச் சொன்னார். குறுக்கே யாராவது வந்து அமர்ந்தால், சற்று நகர்ந்து அமரும்படி கூறினார் கருணை வள்ளல்.

திருவண்ணாமலைக்கு வந்த பிறகு, ஆர்தர் தம்பதிக்கு அந்த இடத்தை விட்டுப் பிரியவே மனமில்லை. பாங்காக் பல்கலைக் கழகத்திற்கு மீண்டும் போவது முடியாத காரியம். இங்கிலாந்திற்குத்

ஆர்தர் ஆஸ்போர்ன்



திரும்பிச் செல்லவும் அவர் விரும்பவில்லை. பிரிட்டிஷ் அரசாங்கம் தங்கள் பிரஜைகளுக்கு உதவ முன் வந்தது. ஆனால் ஆர்தர், தமக்கு எந்த உதவியும் தேவையில்லை என்று கூறி விட்டார். கடைசிக் கப்பலும் புறப்பட்டுச் சென்று விட்டது.

குடும்பத்தைப்பற்றியோ, வருவாயைப்பற்றியோ, எதிர்காலத்தைப் பற்றியோ சிறிதும் கவலைப்படாமல் பகவான் தரிசனத்தாலேயே எல்லாக் கவலைகளையும் மறந்து, நிம்மதியாக இருந்தார் ஆர்தர். மகரிஷி மௌனத்தாலேயே தமக்கு வழிகாட்டி வருவதை உணர்ந்தார். 'நான் யார்?' 'நான் யார்?' என்ற ஆன்ம விசாரம் செய்யச் செய்ய, உள்ளே இருக்கும் அந்தராத்மாவே, வெளியே பகவானைக் காட்சியளிப்பதாக உணர்ந்து கொண்டார் அவர்.

மூன்றாண்டுகளுக்குப் பிறகு உத்தியோகம் பார்ப்பதற்காகச் சென்னைக்கு வந்தார் ஆர்தர் ஆஸ்போர்ன். ஓர் ஆங்கிலப் பத்திரிகையில் அவருக்கு வேலை கிடைத்தது. திருவண்ணாமலையை விட்டுப் புறப்படும் போது மகரிஷியின் தத்ரூபமான பெரிய ஓவியம் ஒன்றைக் கையோடு எடுத்து வந்தார் அவர். அதை மகரிஷியிடம் காட்டி ஆசி கோரிய போது, மகரிஷி, ''சுவாமியை இவர் தம்முடன் கொண்டு போகிறார்'' என்றார் சிரித்துக் கொண்டே.

அந்த ஓவியத்தில் மகரிஷி இருப்பதாக நம்பினார் ஆர்தர். தம் குறைகளை அதனிடத்தில் கூறி அமைதி பெற்றார். அப்படியிருந்தும் வார இறுதியிலும், விடுமுறை நாட்களிலும் திருவண்ணாமலைக்குப் புறப்பட்டு வந்து விடுவார். கன்று பசுவைப் பிரிந்து வாழ முடியுமா?

பின்னர் ஆஸ்போர்ன், கல்கத்தா பள்ளியொன்றில் தலைமையாசிரியராகப் பணி புரியச் சென்றார். அங்கிருந்து ஒரு சமயம் அவர் ரமணாச்ரமம் வந்திருந்த போது பகவானின் இடக்கையில் புற்று நோய்க்காக ஆபரேஷனாகியிருந்தது. கையில் கட்டுடன் வராந்தாவில் படுத்திருந்த பகவான், எதிர்பாராமல் வந்திருந்த ஆர்தரைக் கண்டதும், அந்த உடல் நிலையிலும் மலர்ந்த முகத்துடன் கண்களில் கருணை வெள்ளம் பொங்க பக்தரை வரவேற்றார். அந்தக் காட்சி ஆர்தரை ஒரு குலுக்குக் குலுக்கி விட்டது.

பகவான் உடலை விட்டுப் பிரிந்த பிறகு அவர் காட்டிய வழியில் ஆன்ம விசாரத்தில் ஈடுபட்டு, பரமஞானியாகவும் தபஸ்வியாகவும் இருந்து வந்தார் ஆர்தர். பகவானைப் பற்றி பத்திரிகைகளுக்குச் சில அருமையான கட்டுரைகள் எழுதினார். அவற்றின் தொகுப்பே, 'ரமண அருணாசல' என்ற சிறு நூல். அதைத் தவிர, ரமணரின் உபதேசங்கள், ஆன்ம விசார மார்க்கம், மகரிஷி இயற்றிய பாடல்களின் தொகுப்பு முதலிய நூல்களை வெளியிட்டிருக்கிறார். அவை பல ஐரோப்பிய மொழிகளில் மொழி பெயர்க்கப்பட்டு, பல புது அடியார்களை அருணாசலத்திற்கு அழைத்து வந்திருக்கின்றன.

ஆறு ஆண்டுகளுக்கு முன், மலைப்பாதை (Mountain Path) என்ற பெயரில் ஆச்ரமத்திலிருந்து ஒரு பத்திரிகை வெளிவரத் தொடங்கியது. ஆர்தர், அதன் ஆசிரியரானார். அதன் தலையங்கங்களில் தம் ஆன்மானு

பவங்களை அப்படியே வடித்துத் தந்தார். அன்பர்களின் கேள்விகளுக்குத் தக்க விடைகள் தந்து, ரமண தத்துவத்தை உலகெங்கும் பரப்பினர். ரமண குருவே தமக்குள் இருந்து தம்மை ஒவ்வொரு பணியிலும் ஈடுபடுத்தி இயக்கிக் கொண்டிருப்பதாக நினைத்து, பரிபூரண சரணுகதியுடன் வாழ்ந்த அந்தப் பரம பக்தர், 1970-ம் ஆண்டு மே மாதம், ரமண ஜோதியோடு கலந்து விட்டார். இறுதி மூச்சு பிரியும் முன் அவர் வாய், 'நன்றி, நன்றி' என்று முணு முணுத்துக் கொண்டிருந்ததாக திருமதி லூசியா ஆர்தர் கூறுகிறர்.


ஆஸ்போர்ன் தம்பதி

ஒரு சமயம் நான் ரமணுச்ரமத்திற்குச் சென்றிருந்த போது காவியுடுக்காத துறவியான விசுவநாத சுவாமியைச் சந்தித்துப் பேசிக் கொண்டிருந்தேன்.

பால் பிரண்டனைப் பற்றியும் ஆஸ்போர்னைப் பற்றியும் எங்கள் பேச்சுத் திரும்பிய போது, பகவானின் பேரருளுக்குப் பாத்திரமான வேறு சில முக்கிய வெளி நாட்டினரைப் பற்றி அறிய விரும்பினேன் நான். அப்போது கிராண்ட் டஃப் (Grand Duff) என்ற பகவானின் ஆங்கிலேய பக்தரைப் பற்றிக் கூறினர் விசுவநாத சுவாமி. ''ரமண மகரிஷியுடன் உரையாடல்கள்'' என்ற ஆங்கில நூலின் ஒரு பகுதியை தாம் தமிழாக்கம் செய்திருப்பதைப் பற்றிக் கூறி விட்டு, அதில் கிராண்ட் டஃப் அவர்கள் முப்பத்தைந்து வருடங்களுக்கு முன் மகரிஷியைத் தரிசிக்க வந்த விவரங்கள் வெளியாகி யிருப்பதைப் பற்றியும் அவர் கூறினர்.

பால் பிரண்டனின் தூண்டுதலின் பேரில், அவரிடம் ஒரு கடிதத்தைப் பெற்றுக் கொண்டு இந்தியாவிற்கு வந்தார் கிராண்ட் டஃப். அவருக்கு அப்போது எழுபது வயதிருக்கும். அந்தத் தள்ளாத வயதில், ஆறுயிரம் மைல்கள் கடந்து, கப்பலிலும் ரயிலிலும் பயணம் செய்து, முற்றிலும் மாறுபட்ட பழக்க வழக்கங்களுக்குட்பட்டு, ஆன்ம ஞானமும், மனச் சாந்தியும் பெற வேண்டும் என்ற தீராத வேட்கையின் காரணமாகத் திருவண்ணுமலைக்கு வந்தார் அவர்.

ஆச்ரமத்திற்கு வருவதற்கு முன்பு, கொழும்பிலிருந்து மகரிஷிக்கு கிராண்ட் டஃப் ஒரு கடிதம் எழுதியிருந்தார். அதில், 'இத்தனை வயதிற்கு மேல், அதிலும் அந்நிய நாட்டைச் சேர்ந்த ஒருவனுக்கு ஆன்ம ஞானம் பெற வாய்ப்பு உண்டா?' என்ற தமது சந்தேகத்தைக் கேட்டிருந்தார். அதற்குப் பகவான் 'பரமாத்ம தத்துவத்தின் அனுபவம் பெற வயதோ,

மதமோ, தேசமோ இடையூருக இருக்காது' என்று அவருக்கு நம்பிக்கை யளிக்கும் வகையில் ஒரு பதில் எழுதினர்.

கிராண்ட் டஃப் சிறந்த எழுத்தாளர். திறமை மிக்க கவிஞர். தூய்மையும் அறிவும் மிக்க ஓர் உயர்ந்த மனிதர். நெறியோடும் நேர்மை யோடும் வாழ்ந்த ஒரு பண்பாளர். ஆகாரத்தில் அதிக அக்கறை செலுத் தாதவர். அதிகமாகப் பேச விரும்பாதவர். தாம் உண்டு தம் வேலேயுண்டு என்று ஆடம்பரமின்றி, தன்னடக்கத்துடன் இருப்பவர்.

அந்த ஆங்கிலேய பக்தர் மகரிஷியைத் தரிசிப்பதற்காக அறையினுள் நுழைந்ததும், மகரிஷிக்கு எதிரில் போடப்பட்டிருந்த குறிச்சியில் போய் அமர்ந்தார். அவர் ஒன்றும் கேட்கவில்லே. மகரிஷியும் ஒன்றுமே பேச வில்லே. ஆழ்ந்த மௌனத்தில் நிலேத்து, இங்குமங்கும் திரும்பாமல் அவரை அப்படியே பார்த்துக் கொண்டிருந்தார். பேசாமல் பேசி, உள்ளத் தளவில் கலந்து உறவாடி, உண்மையை விளக்கி, அவரை உயர்த்தி விட்டார். மறுநாளும் தம் அருட் நோக்காலேயே அன்பரை அருள்பாலித் தார் பகவான்.

மனப் பக்குவம் பெற்றுப் பழுத்த பழமாகி விட்டிருந்த கிராண்ட் டஃப், பகவானின் கருணையினல் நொடிப் பொழுதில் சத்திய தரிசனம் பெற்று விட்டார். உண்மைப் பொருளே, மகரிஷியின் உருவில் தம் முன்னே நடமாடிக் கொண்டிருப்பதைக் கண்ணிமைக்கும் நேரத்திற்குள் உணர்ந்து கொண்டு விட்டார் அவர். அந்த தெய்விக சந்நிதியில், ஆன்மிக சாந்தி நீரூற்ருகப் பெருக, பேரமைதி பெற்று சில நாட்கள் ஆச்ரமத்தி லேயே தங்கினர். அந்நிய மண்ணில் பிறந்தாலும், நம் வேத பாரா யணத்தை மெய்ம்மறந்து கேட்டு, அவர் இன்புறுவது வழக்கம்.

ஒரு நாள் அவர் தமது குடும்ப விஷயங்களேப்பற்றிப் பகவானுடன் உரையாடிக் கொண்டிருந்தார். அப்போது அவர் தம் தாயின்மீது தமக் குள்ள எல்லேயற்ற பக்தியைப் பற்றிக் கூறி, ''அவளுக்கு எவ்விதம் நான் நன்மை செய்யலாம்'' என்று பகவானிடம் கேட்டார். அந்தக் கேள்வியை ஒரு காரணமாக வைத்துக் கொண்டு உயர்ந்த தத்துவ உபதேசம் ஒன்று செய்தருளினர் மகரிஷி:

'தாயார் என்பவர் யார்?' நாம் பிறப்பதற்குக் காரணமானவரைத் 'தாயார்' என்றழைக்கிருேம். அதாவது நமது உடல் உற்பத்தியாவதற் குக் காரணமான மற்ருெரு உடலேத் தாய் என்கிருேம். ஆனல், உடலா நாம்? இல்லே. உடலில் இயங்கும் அறிவாகிய ஜீவனே 'நான்' என்று எடுத்துக் கொண்டால், அந்த அறிவின் பிறப்பிடமாகிய ஆன்ம சைத் தின்யமே நமது உண்மையான தாய். 'நான்' என்கிற நினேவு எங்கிருந்து பிறக்கிறது என்று தேடிச் சென்று, உள்ளத்தில் பிரகாசிக்கும் ஆன்ம சொருபத்தை நம் தாயாக அடையாளம் கண்டு, ஆன்ம ஞானம் பெற வேண்டும். அவ்வாறு சுய தரிசனம் பெறுவதே, நம் அன்னேக்கும் நமக்கும் பிறருக்கும் செய்த பெரிய நன்மையாகும்!

இதே கருத்தை வலியுறுத்துவதற்காக யோக வாசிஷ்டத்திலிருக்கும் ஒரு கதையைக் கூறினர் மகரிஷி:

ஒரூரில் இரு சகோதரர்கள் இருந்தனர். அவர்களுடைய தாய் தந்தையர் இறந்த போது, அதைக் குறித்து இளையவன் மிகத் துயரடைந்தான். மூத்தவன், தம்பியைப் பார்த்து, ''நம் பெற்றோர் மறைந்துவிட்டதைக் குறித்து ஏனப்பா வருந்துகிறாய்? அவர்கள் எங்கேயும் போய்விடவில்லை. நமக்குள்ளேதான் இருக்கிறார்கள். நம்மைக் காட்டிலும் வேறாக அவர்கள் இல்லை. இம்மாதிரியான வேற்றுமை எண்ணங்களுக்கெல்லாம் காரணம் நம் மனமே. 'நான்' என்ற அகந்தையே எல்லா எண்ணங்களுக்கும் அடிப்படையாக அமைகிறது. அகந்தையோ, மாறாத உண்மைப் பொருளாம் ஆன்ம சொரூபத்திலே தோன்றும் கற்பனை.

நாம் காணும் எல்லா உலகங்களும், தாய் தந்தையரும், உற்றார் உறவினரும், பிறரும் நம் நிஜ சொரூபத்தின் கற்பனைத் தோற்றங்களாதலால் யாரைக் குறித்தும் எதைக் குறித்தும் நாம் சற்றும் வருந்த வேண்டியதில்லை. இந்த உண்மையை உணர்ந்து விட்டால் பின்னர், துக்கம் என்பதேயில்லை'' என்று அவனைச் சமாதானம் செய்தான்.

பகவத் கீதையில் ஸ்ரீ கிருஷ்ணன், அர்ஜுனனுக்குச் செய்தருளிய உபதேசத்தைப் பகவான் எடுத்துக் கூறியதைக் கேட்டு கிராண்ட் டஃப் உள்ளம் பூரித்துப் போனார்.

ஒரு சமயம் பகவானிடம் நெருங்கிப் பழகும் வாய்ப்புக் கிடைத்த அன்பரொருவர், 'பகவான் வெளி நாட்டவரிடம் மட்டும் தனியன்பும் கருணையும் காட்டி அருள் புரிகிறார்' என்று உரிமையோடும் நகைச்சுவையோடும் கூறினார். அதைக் கேட்ட பகவான், ''நீங்களே பாருங்கள். கிராண்ட் டஃப்புக்கு எழுபது வயதாகிறது. இருக்கும் இடத்தில் சுகமாக இருப்போம் என்று காலந் தள்ளாமல், ஆறாயிரம் மைல்களுக்கு அப்பால் இருந்து, எத்தனையோ சிரமங்களைத் தாங்கிக் கொண்டு இந்தக் கோவணாண்டியைத் தேடி வந்திருக்கிறார். உண்மையை அறிய வேண்டும் என்ற ஆர்வமும், ஆன்ம சாந்தியைப் பெற வேண்டும் என்ற சிரத்தையும் அவரிடம் தீவிரமாக இருப்பதுதானே இதற்குக் காரணம்'' என்று கூறி ஞானம் பெறுவதற்கு உள்ளத் தூய்மை எத்தனை முக்கியமானது என்பதை எடுத்துக் காட்டினார்.

நாங்கள் பேசிக் கொண்டே ஆச்ரமத்தைச் சுற்றி வரும்போது 'மலைப் பாதை'யின் நிர்வாக ஆசிரியர் திரு வி. கணேசன், அப்போது அங்கு வந்த குஞ்சு சுவாமியை எனக்கு அறிமுகம் செய்து வைத்தார். பகவானோடு கிரிவலம் வந்த காட்சிகளையும், உடன் அமர்ந்து காய்கறிகளை நறுக்கிய நாட்களையும், மலையில் அவரோடு நடந்து சென்ற பாக்கியத்தையும், நேற்று நடந்தவை போல் குஞ்சு சுவாமி கூறிய போது, நேரம் போனதே தெரியவில்லை. எந்தக் காரியத்தில் ஈடுபட்டாலும் பகவான் அதில் தமது மனத்தை முழுமையாக ஈடுபடுத்தி, அதைச் சீராகச் செய்து முடிக்கும் பாங்கை குஞ்சு சுவாமி வர்ணித்தார்.

எல்லோரும் அமர்ந்து கறிகாய்களை நறுக்குவார்களாம். ஒவ்வொருவர் ஒவ்வொரு விதமாக நறுக்குவார்களாம். ஆனால், பகவான் முருங்கைக்காயையோ, கத்தரிக்காயையோ, கொத்தவரைக்காயையோ

நறுக்கினல் அவற்றைக் கண்களில் ஒற்றிக் கொள்ளும்படி ஒரே சீராக, நேர்த்தியாக இருக்குமாம். அவர் மந்தாரை இலை தைத்தால் வட்டமாக, ரொம்ப அழகாக இருக்கும். புத்தகங்களையும் நோட்டுப் புத்தகங்களை யெல்லாம் தைத்துப் பைண்டு செய்தால், பார்க்க நேர்த்தியாக இருக்கும். கம்புகளை ஒழுங்காகச் சீவி, எத்தனையோ கைத்தடிகள் செய்திருக்கிறர். ''ஆனல், நல்லதாக ஏதாவது செய்தால் தாமே வைத்துக் கொள்ளமாட்டார். அதை அன்பர்களுக்குக் கொடுத்து விடுவார். அவர்களுடைய சந்தோஷத்தைப் பார்த்து மகிழ்வார். இதெல்லாம் பகவானின் லீலைகள்'' என்ருர் குஞ்சு சுவாமி.

பகவான் ஒருவரையும் பற்றிக் கெடுதலாக ஒரு வார்த்தை கூடப் பேசமாட்டாராம். அதிலும் யாராவது மறைந்து விட்டால், பகவான் அவரைப் பற்றிய நல்ல குணங்களை மட்டும் எல்லோரிடமும் எடுத்துக் கூறி, பெருமையாகப் பேசுவாராம்.

தீய பழக்க வழக்கங்களில் ஈடுபட்டு ஊரில் ரொம்பவும் கெட்ட பெயர் சம்பாதித்துக் கொண்ட ஒருவர் மரணமடைந்த போது, 'பகவான் அவரைப் பற்றி என்னதான் நல்லதாகச் சொல்லி விடுகிறர் பார்ப்போம்' என்ற எண்ணத்துடன் குஞ்சு சுவாமியும் வேறு சிலரும் பகவான் அருகில் போய் அமர்ந்தார்களாம். அப்போது பகவான் இறந்து போனவரின் பெயரைக் குறிப்பிட்டு, ''ஆகா! அவர் எவ்வளவு சுத்தமாக இருப்பார் தெரியுமா? அவரைப் போல் வெண்மையாக வேட்டியை வெளுத்துக் கட்டுகிறவரை நான் இதுவரை பார்த்ததேயில்லை. குளத்தில் இறங்கினல் ஒரு மணி நேரம் நன்ருகத் தேய்த்துக் குளித்துவிட்டு, உடைகளைச் சுத்தம் செய்த பிறகே அவர் கரையேறுவார்'' என்று கூறினராம்!

பின்னர், பகவானின் தீவிர பக்தர்களில் ஒருவரான எஸ். எஸ். கோகன் என்பவரைப் பற்றி விசுவநாத சுவாமி குறிப்பிட்டார்:

அவர் ஒரு யூதர். ஐம்பது ஆண்டுகளுக்கு முன் இந்தியாவிற்கு வந்து, இந்தியக் குடிமகனகிப் பல ஆண்டுகள் பம்பாயில் தம் தொழிலில் ஈடு பட்டிருந்தார். இள வயதிலிருந்தே ஆன்மிகத் துறையில் நாட்டம் கொண்டிருந்த அவர், சென்னை அடையாறு தியோசாபிகல் சங்கத்தில் சிறிது காலம் தங்கியிருந்தார். பௌத்த மதத்தைப் பற்றியும், வேதாந்த மார்க்கத்தைப் பற்றியும் ஆராய்ச்சிகள் செய்தார். ஆனல், தாம் எதிர் பார்த்த சக்திகளோ, ஆன்மிக வளர்ச்சியோ அவருக்கு ஏற்படவில்லை. இறுதியாக ரமணுச்ரமத்திற்கு வந்து பகவானைத் தரிசித்த பிறகுதான் அவருக்கு மன அமைதி ஏற்பட்டது. 1936-ம் ஆண்டில் பதினன்கு நாட்கள் தங்குவதற்காக ஆச்ரமத்திற்கு வந்தவர், பதினன்கு வருடங்கள் தங்கினர். மகரிஷியின் மகா நிர்வாணத்திற்குப் பிறகும் சில ஆண்டுகள் ஆச்ரமத்திலேயே இருந்து வந்தார். தற்போது அவர் வேலூரில் ஓர் அமைதியான பகுதியில் தங்கியிருப்பதாகக் கணேசன் கூறினர்.

கோகன், பகவானின் மகா சமாதிக்குப் பிறகு 'குரு ரமண' என்ற ஓர் அருமையான சிறு நூலை எழுதியிருக்கிறர். 'மகரிஷியுடன்

உரையாடல்களைப் பற்றிய சிந்தனைகள்' என்ற விளக்கவுரை நூல் ஒன்றையும் அவர் எழுதி யிருக்கிறார்.

பேசிக் கொண்டே நாங்கள் ஆச்ரமத்தில் நடந்துகொண்டிருந்தோம்.

''இதோ பார்த்தீர்களா, 'சாது அருணாசலா' என்றழைக்கப்பட்ட மேஜர் ஏ.டபிள்யூ. சாட்விக் என்பவர் வாசம் செய்த குடில் இதுதான்...'' என்று கூறினார் விசுவநாத சுவாமி.

''இதுதான் அவருடைய சமாதி. முப்பத்தைந்து வருடங்களுக்கு முன் ஆச்ரமத்திற்கு வந்த சாட்விக், இறுதிவரை இங்கேயே தங்கி, 1962-ம் ஆண்டு ரமணரடி சேர்ந்து விட்டார்'' என்று அருகிலிருந்த சமாதியைக் காட்டினார் கணேசன்.

பால் பிரண்டனின் புத்தகத்தைப் படித்து விட்டு மகரிஷியைத் தேடி வந்தார் சாட்விக் என்ற ஆங்கிலேயர். ஓய்வு பெற்ற பின்னர் வீட்டையும் சொத்தையும் அப்படியே விட்டு விட்டு, அருணாசலத்தை நாடி வந்தார் இவர். ஞானமலையின் மறுபதிப்பாக, மனித உருவில் வீற்றிருந்த பகவானைத் தஞ்சமென அடைந்து, தம்மை அந்த பிரும்ம சாகரத்தில் கரைத்து, அருணாசல மகிமைக்கு மங்காப்புகழ் கூட்டிய சாது அருணாசலாவின் சமாதியைத் தரிசிக்கும் போது, ஜாதி, மத, இன வேற்றுமைகள் நம் மனத்தை விட்டு அகன்று விடுகின்றன. இப் பரந்த உலகையும் மனித குலத்தையும் சகல ஜீவராசிகளையும் படைத்துக் காத்து வரும் பேரருட் சக்தியின் மாட்சியைத் தெள்ளென உணர்கிறோம். அந்த ஞான சக்தியின் கலங்கரை விளக்கமாக ஓங்கி நிற்கும் அருணாசலத்தை நம் உள்ளத்தில் ஒளிரும் ஆன்ம சக்தியாகவே தரிசிக்கிறோம்.

'''சாட்விக்' தமது அகங்காரத்திற்கு ஒரு சமாதி எழுப்பியிருக்கிறார். அதைப் பார்க்கிறீர்களா?'' என்று கேட்டார் கணேசன். அதைக் கேட்டு நாங்கள் ஆச்சரியமடைந்தோம். 'நான்' என்ற அகங்காரத்தைக் கொன்று விட்டால், ஆன்ம தரிசனம் பெறலாம் என்ற அருணாசல தத்துவத்தை, மனத்தில் பதியும்படி புதுமையான முறையில் சாட்விக் எடுத்துக் காட்டி யிருப்பதைக் கண்டு வியந்தேன்.

சாட்விக் தம் குடிலுக்குப் பக்கத்திலேயே தமது அகந்தைக்கு இரண்டடி உயரத்தில் ஒரு சிறு மாடத்தைச் சமாதியாக எழுப்பி யிருந்தார். ''அதில் ஒரு விளக்கை ஏற்றி வைத்து விட்டு அடிக்கடி அதை வலம் வருவார்'' என்று கூறினார் குஞ்சு சுவாமி.

அகந்தையைக் கொன்று, ஆன்ம சொருபத்தைத் தரிசித்து, முக்தி பெறுவது தான் ஸ்ரீ ரமணபகவானின் 'நான் யார்?' என்ற தத்துவ விசாரத்தின் பலனும் முடிவும் ஆகும். கிறிஸ்துவ மதத்தின் அடிப்படைத் தத்துவமும் இதுதான் என்பதைப் பகவான் ஒருமுறை சாது அருணாசலாவிடம் விளக்கிக் கூறியிருக்கிறார்.

எஸ். எஸ். கோகன்



ஏசு கிறிஸ்து சிலுவையில் அறையப்பட்ட நிகழ்ச்சிக்குப் பகவான் தந்த விளக்கம்: கிறிஸ்துவ மதத்தில் பிறந்த சாட்விக்கின் உள்ளத்தில் ஆழமாகப் பதிந்துவிட்டிருக்கிறது. 'நான்' என்ற அகந்தையே சிலுவையில் அறையப்பட்ட ஏசு. பின்னர், கிறிஸ்துவின் உண்மையான சொரூபம் விழித்தெழுந்தது. 'நான்' அழிந்த பிறகு நம்முள்ளே இருக்கும் ஆண்டவன் தரிசனம் ஆகிறுன்.'

பகவானின் இந்த விளக்கத்தைக் கருத்தில் கொண்டுதான் சாட்விக் தமது அகந்தைக்குச் சமாதி எழுப்பி யிருக்க வேண்டும். உலகிலுள்ள சமயங்களெல்லாம் ஒரே ஆன்மிக தத்துவத்தைத்தான் பறைசாற்றுகின்றன என்ற பேருண்மையை ரமணுச்ரமத்திற்கு வருபவர்களெல்லாம் உணரும்படி அமைந்திருக்கிறது அச்சிறு சமாதி மாடம்.

ஆன்ம தரிசனம் பெறுவதற்கு மத மாற்றமோ, இடமாற்றமோ, புறச்சின்னங்களின் மாற்றமோ தேவையே யில்லே. சாட்விக், சாது அருணுசலாவாகி, ஓர் இந்துவைப் போலவே உடைகளே மாற்றி, திருநீறும் குங்குமமும் தரித்துக் கொண்டிருந்தாலும், இறுதிவரை உள்ளத்தளவில் அவர் ஓர் உண்மையான கிறிஸ்துவராகவே இருந்திருக்கிறுர். அவரவர் சார்ந்துள்ள மதத்தின் அடிப்படைத் தத்துவங்கள் இரத்தத்தோடு கலந்து, ஜீவத் துடிப்போடு இயங்கி, நம் அன்ருட வாழ்வோடு இணேந்து விட்டால், மனிதருக்குள் மதவெறிக்கும், சமயச் சச்சரவுகளுக்கும் இடமே இருக்காது என்பதற்கு ஓர் எடுத்துக் காட்டாக விளங்குகிறது சாட்விக் போன்ற ஞானிகளின் வாழ்க்கை வரலாறுகள்.

வேலூர் மருத்துவமனேயில், உயிருக்காகப் போராடிக் கொண்டிருக்கிறுர் சாது அருணுசலா. நினேவு போவதும், திரும்புவதுமாக இருக்கிறது. தன் வயம் இழந்து ஏதேதோ பேசுகிறுர். சிறுகச் சிறுக அந்தப் பேச்சும் அடங்கிவிடுகிறது. ஆனுல், சுற்றிலும் இருப்பவர்களே அவர் அடையாளம் கண்டு கொள்கிறுர்.

''பகவான் உங்களுடன் இருப்பதை உணர்கிறீர்களா?'' என்று அருகிலிருக்கும் ஒருவர் கேட்கிறுர்.

''ஆம்'' என்கிறுர் சாட்விக் மிகத் தெளிவாக.

ஜீவன் ஒடுங்கிக் கொண்டிருக்கிறது. மூச்சு அடங்கிக் கொண்டிருக்கிறது. தொண்டை உலர்ந்து, நா ஈரமிழந்து பேச்சும் நின்று விடுகிறது. கண்களில் பஞ்சடைந்து விடுகிறது. காது மந்தமாகிக் கொண்டிருக்கிறது. உடல் செத்துக் கொண்டிருக்கிறது. ஆனுல், அவரது ஆன்மா விழித்துக் கொண்டே இருக்கிறது. மிக லேசான புன்னகைக் கீற்று ஒன்று அவர் உதடுகளில் நெளிகிறது.

''இன்று ஈஸ்டர்'' என்று முணு முணுக்கிறுர் அந்த உத்தம கிறிஸ்துவர்.

''இன்று ஈஸ்டர் இல்லே. இன்னும் ஐந்து நாட்கள் இருக்கின்றன'' என்று எடுத்துச் சொல்கிறுர் கட்டிலின் அருகில் நின்றிருந்த ஒரு நண்பர்.



சாது அருணாசலா (சாட்விக்)



அவரது குடில்

சாட்விக்கின் முகம் சட்டென்று மலருகிறது. மிகத் தெளிவாகவே பேசுகிறார் அவர்.

''பண்டிகைக்கு இன்னும் ஐந்து நாட்கள் இருப்பது எனக்குத் தெரியும். ஆனால், எனக்கு இன்றுதான் ஈஸ்டர்.''

ஏசு கிறிஸ்து சிலுவையில் ஏற்றப்பட்டது வெள்ளிக்கிழமையன்று. அவர் மீண்டும் உயிர்பெற்றெழுந்தது ஞாயிற்றுக்கிழமையன்று. அந் நாளைத்தான் கிறிஸ்துவர்கள் ஈஸ்டர் பண்டிகையாகக் கொண்டாடு கிறார்கள்.

பொய்யான 'நான்' இறந்து, மெய்யான 'நான்' விழித்தெழுவது தான் ஈஸ்டர்.

ஆன்ம தரிசனம் பெறும் ஞானிகளுக்கு அவ்வேளைதான் ஈஸ்டர்.

அகந்தைக்குச் சமாதி எழுப்பிய சாது அருணாசலா, ஆன்ம தரிசனம் பெற்றார். உடலைத் துறந்து, உண்மைப் பொருளாகி விட்டார்.

நாங்கள் பேசிக் கொண்டே வரும்போது, விசுவநாத சுவாமி அவ்வழியே போய்க் கொண்டிருந்த கிருஷ்ண பிட்சு என்ற ஆந்திர அன்பரை அறிமுகம் செய்து வைத்தார். ரமண பக்தியில் சிறந்த அந்த ஆச்ரமவாசி, பகவானின் வரலாற்றைத் தெலுங்கு மொழியில் அருமை யாக எழுதி யிருப்பதாகக் கூறினார்.

சற்றைக்கெல்லாம் மணியொலி கேட்டது.

''சாப்பிடப் போகலாம் வருகிறீர்களா?'' என்று அன்புடன் அழைத் தார் கணேசன்.

பகவானின் தாயார் மலையில் வந்து தங்கிய நாட்களிலிருந்து ஆச்ரமத்தில் தொடங்கிய இந்த அன்னதான நற்பணி, இன்றும் தொடர்ந்து நடைபெற்றுக் கொண்டிருக்கிறது. ஆச்ரமத்திற்கு வரும் பக்தர்களின் உணவு விஷயத்தில் பகவான் காட்டி வந்த அக்கறையைப் பற்றிக் குஞ்சு சுவாமி விவரமாகக் கூறிக் கொண்டு நடக்க, நாங்கள் சாப்பாட்டு அறைக்குள் நுழைந்தோம்.

தரிசனத்திற்கு வருபவர்களெல்லோரும் வயிறுரச் சாப்பிட்டார்களா என்பதில் பகவான் எப்போதுமே மிகவும் அக்கறையா யிருப்பார். அவர் களில் ஒருவராக, அவர்களோடு அமர்ந்து தான் சாப்பிடுவார். சாப்பிடும் போது எல்லோர் இலையையும் கவனிப்பார். 'அவருக்கு இன்னும் கொஞ் சம் சாதம் போடு; இவருக்கு இன்னும் கொஞ்சம் குழம்பு ஊற்று; அதோ அவருக்கு கத்தரிக்காய்த் தானுக எடுத்துப் போடு!' என்று அன்புடன் பந்தி விசாரிப்பார் பகவான்.

பகவானுக்கென்று யாராவது ஏதாவது சமையல் செய்து எடுத்து வந்தால், அதில் எல்லோருக்கும் கொஞ்சம் கொஞ்சம் பரிமாற வேண்டும். தரிசன அறையில் இருக்கும் போது, வெளியூர்களிலிருந்து வரும் பக்தர்கள் 'பகவானுக்குப் பிடிக்குமே' என்று தின்பண்டங்கள் கொண்டு வந்தால், அதைப் பிரசாதமாக அங்கிருப்பவர்களுக்கெல்லாம் கொடுக்கச் சொல்லி விட்டுப் பின்னர்தான் தாம் எடுத்துக் கொள்வார். தின்பண்டங்கள் மட்டுமல்ல; பகவானுக்கு லேகியம் போன்ற நாட்டு மருந்துகள் கொண்டு வந்தாலும் எல்லோருக்கும் பங்கிட்டுக் கொடுக்கச் சொல்லுவார்!

'பகவானுக்கு உடம்பு சரியாயில்லே. அதற்காகக் கொண்டு வந்த மருந்து இது' என்று யாராவது கூறினுல், ''ஏன், எனக்கு மட்டுந்தானு உடம்பு சரியாயில்லே? பாவம், அவர் கூடத்தான் இளேத்துப் போயிருக் கிருர். அவரும் சாப்பிடட்டுமே'' என்பார், அந்தக் கருணைக்கடல்.

ஒரு சமயம் ஆச்ரமத்தில் அரிசிக்குத் தட்டுப்பாடு வந்து விட்டது. அப்போது பகவான் சில பச்சிலேகளின் பெயர்களேக் கூறினுர். அவற்றை யெல்லாம் சேர்த்து ஒரு கூட்டாகச் செய்யச் சொன்னுர். எல்லோரும் சாப்பிட அமர்ந்த போது, எல்லோர் இலேயிலும் அந்தக் கூட்டை நிறையப் போடச் சொல்லி, ஓர் உருண்டை அளவு சாதத்தைப் பரிமாறச் சொன்னுர்.

''எல்லோரும் இந்தக் கிரைக் கூட்டை நிறையச் சாப்பிடுங்கள். அதற்கு சாதத்தைத் தொட்டுக் கொள்ளுங்கள்'' என்று பகவான் நகைச் சுவையோடு கூறினுர்.

பின்னர், ஒவ்வொரு பச்சிலேயிலுமுள்ள உணவுச் சத்தையும், உடலுக்குத் தேவையான என்னென்ன மருந்து வகைகள் அவற்றில் இருக் கின்றன என்பதையும் எல்லோருக்கும் எடுத்து விளக்கினுராம்!

அழியும் இந்த உடல் நாம் அல்ல, அதனுள் இருக்கும் அழிவற்ற ஆன்ம வஸ்துவே உண்மையான நாம் என்று உணர்ந்து, உபதேசித்தருளி வரும் மகா ஞானிகளும், மகாத்மாக்களும் பிறரின் உடல்களேப் பேணிக் காப்பதில் பரம கருணுமூர்த்திகளாக இருப்பதைக் காண்கிருேம். தாங்கள் பட்டினி கிடந்து, பசியால் வாடி வதங்கினுலும், தங்களே நாடி வரும் அடியார்த் திருக்கூட்டத்தின் வயிறு வாடுவதை அவர்கள் ஒருபோதும் அனுமதிப்பதில்லே.

ஸ்ரீ காமகோடி ஆசாரிய சுவாமிகளின் இந்த எல்லேயற்ற கருணே யைப் பற்றிப் பலரிடம்,கேட்டறிந்திருக்கிறேன். நேரிலும் பல முறை கண்டு கண் கலங்கி யிருக்கிறேன்.

சுவாமிகள் யாத்திரை செய்யும் நாட்களில் நடு வழியில் வசதிகளற்ற இடத்தில் தங்கும்போது, தமது ஆகாரத்தைப் பற்றிச் சிறிதும் கவலையின்றி, உடன் வரும் சிப்பந்திகளும், ஸ்ரீ மடத்தின் ஊழியர்களும், தரிசனத்திற்கு வருபவர்களும் ஏதாவது ஆகாரம் சாப்பிட்டார்களா என்று அன்போடு விசாரிப்பார்கள். அக்கம் பக்கத்தில் ஆகாரத்திற்கு ஏதாவது ஏற்பாடு செய்யச் சொல்லி அவர்கள் சாப்பிட்ட பிறகு தான் அந்த இடத்தை விட்டுப் புறப்படுவார்.

**சா**ப்பாட்டிற்குப் பிறகு எல்லோரும் ஸ்ரீ ரமணரின் சமாதி ஆலயத்தின் முன்புள்ள அழகிய, விசாலமான மண்டபத்தில் அமர்ந்து பேசிக் கொண்டிருந்தோம். அப்போது பழம்பெரும் ரமண பக்தரான திரு ராமசாமிப் பிள்ளை வந்து எங்களுடன் சேர்ந்து கொண்டார். ஒன்றரை ஆண்டுகளுக்கு முன், முதன் முதலில் நான் திருவண்ணாமலைக்குச் சென்ற போது, ஸ்ரீ சேஷாத்ரி சுவாமிகள் ஆச்ரமத்தில் இவரைச் சந்தித்துப் பேசி யிருக்கிறேன். அதற்குப் பின்னர் இப்போதுதான் இவரைப் பார்க்கிறேன்.

'சாது அருணாசலா'வைப்பற்றிப் பெருமையோடும் பூரிப்போடும் ராமசாமிப் பிள்ளை நினைவு கூர்ந்தார். நம் வேதத்திலும், வேதபாராயணத்திலும் அதிக அக்கறை காட்டி வந்த அந்த வெள்ளைக்காரர், ஆச்ரமத்திலுள்ள வேத பாடசாலையை நல்ல முறையில் நிர்வகித்து வந்ததைப் பற்றி அவர் கூறினார். ஸ்ரீ மாத்ருபூதேச்வரர் ஆலயத்திலுள்ள ஸ்ரீசக்ரத்திற்கான பூஜை சரிவர நடைபெற வேண்டுமென்பதிலும் சாட்விக் மிகவும் கண்ணும் கருத்துமாக இருந்து வந்தார் என்றும் நான் அறிந்து கொண்டேன்.

ஆச்ரமத்தின் சாப்பாட்டு அறையில் பகவான் சினிமாப் படங்கள் பார்த்து ரசித்த நிகழ்ச்சிகளைப்பற்றி குஞ்சு சுவாமி ரசனையோடு விவரித்தார். பட்டினத்தார், நந்தனார், ராமராஜ்யா போன்ற பண்பும் பக்தி ரசமும் நிறைந்த திரைப் படங்களை பகவானுக்காகப் போட்டுக் காண்பித்தார்களாம். பகவானும் உற்சாகம் பொங்கும் சிறுவனைப்போல் சிரித்தும் அழுதும் கைதட்டியும், 'அடேடே' என்றும் 'ஆகா' என்றும் ரசித்து அவற்றைப் பார்த்தாராம். 'எல்லாம் தத்ரூபமாக இருக்கே. நிஜமாவே மழை பெய்கிறதே' என்று படம் பார்த்துக் கொண்டே ஏதாவது பேசிக் கொண்டிருப்பாராம். எல்லாம் தெரிந்த ஞானவான், ஒன்றுமே தெரியாத விளையாட்டுச் சிறுவனைப் போல் காட்சி தருவாராம். 'இந்த உலகமும் அதில் நாம் பார்க்கும் காட்சிகளும், அனுபவிக்கும் இன்பமும் துன்பமும் சினிமாவைப் போல் தோன்றி மறையும் ஒரு மாயக் காட்சியே. சத்தியமாய், நித்தியமாய் இருப்பது பிரும்மம் ஒன்றே' என்று உபதேசித்தருளவே மனித உருவில் நடமாடிக் கொண்டிருந்த பகவான், எதிலுமே தம்மை சம்பந்தப்படுத்திக் கொள்ளாமல், சச்சிதானந்த சாட்சியாய் இருந்து பல்வேறு லீலைகள் புரிந்ததில் சினிமாவை ரசித்ததும் ஒன்று.

ஸ்ரீ ரமணாச்ரமத்தில், திரு முருகனாரைத் தரிசிக்கும் பாக்கியம் அன்று எங்களுக்குக் கிடைத்தது. தமிழறிஞரான அவருக்குப் பகவானின்

அருள் கிடைத்தது. உள்ளத்தில் கவிதை ஊற்றுப் பிறந்தது. ரமணனுபவமும், ரமண லீலைகளும், ரமண தத்துவபதேசங்களும், அருட்பாக்களாக, வற்றாத ஜீவ நதியாகப் பெருக்கெடுத்து ஓடியது. கவி மலர்களை மாலைகளாகத் தொகுத்து, பகவானின் மலர்ப் பாதங்களில் சமர்ப்பித்து, தம் வாழ்வை உயர்த்தி, அதனுல் உலகோர் உய்ய வழி வகுத்துத் தந்த அந்தப் பெருந்தகையைப்பற்றி நான் கேட்டும் படித்தும் இருந்தேன். ஆனுல், அவரைக் காணவும், அவரது பாதங்களில் விழுந்து வணங்கவும் அன்று தான் எனக்கு வாய்ப்புக் கிட்டியது.

நீராடிவிட்டு, உடையைக் கூட மாற்றிக் கொள்ளாமல் ஒரு முழத் துண்டோடு கட்டிலில் அமர்ந்திருந்தார் திரு முருகனர். பரிசுத்தமாய், பழுத்த பழமாய், அமுதம் பொழியும் பார்வையோடு, அமைதியாய் அமர்ந்திருந்த முருகனரை வணங்கி எழுந்தேன். அருகில் இருந்த இருக்கையில் அமரும்படி என்னை அவர் பணித்தார். அமர்ந்தேன்.

விசுவநாத சுவாமி என்னை அறிமுகப்படுத்தி வைத்தார். 'என்ன விசேஷம்?' என்று கேட்பது போல் முருகனர் என்னைப் பார்த்தார். என்ன கேட்பது, எப்படிப் பேச்சைத் தொடங்குவது என்று நான் சிந்தித்துக் கொண்டிருந்தேன். அந்நிலையில், அங்கு அரைக்கணம் பேரமைதி நிலவியது.

''பகவானைப்பற்றி உங்களிடமிருந்து ஏதாவது அறிந்து போகலாம் என்று இவர் வந்திருக்கிருர்'' என்ருர் குஞ்சு சுவாமி.

''ஏதாவது கேட்டால் எனக்குத் தெரிந்ததைச் சொல்கிறேன்'' என்ருர் அம் முதியவர். வயதின் முதிர்ச்சியால், உடலின் தளர்ச்சியால், குரலில் ஓர் அயர்ச்சி இருந்தது. ஆனுல், உள்ளத்தில் பொங்கி யெழுந்த உணர்ச்சிகளைக் கண்ணில் பளிச்சென்று காண முடிந்தது. எத்தனையோ நினைவுகள், எத்தனையோ அனுபவங்கள், எத்தனையோ காட்சிகள். கேள்விக்குப் பதிலாகச் சொல்லி விடக் கூடிய நிகழ்ச்சிகளா அவை?

ரமணனுபவத்தைப் பருகிப் பருகி, அந்த அனுபவப் பெரும் பேறே உயிர் மூச்சாக வாழ்ந்து கொண்டிருப்பவரிடம் கேட்பதற்கு என்ன இருக்கிறது? இருப்பினும் ஏதாவது கேட்டால், அதற்குப் பதிலாக இவர் ஏதாவது கூறினுல் பயனடையலாமே என்ற பேராசையின் காரணமாகக் கேட்டு வைத்தேன்.

''பகவானுடன் தங்களுக்கு ஏற்பட்ட தொடர்பைப்பற்றியும் தங்களது அனுபவத்தைப்பற்றியும் தங்களிடமிருந்தே கேட்டறிய வேண்டும் என்ற ஆசை எனக்கு.''—இது தெளிவில்லாத, பொதுப்படையான கேள்வி என்று எனக்குத் தெரியும். இதிலிருந்து ஏதாவது பேச்சு வளரும் என்ற நம்பிக்கையில் அவ்வாறு கேட்டேன்.

''என்ன சொல்வதென்றே எனக்குத் தெரியவில்லை. அதைப்பற்றியெல்லாம் பேசுவதற்கு ஒன்றுமேயில்லை. எல்லாம் அனுபவங்கள். கிடைப்பதற்கரிய அந்த ஆன்மானுபவத்தில் இருந்து கொண்டிருக்கிறேன்.



ஸ்ரீ விசுவநாதசுவாமி, ஸ்ரீ கிருஷ்ண பிட்சு, ஸ்ரீ குஞ்சு சுவாமி.

இந்தப் பதிலுக்கு நான் தயாராகவே இருந்தேன். சற்று ஏமாற்ற மடைந்தாலும், அத்துடன் அவரை விட்டு விட என் மனம் இடம் தரவில்லை. மற்றொரு முறை முயன்று பார்த்தேன்.

''இதுவரை அச்சில் ஏறாத ஏதாவது ஒரு நிகழ்ச்சியை தாங்கள் நினைவு கூர்ந்தால் அதை வாசகர்களுக்குத் தெரிவிக்கலாம் என்று நினைக்கிறேன்'' என்று ஆவலோடு கேட்டேன். எல்லோருக்கும் வாழ்க்கையில் மறக்க முடியாத நிகழ்ச்சி ஒன்று இருக்குமே என்ற தன்னம்பிக்கையோடு அவ்வாறு கேட்டேன் நான்.

''என்னைப்பற்றிய எந்த நிகழ்ச்சி வெளியாகி யிருக்கிறது, எது வெளி யாகவில்லை என்று எனக்குத் தெரிந்தால் அல்லவா நான் தங்களுக்குப் பதில் கூற முடியும்?'' என்று திருப்பிக் கேட்டு என்னை மேலும் பேச விடாமல் செய்து விட்டார் முருகனார்.

'சும்மா கிடப்பதே சுகம்' என்ற மிக உன்னதமான நிலையில் இருப்ப வரிடம் எழுத்தாளனுக்குரிய ஆர்வத்துடன் கேள்விகள் கேட்பதில் பய னில்லை என்று நான் மௌனமாகி விட்டேன். பகவானின் அருளாசியால், 'அதை' அறிந்து 'அது'வாகவே இருப்பவரைத் தரிசித்ததும், அந்தச் சூழலில் சற்று நேரம் தங்கி யிருந்ததுமே ஆன்ம லாபம் பெற்றதாகும் என்ற உணர்வோடு, முருகனாரிடம் விடை பெற்றுக் கொண்டு, அவரது ஆசியோடு ரமணாச்ரமத்திலிருந்து புறப்பட்டேன்.

ஸ்ரீ ரமண பகவானின் முக்கியமான மெய்யடியார்களில் திரு முருகனாரும் ஒருவர்.

நம் அறிவையும் மீறிய பரம்பொருளுக்கு நம்மை முழுமையாக அடிமையாக்கிக் கொள்ளும் போது, நம்மைக் கருவியாகக் கொண்டு, அப்பேரொளி சுடர் பரப்பிப் பிரகாசிக்கும் அதிசயத்தைக் காணலாம். அத்தகைய சரணுகதியால் அரிய சாதனைகள் புரிந்து, பெயரையும் புகழையும் சற்றும் விரும்பாமல், விளம்பர உலகிலிருந்து ஒதுங்கி, அமைதியாக வாழ்ந்து கொண்டிருக்கும் முருகனரின் இயற் பெயர் சுப்பிரமணிய ஐயர் என்பது. தந்தை கிருஷ்ணய்யர், இராமநாதபுரத்தைச் சேர்ந்தவர். எனவே, தூய தமிழில் இவரது பெயர் முகவைக் கண்ண முருகனர் என்று மாறியுள்ளது.

இள வயதிலிருந்தே சிறந்த தமிழ்ப் பயிற்சி பெற்றிருந்த இவர், தமிழ்ப் பேரகராதிக் குழுவில் ஓர் உறுப்பினராக இருந்து நற்பணியாற்றியிருக்கிறர். பின்னர் சென்னை நார்த்விக் பெண்கள் உயர்நிலைப்பள்ளியில் தமிழ்ப் பண்டிதராகப் பணியாற்றி யிருக்கிறர். தேசப்பற்று மிக்க அவர், அச்சமயத்தில் மகாத்மா காந்தியின் தேசிய இயக்கத்தில் பெரும் ஈடுபாடு கொண்டிருந்த காரணத்தால் பல தேசியப் பாடல்களை இயற்றினர். 'சுதந்திர கீதம்' என்ற பெயரில் அவை புத்தக வடிவில் வெளி வந்திருக்கின்றன.

அப்போது பகவானைப்பற்றிக் கேள்வியுற்ருர் முருகனர். 1923-ம் ஆண்டு செப்டம்பர் மாதம் விடுமுறையின் போது திருவருணைக்கு வந்தார். அருணசலேச்வரரைத் தரிசித்தார். அடுத்து அருணசல ரமணரைத் தரிசிக்க வேண்டும். மகான்களைக் காணச் செல்லும் போது, வெறுங் கையோடு போகலாமா? ஆலயத்திலேயே அமர்ந்து ஒரு செய்யுளைப் புனைந்தார். அதை எடுத்துக் கொண்டு ரமணச்ரமத்திற்குச் சென்ருர்.

முருகனர் வரப் போவதை முன்பே அறிந்திருந்தவர் போல் மகரிஷியும் தம் குடிலிலிருந்து வெளியே வந்து அவருக்குத் தரிசனம் தந்தார். முருகனரின் கையிலிருந்த காகிதத்தைக் காட்டி ''அது என்ன?'' என்று கேட்டார்.

முருகனர், பகவான் திருமுகத்தை நோக்கினர். அதுவரை கண்டறியாத ஓர் அற்புத அனுபவத்தைப் பெற்ருர். கையிலிருந்த காகிதத்தைப் பிடித்துப் படிக்க முயன்ருர். அவர் கைகள் நடுங்கின. குரல் எழும்பவில்லை. கண்களில் நீர் வழிந்தது. அருகிலிருந்தவர், 'திருச் சந்நிதியில் படித்துச் சமர்ப்பிப்பதற்காக இவர் செய்யுட்கள் இயற்றி வந்திருக்கிறர்' என்று கூறினர்.

'படி' என்ருர் பகவான்.

படிக்க முயன்ருர் முருகனர். தாம் எழுதிய செய்யுளைத் தாமே சரிவரப் படிக்க முடியாமல் திணறிப் போனர்.

''அதை என்னிடம் கொடு'' என்று கேட்டு வாங்கிக் கொண்டார் பகவான். அதை ராக பாவத்துடன் உரக்கப் படித்தார். முதன் முறையாக பகவான் வாய்விட்டுப் படிப்பதைக் கேட்ட இதர பக்தர்கள் இந்த அரிய நிகழ்ச்சியைப் பேரதிசயமாகக் கண்டு களித்தனர்.

பார்வளர் கயிலைப்பருப்பத நீங்கிப்
பண்ணவர் சூழலை விட்டு
வாரொளி மணிபோல் வாசகர்
வாக்கை வளர் செவிமடுத்திட
விரும்பி யேர்வளர் பெருந்தண்
டுறையடைந்தாற்போ
லிழிசினேன் புன்சொலும் வேட்டுச்
சீர்வள ரருணைச் செழும்பதி
சேர்ந்தாய் தேசிக ரமணமா தேவே

என்ற அந்தச் செய்யுளை நயமுடன் படித்து முருகனாரின் கவிதைத் திறனுக்குப் புனிதத் தன்மையைக் கூட்டுவித்தார் பகவான்.

'கயிலை மாமலையையும், தேவர் திருக் கூட்டத்தையும் விட்டு மாணிக்கவாசகரின் சொல்லை விரும்பி சிவபெருமான் மண்ணுலகை வந்து அடைந்தாற்போல், இழிந்தவனும் இவனது சொல்லையும் விரும்பி இவ்வுலகையற்ற ரமண குரு தேவா' என்ற கருத்துடைய இச் செய்யுள், பிற்காலத்தில் திருவாசகத்திற்கு ஈடான துதிப் பாடல்களை இவர் இயற்றப் போவதற்கு அறிகுறியாக அமைந்து விட்டிருந்தது.


திரு முருகனார்

அன்று முதல் முருகனார், பகவானை அடிக்கடி தரிசித்து, அந்தத் தரிசனத்தின் பயனாய் அவ்வப்போது பல துதிப் பாடல்களை இயற்றி வந்தார். மார்கழி மாதம் ஒரு நாள், 'அண்ணாமலை ரமணன் அன்பர்க் கருண்மாரி கண்ணாலே பெய்யும் கருணைத் திறம்பாடி' எனத் தொடங்கும் ஒரு பாடலைக் கூறி, பகவானின் மலரடிகளில் சமர்ப்பித்தார். திருவாசக திருவெம்பாவையை யொத்திருந்த இப் பாடலைக் கேட்ட பகவான், ''திருவாசகப் போக்கிலேயே துதிகள் எழுதலாமே'' என்று அருளுரை வழங்கினார். இதைக் கேட்ட முருகனார், ''மாணிக்கவாசகர் எங்கே, நான் எங்கே?'' என்று நடுக்கத்துடன் கூறினார்.

அந்தக் கணம் அவ்வாறு பதில் கூறினாலும் சென்னைக்குத் திரும்பிய பின்னர், 'திருவாசகப் போக்கிலேயே துதிகள் பாடலாமே' என்ற பகவானின் யோசனை, தமக்கிடப்பட்ட கட்டளையாகவே முருகனார் உள்ளத்தில் எதிரொலிக்கத் தொடங்கியது. 'திருவெம்பாவை', 'திருப்பள்ளியெழுச்சி' என்னும் துறைகளில் ரமண ஸ்துதியை இயற்றத் தொடங்கினார். நாளடைவில், பகவானைத் தரிசித்த போதெல்லாம்,

பக்திப் பரவசத்தில், திருவாய்மொழி, தேவாரம், திருப்புகழ் போன்ற தெய்விகப் பாடல்களின் வழியைப் பின்பற்றிப் பல பதிகங்கள் இயற்றினர்.

ஒரு சமயம் 'அண்ணுமலை ரமணன்' என்ற திருநாமம் ஒவ்வொரு பாடலிலும் வரும் 'உயிருண்ணிப் பத்து' என்னும் பதிகத்தை முருகனர் எழுதிக் கொண்டிருந்த பொழுது, அருகிலிருந்த விசுவநாத சுவாமி, 'முகவாபுரி முருகன்' என்று நகைச்சுவையோடு குறிப்பிட்டார். அதைக் கேட்டுக் கொண்டிருந்த பகவான், விசுவநாத சுவாமியைப் பார்த்து அச் சொல் வரும்படி ஒரு செய்யுளை இயற்றுமாறு அவரைப் பணித்தார். பகவான் கட்டளையை நல்லாசியாகக் கருதி, விசுவநாத சுவாமி ஒரு செய்யுளைப் புனைந்தார்.

அகத்தாமரை மலர்மீதுறை யருணசல ரமணன்
நகைத்தானுற விழித்தானறச் செகுத்தானென துவிரை
மிகத்தானருள் சுரந்தானென முகவாபுரி முருகன்
செகத்தாருய வகுத்தான்முறை திருவாசக நிகரே

இப்பாசுரத்தின் கடைசி வரி பகவானல் இயற்றப் பெற்றது. முருகனரின் துதிப் பாடல்கள் திருவாசகத்திற்கு நிகரானவை என்பது பகவானலேயே ஏற்றுக் கொள்ளப்பட்டு விட்டது. ஏற்றம் கொடுப்பவரும் அவரே, ஏற்றுக் கொள்பவரும் அவரே.



பதினேழு வயதில் ஸ்ரீ ரமண பகவான்

குரு பக்தியின் பெருமைக்கு ஓர் இலக்கணமாகவும், சரணுகதி தத்துவத்திற்கு ஓர் இலக்கியமாகவும் திகழ்பவர் திரு முருகனர். எத்தனை தெய்வங்கள் இருந்தாலும், எத்தனை ஞானிகள் இருந்தாலும் எல்லா நாம ரூபங்களிலும் மனத்தை அலைய விடாமல், சற்குரு ரமணரின் திருநாமத்தையும் திருவுருவத்தையும் மட்டுமே மனத்தில் இறுத்தி, தம்மை உயர்த்திக் கொண்டு, உலகோர் உய்யக் கவி மழை பொழிந்து வருபவர் இத் தெய்வப் புலவர்.

''பாரதத்தில் எத்தனையோ மகாபுருஷர்கள் இருக்கிறுர்களே, அவர்களை யெல்லாம் தரிசிக்க வேண்டாமா? எத்தனையோ தலங்களும், தீர்த்தங்களும், மூர்த்தங்களும் இருக்கின்றனவே, அங்கெல்லாம் சென்று புண்ணியம் பெற வேண்டாமா?'' என்று எப்போதாவது அன்பர்கள் முருகனரிடம் கேட்பது வழக்கம். அதற்கு முருகனர், ''நான் அங்கெல்லாம் வந்து என்ன காணப் போகிறேன்? ஞான சூரியனை ரமணரின் தரிசனத்தால் காண

வேண்டியவற்றை யெல்லாம் நான் கண்டு விட்டேன். அறிய வேண்டிய வற்றை யெல்லாம் அறிந்து விட்டேன்'' என்ற ஒரே பதிலைத்தான் கூறு வார். ''ஒருவனைப்பற்றி ஓரகத்திரு; குருமூர்த்தி யொன்றே திருமூர்த்தி'' என்ற பேருண்மைப்படி எந்நேரமும் ஆனந்தமயமான ரமணனுபவத்தில் தோய்ந்து மூழ்கித் திளைத்துக் கொண்டிருக்கிருர் முருகனுர்.

பகவானின் உபதேசக் கருத்துக்களையும், பக்தர்களின் கேள்விகளுக்கு அவர் தந்த பதில்களையும் வடமொழியில் 'ரமண கீதை'யாக ஆக்கித் தந்தவர் காவ்யகண்ட கணபதி முனி. திரு முருகனுரோ, வற்ருத ஜீவநதி யாக கவியூற்றுப் பெருக்கெடுத்துப் பாய, ரமணேபதேசங்களை தீந்தமிழ்ப் பாக்களாக ஆக்கித் தந்திருக்கிருர். ஆற்று வெள்ளமெனப் பாய்ந்து, பாரெங்கும் ஆன்ம லாபமெனும் பயிர் செழிக்கச் செய்து வரும் முருகனுர் இயற்றிய செய்யுட்கள் நாற்பதினுயிரத்துக்கும் அதிகமானவை. காலஞ் சென்ற 'ரமணபாதானந்தா' என்ற ரமண பக்தர் இவற்றில் பாதி செய்யுட் களை ரமணசந்நிதி முறை, ஸ்ரீரமண சரணப் பல்லாண்டு, குருவாசகக் கோவை, ஸ்ரீரமணதேவ மாலை, ஸ்ரீரமணனுபூதி முதலிய பல்வேறு தலைப்புக்களைக் கொண்ட நூல்களாகத் தொகுத்து வெளியிட்டிருக்கிருர். சுமார் பதினைந்தாயிரம் பாக்கள் பல்வேறு தலைப்புக்களில் தொகுக்கப் பட்டு, இன்றுவரை அச்சேருமல் இருக்கின்றன.

'இப்போதுகூடப் பாக்கள் இயற்றுகிறீர்களா?' என்று முருகனுரிடம் நான் கேட்டதற்கு, ''அவ்வப்போது ஏதோ இயற்றிக் கொண்டிருக் கிறேன்'' என்ருர் அவர். கொச்சக்கலிப் பாக்களும், குறள் வெண்பாக் களும் அவரது உதட்டிலிருந்து இன்றும் உதிர்ந்த வண்ணம் இருக்கின்றன என்று பின்னர் நான் அறிந்தேன்.

உலகத்தின் கண்களிலிருந்து மறைந்து வாழும் இந்த அருளாளர், ரமணர் எனும் கற்பகத்தருவின் நிழலாய் இருந்து கொண்டு, குருநாத னின் பெருமையைப் பாரெங்கும் பறைசாற்றிக் கொண்டிருக்கிருர்.

முருகனுரது உள்ளத் தாமரையில் ரமணரருள் எனும் தேன் ஊறியதன் காரணமாக, அவரது நாவில் ஆற்றலும் அறிவுஞ் செறிந்த அருட்பாக்கள் பிறந்தன. பண்டைச் சங்க காலப் பெருந்தமிழ்ப் புலவரின் ஏற்றமிகு நடை, முருகனுரிடம் தவழ்ந்து விளையாடுகிறது. வள்ளுவப் பெருந்தகையின் தெள்ளிய கருத்தோட்டமும், மாணிக்கவாசகரின் மணி வொளியும், அப்பர் பெருமானின் அருட் கனிவும், சுந்தரரின் சௌந்தர்ய வாக்கும், ஞானசம்பந்தரின் மோகன வாசகமும் ஒருங்கிணைந்து மிளிரும் அமுதக் கடலாய்த் திகழ்கிறது முருகனுரின் 'ரமண சந்நிதி முறை' என்ற செந்தமிழ்த் துதி நூல்.

இதுவரை கேட்டறியாத எளிய முறையில் ஆன்மஞான இரகசியப் பேருண்மைகளை யெல்லாம் பகவான் ரமணர் தமது அனுபவத்திலிருந்து எடுத்துக் கூறியது தாய்மொழியாகிய தமிழில்தான். இது தமிழ்ப் புலவர் முருகனுருக்கு மட்டுமின்றித் தமிழ் மொழிக்கும் பெரும்பாக்கியமாக அமைந்து விட்டது.

பகவானிடமிருந்து அவ்வப்போது உபதேசக் கருத்துக்களும் ஆழ்ந்த அறிவுரைகளும் தோன்றும்போது அவை சீரிய செந்தமிழ்ப் பாக்களாகவும் வசனமாகவும் மலர்ந்து வரும். அவற்றைக் கேட்டுக் கொண்டிருக்கும் பிற மொழியினர், ''பகவான் என்ன கூறுகிருர்? தயவுசெய்து மொழி பெயர்த்துச் சொல்லுங்கள்'' என்று கேட்டு அவற்றை அறிந்துகொள்ள வேண்டியிருந்தது. ஆனுல், அவற்றின் சரியான பொருளை நேரிடையாகக் கேட்டு உணரும் பேறு அங்கிருந்த தமிழர்களுக்கே கிடைத்தது. அவர் களுக்குள்ளும் திரு முருகனுர் ஒருவரே பகவானது தமிழ்ப் போதனைகளின் சரியான பொருளைக் கண்டறிந்து பிறர்க்கும் எடுத்துக் கூற வல்லவரா யிருந்தார். அல்ல, அல்ல, அவற்றைப் புரிந்து கொள்வதற்குப் பகவான் அவருக்கு அருளாசி வழங்கினுர் என்று கூறுவதே பொருத்தமும் உண்மையுமாகும்.

ஒவ்வொரு நாளும் பகவான் திருவாய் மலர்ந்தருளிய அரிய ஆன்மிகக் கருத்துக்கள் ஒவ்வொன்றையும் இனிய அழகிய தமிழ் வெண்பாக்களாகச் செய்து பகவானிடம் சமர்ப்பிப்பார் முருகனுர். அவ்வுபதேசக் கருத்துக்கள் சரியாக அமைந்தனவா என்பதைப் பகவான் பார்த்து ஒப்புதல் அளித்த பின்னர், அவற்றைக் கோவை யாகத் தொகுப்பார். அவை மொத்தம் 1254 செய்யுட்களான 'குருவாசகக் கோவை' என்ற நூலாயிற்று. ஆன்ம போதனைகளின் சகல இரகசிய விளக்கங்களும் ஒருங்கே தொகுக்கப் பெற்று விளங்கும் ரமணேபதேச நூல் ஒன்று இருக்குமாயின் அது குருவாசகக் கோவையே.

ஸ்ரீரமண மகரிஷியின் உபதேசங்களுள் முக்கியமானவையாகக் கருதப்படுவது 'உபதேச வுந்தியா'ரும், 'உள்ளது நாற்பதும்'. இவ்விரண்டு அரிய செல்வங்களும் உலகிற்குக் கிடைப்பதற்குப் பெரிதும் காரணமா யிருந்தவர் முருகனுரே.

ஒரு காலத்தில் பல ரிஷிகள் ஒரு காட்டில் வசித்து வந்தனர். தாங்கள் தவருமல் செய்து வந்த சடங்குகளின் மூலம் அவர்கள் அரிய ஸித்திகளைப் பெற்றிருந்தனர். இவ் வழியிலேயே முக்தி நிலையும் பெற்று விடலாம் என்று அவர்கள் நினைத்தார்கள். ஆனுல், அது நேராது என்று அவர்கள் உணரவில்லை. ஏனெனில், கர்மாவின் பலனும் கர்மாவாகத் தான் இருக்கும். அது கர்மாவை அழிக்க உதவாது. சடங்குகள், சக்தி யைத்தான் கொடுக்கும், ஆன்ம சாந்தியை அளிக்காது. சிவபெருமான் இந்தப் பேருண்மையை அந்த ரிஷிகளுக்கு உணர்த்த வேண்டும் என்ற நோக்கத்துடன் ஒரு சாதுவாக அவர்கள் முன் தோன்றினுர். மகாவிஷ்ணு ஓர் அழகிய பெண்ணுருவில் அவருடன் வந்தார். காட்டிலிருந்த ரிஷிகளெல்லாம் அந்த ஆரணங்கைக் கண்டு மனத்தைப் பறி கொடுத்து, அதனுல் நிலை தடுமாறிப் போய், சக்தி யிழந்து தவித்தனர். ரிஷி பத்தினிகளும் சாதுவிடம் கருத்திழந்தனர். இதைக் கண்டு கோபமுற்ற ரிஷிகள்

ஸ்ரீ ரமணபாதானந்தா



மந்திரத்தால் ஒரு யானையையும் புலியையும் உருவாக்கி சாதுவாக வந்த சிவபெருமானின் மீது ஏவி விட்டனர். சிவபெருமானே, எளிதாக அந்த மாய யானையையும், புலியையும் கொன்று அவற்றின் தோல்களை எடுத்து உடையாகப் போர்த்திக் கொண்டார். தங்களை விட வலிமைமிக்க ஒருவர் இருக்கிறார் என்பதை அப்போதுதான் ரிஷிகள் உணர்ந்து, ஈச்வரனின் கால்களில் விழுந்து மன்னிப்புக் கேட்டு, தங்களுக்கு நல்லுபதேசம் செய்து அருளும்படி மன்றாடிக் கேட்டுக் கொண்டனர்.

இப்புராணக் கதையை முருகனார் கவிதையாக எழுதினார். இறுதியில் சிவபெருமான் ரிஷிகளுக்கு உபதேசம் செய்தருளும் பகுதியைத் தாம் எழுதாமல் பகவானிடம் சென்று, அதை எழுதித் தரும்படி வேண்டிக் கொண்டார். மானிட உருவில் அமர்ந்திருந்த தட்சிணாமூர்த்தி, சீடரின் வேண்டுகோளுக்குச் செவி சாய்த்தார். பகவானால் முப்பது பாக்களில் அருளப்பட்ட இந்த உபதேசத்திற்குத்தான் 'உபதேச வுந்தியார்' என்று பெயர் வழங்கப்பட்டது. கர்மம், பக்தி, யோக, ஞான மார்க்கங்களைத் தெளிவாக விளக்கும் இந்த நூல், ஆன்ம விசாரம்தான் எல்லாவற்றையும் விடச் சிறந்தது என்று கூறுகிறது. உபதேச வுந்தியாரை, பகவானே சம்ஸ்கிருதம், தெலுங்கு, மலையாளம் முதலிய மொழிகளில் மொழி பெயர்த்திருக்கிறார். அதற்கு 'உபதேச சாரம்' என்று பெயர். இது ஒரு தேவ நூலாகக் கருதப்படுகிறது. தினமும் பகவானின் சந்நிதியில் வேத பாராயணத்துடன் உபதேச சாரமும் ஓதப்பட்டு வந்தது.

'உள்ளது ஒன்றுதான்' என்ற அத்வைத ஞானமே ரமண தத்துவத்தின் ஜீவநாடி. 'நான் யார்?' என்ற ஆத்ம விசாரத்தின் முடிவும் அதுவே. பகவானின் சொந்த அனுபவத்தில் தோன்றிய அந்த தத்துவத்தின் விளக்கத்தை செய்யுட் வடிவில் சுருக்கமாக ஆக்கித் தர வேண்டும் என்று முருகனார், பகவானிடம் வேண்டிக் கேட்க, பகவானும் அவ்வப்போது செய்யுட்களை இயற்றித் தந்தார். அவற்றை யெல்லாம் முறைப்படுத்தித் தொகுத்து 'உள்ளது நாற்பது' என்ற அரிய நூலை உருவாக்கியவர் முருகனாரே.

'உள்ளது நாற்பது'க்கு அனுபந்தமாகப் பகவான் மேலும் நாற்பது செய்யுட்களும் படைத்துத் தந்திருக்கிறார்.

ஒரு சமயம் கோபாலகிருஷ்ண பாரதியாரின் 'ஐயே மெத்தக் கடினம்' என்ற நந்தனார் கீர்த்தனத்தைப் பின்பற்றி முருகனார் ஒரு பல்லவியும் அனுபல்லவியும் எழுதினார்.

பல்லவி:

ஐயே! யதிசுலபம் — ஆன்மவித்தை
ஐயே! யதிசுலபம்.

அனுபல்லவி:

நொய்யார் தமக்குமுளங்கையா மலக்கனி
பொய்யா யொழியமிகு மெய்யா யுளதான்மா (ஐயே)

இதைப் பகவானிடம் காட்டி அப்பாட்டிற்கான சரணங்களை எழுதித் தரும்படி கோரினார். பகவானும் ஆன்ம வித்தையின் தத்துவத்தையும்

பலனையும் விளக்கும் வகையில் ஐந்து சரணங்கள் எழுதித் தந்தார். பகவானின் சரணங்களில் விழுந்து பெற்ற சரணங்களோடு கூடிய அந்தக் கீர்த்தனை ஆன்ம வித்தையைத் தெளிவாக விளக்கும் அரிய படைப்பாகும்.

தம் உள்ளத்தில் உறையும் அண்ணுமலை யெனும் ரமண ஒளியில் ஒன்றி, அத்தத்துவத்தின் திருவுருவாகவும் உண்மையான பக்திக்கு ஓர் உறைவிடமாகவும், அருணுசல மகிமைக்கு ஒரு விளக்கமாகவும் இன்று ரமணுச்ரமத்தில் வாழ்ந்து வரும் திரு முருகனுரை தரிசிக்கக் கொடுத்து வைத்தவர்கள் பெரும் பேறு பெற்றவராவார்கள்.

திரு முருகனுர் 'ஸ்ரீ ரமண சரணப் பல்லாண்டு' என்ற நூலை இயற்றியிருக்கிருர். இந்நூலின் முற்பகுதியாகிய 'சரணத் திருவகவல்' அறுநூற்று அறுபத்தாறு அடிகள் கொண்டது. எதுகை, மோனை நயங்களுடன், பொருட்சுவையும் ஓசை இன்பமும் நிரம்பப் பெற்றது. இந்த அகவல் தேவராஜ முதலியார் என்ற ரமண பக்தரின் விருப்பத்திற்கு இணங்கப் பாடப் பெற்றது. இதை,

''ஆவலாய் யிவ்வோ ரகவ லிசைப்பித்த தேவரா யன்மகிழ் தேவா சரணம்'' என்ற அடிகளால் முருகனுர் புலப்படுத்துகிருர்.

ஆயிரம் பிறைகளைக் கண்டு ஐந்தாண்டுகள் கடந்து விட்ட இப் பழம் பெரும் ரமண பக்தர், காஞ்சீபுரத்தில் வசித்து வருவதை அறிந்து அவரைக் காணப் பெரும் ஆவல் கொண்டிருந்தேன். ஆனுல், அதற்கான நல்வாய்ப்பை இறை கூட்டுவிக்காமலே இருந்து வந்தது. சென்ற வாரம் ஒரு நாள் திருவருட் சக்தியால் சென்னையிலேயே அப்பெரியாரைத் தரிசிக்கும் பாக்கியம் பெற்றேன் நான்.

தேவராஜ முதலியாரைக் காணச் சென்ற போது அவரது சகோதரரின் பேரப் பெண் திலகம், மலர்ந்த முகத்துடன் எங்களை வரவேற்று, ''தாத்தா உள்ளே யிருக்கிருர். வந்து விடுவார்'' என்று அன்புடன் கூறி எங்களை முன்னறையில் அமரச் சொன்னுர்.

''நீங்கள் நேற்று வந்திருந்தால் ரொம்ப நல்லாயிருந்திருக்குங்க... தாத்தா எல்லா விஷயமும் நல்லா பேசியிருப்பாரு'' என்ருர் அந்த அம்மாள்.

''ஏன், இன்று அவருக்கு உடல் நலம் சரியில்லையா?'' என்று கவலையுடன் கேட்டேன் நான்.

''அது இல்லீங்க, அவருக்கு அப்படியொரு 'இது'ங்க...ஒரு நாளைக்கு சந்தோஷமா ப்ரைட்டா இருப்பாரு... நல்லா பேசுவாரு... பழைய விஷயங்களெல்லாம் சொல்லுவாரு... மறுநாள் 'கம்'முனு இருப்பாரு... அதிகம் பேச மாட்டாரு ... எதிலுமே 'இன்ட்ரஸ்ட்' இல்லாமெ இருப்பாரு. ஒரு நாள் விட்டு ஒரு நாள் இப்படித்தான் ... இன்னிக்குப் படுக்கையை விட்டு எழுந்திருக்கிற போதே ஒரு மாதிரி யிருந்தாரு... நீங்க நாளைக்கு வந்தால், 'கல கல'ன்னு இருப்பாரு, பேசுவாரு...''

அப்போது மெள்ள நடந்தபடி உள்ளே காலடி எடுத்து வைத்தார் ஒரு வயோதிகர். நெடிய உருவம். நிமிர்ந்த நடை. முதுமையின் ஆதிக்கத்திற்குட்பட்டுத் தளர்ந்து விட்ட உடலானுலும், உள்ளத்தில் நிலவும் அமைதியின் பிரதிபலிப்பாக முகத்தில் ஒரு பொலிவு. மங்கியிருந்தாலும், கனிவு மிகுந்த பார்வை. 'வாங்க, வாங்க' என்று வாயார, நெஞ்சார எங்களை வரவேற்ற வண்ணம் கட்டிலில் அமர்ந்தார் அவர். அறிமுகம் முடிந்த பின்னர், நான் பேச்சைத் தொடங்கினேன்:

''இன்னிக்கு நீங்க அதிகம் பேசமாட்டீங்கன்னு கேள்விப்பட்டேன்... அதனுல் பரவாயில்லே. உங்களோடு கொஞ்ச நேரம் இருந்து விட்டுப் போவதையே பெரிய வாய்ப்பாக நான் கருதுகிறேன்...'' என்றேன்.

அவர் சிரித்துக் கொண்டே, 'அதைப் பற்றிச் சொல்லி விட்டாயா?' என்று கேட்பது போல் பேரப் பெண்ணைப் பார்த்தார். அவரும் பதிலுக்கு சிரித்துவிட்டு என்னைப் பார்த்து மீண்டும் ''நீங்க நேத்து வந்திருந்தா நல்லா யிருந்திருக்கும்'' என்றுர்.

புதுமையான இம்மாதிரி யொரு மன நிலைக்கு என்ன காரணம் என்று அறிய விரும்பினேன். ஆனுல், அது முதலியாருக்கே புரியாத புதிராக இருக்கிறது. அவர் எப்படி விளக்கம் தருவார்?

''தங்களைப்பற்றி தங்களிடமே விசாரித்து நான் தொந்தரவு கொடுக்கப்போவதில்லை. தங்கள் வாழ்க்கைக் குறிப்பைப்பற்றி யாராவது எழுதி யிருக்கிறுர்களா?'' என்று முதியவரிடம் கேட்டேன் நான்.

''இதுவரை யாரும் எழுதியதில்லே. நான், 'பகவான் ரமணரைப் பற்றிய என் நினைவு அலைகள்' என்ற சிறு நூல் ஒன்று எழுதி யிருக்கிறேன். அதில் பகவானை நான் முதன் முதலில் தரிசித்ததைப்பற்றியும், எவ்வாறு நாளடைவில் அவரது எல்லையற்ற அருளுக்கும் ஆசிக்கும் பாத்திரமானேன் என்பதைப் பற்றியும் விரிவாக எழுதி யிருக்கிறேன். அதைப் படித்தால் என் வாழ்க்கை நிகழ்ச்சிகள், என் உத்தியோகம், இன்ப துன்பங்கள் எல்லாவற்றையும் ஓரளவு தெரிந்து கொள்ளலாம். அந்த நூலில் பகவானைவிட என்னைப் பற்றியே அதிகம் எழுதியிருப்பதாகக் கூட சிலர் அப்போது குற்றம் சாட்டினுர்கள்... நீங்களே சொல்லுங்கள், வெகு சாதாரணமான எனக்கு எப்படி பகவானின் அருள் கிடைத்தது என்பதைக் கூற வேண்டுமானுல் என் வாழ்க்கையோடு இணைந்த நிகழ்ச்சிகளைச் சொல்ல வேண்டாமா? அந்த நிகழ்ச்சிகளை விவரிக்கும் போது என்னைப் பற்றிக் கூறித்தானே ஆக வேண்டும்... இது சிலருக்குப் புரியவில்லை...'' என்று அவர் கூறியபோது, அவரது குழந்தையுள்ளம் பளிச்சென்று கண்ணுக்குத் தெரிந்தது. அவருள்ளம் ஒரு தெளிந்த நீரோடை. அதன் அடித் தளத்தில் ரமண படிக லிங்கத்தைத் தரிசிக்க முடிகிறது.

''நான் ரமண மகரிஷியை நேரில் பார்த்ததில்லே. ஆனுல், பகவானது மெய்யடியார்களையும், பக்தர்களையும், அருமைச் சீடர்களையும் காணும் போதும், அவர்களது அருகில் இருக்கும் போதும், எல்லையற்ற மனச் சாந்தியைப் பெறுகிறேன். எனக்கே இப்படி யிருக்கும்போது, அந்தக்

கற்பகத்தருவின் நிழலில் எந் நேரமும் அமர்ந்திருந்த தங்களைப் போன்ற வர்களின் பாக்கியத்தை என்னவென்று சொல்லுவது'' என்று பேச்சைத் தொடர்ந்தேன். அதிகம் பேசாத 'டல்'லான நாளா யிருந்தும், முதலி யாரின் உள்ளத்தில் ஆனந்த வெள்ளம் பொங்குவதையும், அதன் அடை யாளமாக முகம் பூரித்து மலர்வதையும் கண்டு மகிழ்வெய்தினேன் நான்.

''என்னைப் பொறுத்தவரையில் பகவான் எனக்குத் தாயும் தந்தை யும் தஞ்சமும் தெய்வமுமாவார். நான் அவருடைய செல்லக் குழந்தை'' என்றார் முதலியார்.

''தாத்தா தன்னை 'ரமண சேய்' என்றுதான் அழைத்துக் கொள்வார்'' என்றார் திலகம்.

''ஆமாம். பகவானுக்கு நான் கடிதம் எழுதினால், 'அம்மையப்பா' என்றுதான் தொடங்குவேன். கடைசியில் 'ரமண சேய்' என்றுதான் கையெழுத்திடுவேன். அதைப் பகவானும் ஏற்றுக் கொண்டார். தரிசன அறையில் யாராவது 'அம்மையே! அப்பா!' என்று வரும் பாடலைப் பாடினால் பகவான், அறையில் நான் இருக்கிறேனா என்று பார்ப்பார். என்னைப் பார்த்து லேசாகச் சிரிப்பார். அன்று நான் அங்கில்லாவிட்டால், மறுநாள் என்னைக் கண்டதும் முதல்நாள் பாடியவரைப்பற்றியும், அந்தப் பாட்டைப்பற்றியும் கூறுவார். பகவானின் கருணையே கருணை...'' என்று கூறிவிட்டு, பழைய நினைவுகளை அசை போட்டார். அந்தக் கடந்த கால நிகழ்ச்சி, நிகழ்காலக் காட்சியாக என் கண்முன்னே நிழலாடியது.

''நீங்கள் எழுதியுள்ள நூலைப் படித்துப் பார்க்கிறேன். எத்தனை தான் படித்தாலும்,பகவானைப் பற்றி உங்களிடமிருந்து நேரில் கேட்டறிய வேண்டும் என்று எனக்கு ஆவலாக யிருக்கிறது. தொடக்க நாட்களில் தாங்கள் பகவானைத் தரிசித்ததைப்பற்றிக் கொஞ்சம் கூறுங்கள். கேட்ப வரின் உள்ளத்தில் ஆழப்பதிந்து, சிந்தையைத் தெளிவுபடுத்தும் சக்தி, சத்தியவாக்குக்கு உண்டு. அதனால்தான் கேட்கிறேன். தொந்தரவு செய்வ தாக நினைக்காதீர்கள்'' என்று பணிவோடு விண்ணப்பித்துக்கொண்டேன்.

''எழுபத்தோரு வருடங்களுக்கு முன், நான் முதன் முதலில் பகவானைத் தரிசித்தேன். பகவானுக்கு அப்போது இருபத்தோரு வயது. எனக்குப் பதினான்கு வயது. பள்ளியில் படித்துக் கொண்டிருந்தேன். திருக்கோவலூருக்குப் போயிருந்த நான், அங்கே யிருந்து என் உறவுக் காரங்களோட கார்த்திகை தீப தரிசனத்திற்காகத் திருவண்ணாமலைக்குச் சென்றேன். அப்போது மலை மீதிருந்த 'பிராம்மண சுவாமி'களைப் பார்க்க எல்லாரும் போனார்கள் .நானும் போனேன். அவர் அப்போ விருபாட்சிக் குகையிலே இருந்ததா ஞாபகம். பகவான் அப்போ தெல்லாம் யாரோடும் பேசுவதில்லை. கண்ணை மூடிக் கொண்டு, தலையைக் குனிந்து கொண்டு பேசாமல் உட்கார்ந்திருந்தார். கொஞ்ச நேரம் அவர் சந்நிதியில் நின்று விட்டுத் திரும்பி விட்டோம்.

பிறகு பதினான்கு வருடங்கள் கழித்து, 1914-ம் வருஷத்துலே மறுபடி யும் நான் திருவண்ணாமலைக்குச் சென்றேன். என் உறவினரான வேலப் பாடி குப்புசாமி முதலியார், பகவானிடம் அடிக்கடி போய் வந்து

கொண்டிருந்தார். நான் அப்போது சித்தூரில் வக்கீலாகத் தொழில் புரிந்து கொண்டிருந்தேன். வேலூரிலிருந்து வந்திருந்த குப்புசாமி முதலியார், பகவானைத் தரிசித்துவிட்டு வரலாம் என்று அழைத்ததால் அவருடன் சென்றேன். அப்போதும் பகவான் விரூபாட்சி குகையில் தான் வாசம் செய்து கொண்டிருந்தார். நாங்கள் சென்ற போது பகவான், குகைக்கு வெளியே அமர்ந்திருந்தார். அப்போது பகல் இரண்டு மணியிருக்கும். அங்கு வேறு யாருமே இல்லை. பகவானுக்கருகில் இரண்டு மூன்று குரங்குகள் மட்டுமே இருந்தன.

அன்று பகவான் குரங்குகளின் வாழ்க்கையைப்பற்றி என்னிடம் நிரம்ப நேரம் பேசினர். அவற்றின் பழக்கவழக்கங்களைப் பற்றியும் குணுதிசயங்களைப் பற்றியும் வர்ணித்தார். குரங்குக் கூட்டத்தின் ஆட்சி முறையைப் பற்றியும், அவற்றின் ராஜா, ராணி முதலியவற்றைப் பற்றியும் விவரித்தார். பிராணிகளின் வாழ்க்கையைப் பற்றி அவர் அத்தனை நுணுக்கமாக ஆராய்ந்து வைத்திருப்பதைக் குறித்து நான் ஆச்சரியப்பட்டேன்...அன்று பகவான் வேறு ஒன்றுமே பேசவில்லை. நானும் அவரிடம் எதைப் பற்றியுமே கேட்கவில்லை. இரண்டு மணி நேரம் அவரோடு இருந்ததைப் பற்றியும், அவர் பேசியதைக் கேட்டுக் கொண்டிருந்ததைப் பற்றியும் ரொம்பவும் சந்தோஷப்பட்டுக் கொண்டு ஊருக்குத் திரும்பி விட்டேன். அதற்குப் பிறகு நாலைந்து வருஷங்கள் கழித்துப் பகவான் கந்தாச்ரமத்திற்கு மாறிய பிறகு அங்கு சென்று தரிசித்தேன். பின்னர், அவ்வப்போது ஆச்ரமத்திற்குப் போய் வந்தேன். எத்தனையோ கஷ்ட நஷ்டங்களுக்கிடையில் பகவானின் தரிசனத்தாலும், உபதேச மொழிகளாலும் வாழ்க்கையில் சாந்தி பெற்றேன். 1942-ம் ஆண்டு முதல், ஆச்ரமத்திலேயே தங்கிவிட்டேன். ஆறு வருடங்களுக்கு முன், உடல் நலம் குன்றி விட்ட காரணத்தால் அங்கிருந்து வெளியேறி, உறவினர்களின் இல்லங்களில் தங்கி காலங் கடத்தி வருகிறேன். வரவர அசதி அதிகமாகிக் கொண்டு வருது. வயசாகிக்கிட்டுப் போவதால் கண் சரியா தெரியமாட்டேங்குது. எதையும் படிக்க முடியவில்லை...'' என்ருர் முதலியார்.

''நேத்துகூட தாத்தாவைப் பல் டாக்டர்கிட்டே அழைச்சிட்டுப் போனேன்'' என்ருர் பேரப் பெண் குறுக்கிட்டு.

''வயசாஞ ஒண்ணு ஒண்ணு அடங்க வேண்டியதுதானே...''என்ருர் முதலியார் சிரித்துக் கொண்டே.

பேச்சைத் திருப்ப வேண்டும் என்ற ஆவலில், ''பழைய நிகழ்ச்சி ஏதாவது ஒன்றை நினைவுபடுத்திக் கூற முடியுமா?'' என்று கேட்டேன் நான்.

முதலியார் சிந்தனையிலாழ்ந்தார்.

''எத்தனையோ இருக்கு. எதைச் சொல்லுவது என்றுதான் தெரியவில்லை'' என்று கூறியபடி நினைவுச் சுரங்கத்தில் இறங்கி ஒரு ரத்தினத்தை எடுத்துத் தந்தார்.

திருவண்ணுமலைக்கு அநேக முறை சென்றிருந்தும், தேவராஜ முதலியார் கிரிப் பிரதட்சிணம் செய்ததேயில்லை. ஒன்பது மைல் சுற்றி வருவது அவருக்கு வீண் வேலையாகத் தோன்றியது. அதனுல் நற்பயன் ஏற்படும் என்ற நம்பிக்கையும் அவருக்கில்லை.

ஒருசமயம் பகவானைப் பார்த்து, ''பகவானே, எல்லோரும் கிரிப் பிரதட்சிணம் செய்கிருர்களே. தாங்களும் முன்பெல்லாம் கிரிவலம் வரும் வழக்கம் உண்டு என்று கேள்விப்பட்டிருக்கிறேன். அதனுல் என்ன பலன்? அப்படி ஏதாவது பலன் ஏற்பட வேண்டுமானுல் அதில் நமக்கு நம்பிக்கை யிருக்க வேண்டாமா? உள்ளத்தில் நம்பிக்கை யில்லாமல் மலையைச் சுற்றி வருவதால் என்ன நன்மை விளையும்?'' என்று கேட்டார்.

அதைக் கேட்டு பகவான் பொறுமையோடு பதில் கூறினுர்:

''நம்பிக்கை யிருக்கிறதோ, இல்லையோ, நாம் விரும்புகிருேமோ, இல்லையோ, சிலவற்றுக்குச் சில இயல்பான தன்மைகள் உண்டு. அதன் பலன் இருந்து தான் தீரும். நெருப்பு இருக்கிறது. அதில் ஒரு குழந்தை கையை நீட்டினுல், அது விரலைச் சுடத்தான் செய்யும். நெருப்பின் தன்மையைப்பற்றி அது அறிந்திருக்க வேண்டும் என்ற அவசியமில்லை. அதைப் போலவே அருணுசலத்தை வலம் வந்தால் நமக்கு நம்பிக்கை யிருந்தாலும் இல்லாவிட்டாலும் அதற்கான பலன் கிடைத்துத்தான் தீரும். நீ வேண்டுமானுல் ஒருமுறை சுற்றி விட்டு வா. பிறகு, உன்னை அது மீண்டும் இழுக்கிறதா இல்லையா பார்? அதனுல் உனக்கு சாந்தி கிடைப் பதை நீயே உணருவாய்.''

பகவான் கூறியபடியே அருணுசலத்தை வலம் வரத் தொடங்கினுர் தேவராஜ முதலியார். அவரை அறியாமலே அவருக்கு ஆனந்தமும் மனச் சாந்தியும் ஏற்பட்டன.

பொருளற்றது என்று நினைத்த கிரிப் பிரதட்சிணத்தில், பிறருக்குப் புரிய வைக்க முடியாத பயனைப் பெற்ருர் தேவராஜ முதலியார்.

'மெய்ப் பொருளுக்கு அடிமையாகி, சரணுகதி யடைந்துவிட்டால், அமைதி நம்மை நாடி வருகிறது' என்ற பேருண்மையின் தோற்றமாகக் காட்சி தந்த தேவராஜ முதலியாரின் பாதங்களில் நானும் தோழர் பாபுவும் வணங்கி எழுந்தோம்.

''எனக்கா? நமஸ்காரமா? எதற்கு? அதை ஏற்றுக் கொள்ள எனக்கு என்ன அருகதையிருக்கு? உங்கள் நமஸ்காரத்தை நான் பகவானுக்கு அர்ப்பணமாக்கி விடுகிறேன். அவர் மலரடிகளில் சேர்த்து விடுகிறேன்'' என்று நா தழுதழுக்கக் கூறினுர் தேவராஜ முதலியார்.

ஆகா! சரணுகதித் தத்துவத்தை எத்தனை எளிதாக எடுத்து விளக்கி விட்டார் இந்த ரமண பக்தர்!

**க**டல் அலைகள் ஒருநாள் ஓய்ந்தாலும் ஓயலாம். ஆனுல், வாழ்க்கைக் கடலில் அடிக்கும் துன்ப அலைகள் என்றுமே ஓயாது. அவற்ருல் தாக்குண்டு, மூச்சுத் திணறும் நிலையிலும், நிலை குலையாமல் வாழும் அருங்கலையைப் பழகுபவர்கள்தான் உண்மையிலேயே வாழ்ந்த வர்களாகிருர்கள்.



பகவான்

அவ்வாறு துன்பங்களை லேசாக்கிக் கொண்டு வாழ்வதற்கான மனநிலையைப் பெறுவது அத்தனை எளிதல்ல. தெய்வத்தின் துணையும் குருவருளும் இருந்தால்தான் அத்தகைய ஞானத்தைப் பெற முடியும்.

தேவராஜ முதலியாருக்குக் குடும்ப வாழ்க்கையில் அடுத்தடுத்துத் துன்பங்கள் நேர்ந்தன. மூத்த மகளின் தோல்வியுற்ற திருமண வாழ்க்கை, நோயுற்ற மனைவியின் அகால மரணம், திடீரென்று பறிபோன அரசு வழக்கறிஞர் உத்தியோகம், எல்லாவற்றுக்கும் மேலாக தீராத உடல் நோய்—இவற்றின் தாக்குதல்களால் மனநிம்மதியற்றிருந்தவருக்கு, பகவான் ரமணரின் தரிசனம் தென்பையும் நம்பிக்கையையும் அளித்தது. அவ்வப்போது ஆச்ரமத்திற்கு வந்து போய்க் கொண்டிருந்தவர், ஓய்வு பெற்ற பின் அங்கேயே தங்கிவிட்டார். பகவானின் கருணைக் கடாட்சத்தாலும், அருளுபதேசத்தாலும், மன அமைதி பெற்று, ஆசாபாசங்களை வென்று, பற்றற்ற பெருந்துறவியாய் உயர்ந்தார். தம் வாழ்வில் நேர்ந்த இந்த அற்புத மாற்றத்தை, தமது நூலில் தமக்கே உரிய எளிய முறையில் விளக்கியிருக்கிறார் முதலியார். பகவானின் அருளைப் பெற்றதற்கு அடையாளமாக அவர் ஓர் அற்புத நிகழ்ச்சியைக் கூறுகிறார்:

*1939-ம் ஆண்டில், கோடை விடுமுறையின் போது ஆச்ரமத்தில் தங்கி யிருந்தார் முதலியார். ஒருநாள் காலை அவர் கண்ணில் மணல் புகுந்து அவரை மிகவும் வாட்டியது. ஆச்ரமத்திற்கு எதிரில் ஒரு வீட்டில் வசித்து வந்த டாக்டர் மெல்கோட் என்பவரிடம் காட்டினார். அவர் கண்ணைப் பரிசோதித்துப் பார்த்து விட்டு, மருத்துவமனைக்கு அழைத்துச் சென்று, சிறு ஆயுதங்களின் உதவியால் அதை வெளியே எடுக்க முயலுவதாகக் கூறினார். திருவண்ணாமலையில் அதற்கு வசதிகள் இல்லாவிட்டால், சென்னைக்குச் செல்ல வேண்டி யிருக்கும் என்றும், நேரம் கடத்தினால் கண் பார்வையையே இழக்க நேரிடும் என்றும் எச்சரித்தார். அதற்குள் ஆச்ரமத்திற்கு வந்திருந்த சில பக்தர்கள் அங்கு கூடி விட்டனர். அதில் ஒருவர் கண்ணில் தூசி விழுந்ததால் பார்வையை யிழந்தவர். அவரைக் கண்டதும் முதலியார் பயந்தே விட்டார். ''பகவானே, இப்படியொரு சோதனையா? அமைதியையும் ஆனந்தத்தையும் நாடி வந்த இடத்தில் நான் இப்படியோர் அவதிக்குள்ளாக வேண்டும் என்பது தங்கள் சித்தமா?'' என்று மனத்திற்குள் நினைத்துக் கொண்டார். பின்னர் டாக்டரிடம், ''நான் கண்ணில் கொஞ்சம் விளக்கெண்ணெயை விட்டுப் பார்க்கிறேன். அப்படியும் அந்தத் துகள் வெளியே வராவிட்டால் நாம் ஆஸ்பத்திரிக்குப் போவோம்'' என்று கூறினார். அதற்கு டாக்டரும் ஒப்புக் கொண்டார்.*

இருவரும் பகவான் அமர்ந்திருந்த அறைக்குச் சென்றனர். மனத்தில் பிரார்த்தித்துக் கொண்டே முதலியார் நமஸ்காரம் செய்து விட்டு எழுந்தார். தமது கண்ணுக்கு நேர்ந்த விபத்தைப் பற்றிப் பகவானிடம் ஒன்றுமே கூறவில்லை. பின்னர், அங்கிருந்த பணியாளிடம் விளக்கெண்ணெய் கேட்டு வாங்கிக் கொண்டு டாக்டருடன் தமது இருப்பிடத்தை நோக்கி நடந்தார்.

சற்றுத் தொலைவு சென்றவுடன், முதலியாருக்குக் கண்ணில் இருந்த வலி சிறிது குறைந்தது போல் தோன்றியது. உறுத்தலும் அவ்வளவாக இல்லை. அதைப்பற்றி டாக்டரிடம் கூறினர். அதைக் கேட்டு மெல்கோட் ஆச்சரியப்பட்டார். ஆனல், முழு நம்பிக்கை அவருக்கு ஏற்படவில்லை. முதலியாரை அறைக்கு அழைத்துச் சென்று மீண்டும் பரிசோதித்துப் பார்த்தார். டாக்டரால் தம் கண்களை நம்பவே முடியவில்லை. அந்தத் துகள் அங்கே யில்லை. அது எப்படி மறைந்தது என்றே தெரியவில்லை.

முதலியாருக்கு விளக்கெண்ணெய் விட்டுக் கொள்ள வேண்டிய அவசியமே இல்லாமல் போய்விட்டது. கண்ணில் உறுத்தலோ, வலியோ சிறிதும் இல்லை. டாக்டர் ஆச்சரியத்துடன், ''அது எப்படிப் போயிற்று என்றே எனக்குப் புரியவில்லை. எல்லாம் பகவானின் அற்புத லீலையாகத்தான் இருக்க வேண்டும்'' என்ருர்.

இவ்வாறு ஒவ்வொரு சந்தர்ப்பத்திலும் தமக்கிருந்த மனக் குழப்பத்தையும், குறுக்கிட்ட இடர்களையும் நீக்கி, அருட்சக்தியை வெளிப்படுத்திய ஞான குரு, பல ஸித்திகள் பெற்ற மகான் என்பதையும் எடுத்து விளக்கி யிருக்கிருர் தேவராஜ முதலியார். இமைப்பொழுதில் எந்த அற்புதத்தையும் நிகழ்த்திக் காட்டக்கூடிய அரிய சக்திகளைப் பெற்றிருந்தும், எதையுமே வெளியில் காட்டிக் கொள்ளாமல், பக்தர்களின் மனத்தை ஆன்மவிசாரத்தில் திருப்பி, ஞான மார்க்கத்தின் மூலம் முக்தி பெறுவதையே முக்கியமாகப் பகவான் உபதேசித்து வந்தார் என்றும் எடுத்துக்காட்டி யிருக்கிருர்.

ஸ்ரீ தட்சிணமூர்த்தியைப் போல், மௌன குருவாய் உலகோருக்கு உபதேசித்தருளிய பகவான், தமது வாழ் நாளெல்லாம் அடியார்களுடன் அளவளாவி மகிழ்ச்சியூட்டி வந்திருக்கிருர். பழைய நிகழ்ச்சிகளை சுவை குன்ருமல் கூறி யிருக்கிருர். ஊர்க் கதைகள் பேசி உற்சாகப்படுத்தியிருக்கிருர். பத்திரிகைச் செய்திகளைப் படித்துப் பிறருடன் பகிர்ந்து கொண்டிருக்கிருர். அவ்வாறு

திரு தேவராஜ முதலியார்



பகவானிடமிருந்து தாம் கேட்டறிந்த பல செய்திகளைக் குறித்து வைத்துக் கொண்டு தமது நூலில் சேர்த்திருக்கிறார் முதலியார். திருவண்ணாமலைத் தலத்தில் இன்றும் அற்புதங்கள் நிகழ்ந்து வருகின்றன என்பதை உணர்த்துவதற்காகப் பகவான் கூறிய இரு நிகழ்ச்சிகளை அந்நூலில் விவரித்திருக்கிறார் முதலியார்.

ரமண பகவான் திருவண்ணாமலைக்கு வந்த புதிதில் நடந்த நிகழ்ச்சி இது. திருவண்ணாமலை ரயில் நிலையத்தில் வந்து இறங்கிய பெண்மணி யொருத்தி, ஜட்காவில் ஏறிக் கொண்டு ஒரு குறிப்பிட்ட வீதிக்கு ஓட்டச் சொன்னாள். வண்டிக்காரன், வண்டியை ஊருக்கு வெளியே ஓட்டிச் சென்று, அந்தப் பெண்மணியிடமிருந்து நகைகளைப் பறிக்க முயன்றான். அப்போது இரண்டு போலீஸ்காரர்கள் அந்த இடத்தில் தோன்றி, அவளைக் காப்பாற்றி, வீட்டில் கொண்டு போய்ச் சேர்த்தார்கள். போலீஸ்காரர்களின் நம்பர்களைக் குறித்து வைத்துக் கொண்டிருந்த அந்தப் பெண்மணி, அவர்களுக்கு ஏதாவது அன்பளிப்பு அளிக்க வேண்டும் என்ற ஆவலில் மறுநாள் அவர்களைத் தேடிச் சென்றாள். ஆனால், அந்த நம்பர்கள் உடைய போலீஸ்காரர்களே திருவண்ணாமலையில் இல்லை என்று கூறி விட்டார்கள்! முதல் நாள் நடந்த சம்பவத்தைப்பற்றி ஒரு போலீஸ்காரருக்கும் தெரியவுமில்லை!

பகவான் மற்றோர் அற்புத நிகழ்ச்சியையும் கூறியிருக்கிறார். டி. கே. சுந்தரேச ஐயர் என்ற ரமண பக்தரின் வயோதிக உறவினர் ஒருவர் கால் ஊனமாயிருந்தும் கிரிப்பிரதட்சிணம் செய்வது வழக்கம். உறவினர் இல்லத்தில் தங்கி யிருந்த அவர், ஒருநாள் மனம் வெறுத்துப் போய் கிராமத்திற்கே சென்று விடுவது என்று தீர்மானித்து, வீட்டை விட்டுக் கிளம்பி விட்டார்.

அவர் ஊர் எல்லையைக் கடந்து கொண்டிருந்த போது, ஓர் இளம் பிராம்மணன் அங்கு தோன்றி, ''உன் பவிசுக்கு இது வேறேயா?'' என்று கடிந்து கொண்டே அவருடைய ஊன்றுகோலைப் பறித்துக் கொண்டு விட்டான். திடுக்கிட்டுப் போனவருக்குக் கோபம் பற்றிக் கொண்டு வந்தது. என்ன ஆச்சரியம்! அடுத்த கணம் அவர் ஆனந்தத்தில் துள்ளிக் குதித்தார். திடீரென்று அவரது ஊனம் குணமாகி விட்டது! ஊன்று கோல் இல்லாமலேயே நடக்கத் தொடங்கினார்.

அருணாசல புராணத்தில், இதைப் போன்ற கால் முடமான ஒரு பக்தர் தினமும் கிரிவலம் வந்ததாகவும், ஒருநாள் அருணாசலேச்வரரே மனித உருவில் வந்து, அவரது கைக் கட்டைகளை அகற்றி, குணப்படுத்திய தாகவும் கூறப்பட்டுள்ள விவரங்களைப் பகவான் சுட்டிக் காட்டினார்.

அடியார்கள் மீது கருணை கொண்டு இந்த அற்புதங்களை நிகழ்த் தியவர் ரமண பகவானே என்று சிலர் கூறுவதை ஏற்றுக் கொள்ளும் தேவராஜ முதலியார், பகவானே நிகழ்த்திக் காட்டிய ஓர் அதிசயத்தை யும் நினைவு கூர்கிறார்.

ராஜகோபால ஐயர் ஒரு ரமண பக்தர். அவருக்கு ரமணன் என்ற பெயர்கொண்ட மூன்று வயது நிரம்பிய ஒரு மகன் இருந்தான்.



ரமணாச்ரமத்தில் இருக்கும் 'லட்சுமி'யின் சமாதி

சூட்டிகையான பையன். தினமும் பகவானிடம் வந்து, நமஸ்காரம் செய்து விட்டு ஓடி விடுவான்.

ஒரு நாள் இரவு எட்டு மணியிருக்கும். அச் சிறுவனைப் பாம்பு கடித்து விட்டது. ராஜகோபால ஐயர் முதல் சிகிச்சை கூட அளிக்காமல் மகனைத் தூக்கிக் கொண்டு பகவானின் சந்நிதிக்கு ஓடினார். சிறுவனுக்குக் கை கால்கள் விரைத்துப் போய் விட்டன. உடலில் நீலம் பாய்ந்து விட்டது. அடங்கப் போகும் அவனுடைய மூச்சு லேசாக இயங்கிக் கொண்டிருந்தது.

பகவான், சிறுவனின் உடலின் மீது தம் கரத்தால் தடவிக் கொடுத்தபடியே, ''டேய் ரமணா, உனக்கு ஒன்றுமில்லை. எல்லாம் சரியாய்ப் போய் விட்டது. எழுந்திரு'' என்றார். அவ்வளவுதான். பையன் கண் விழித்துப் பார்த்தான்.

புராண காலங்களில் மட்டுமின்றி, தற்போதும் பாரதத்தில், பகுத்தறிவுக்கு எட்டாத, பல அற்புதங்கள் நிகழ்ந்து வருகின்றன என்பதற்கு உதாரணமாக, வட நாட்டில் நிகழ்ந்த இரு நிகழ்ச்சிகளையும் பகவான், தேவராஜ முதலியாரிடம் கூறி யிருக்கிறார்.

ரயில்வே கார்டு ஒருவர் பரம பக்திமானாக இருந்தார். பஜனைகளில் பங்குகொண்டு, உள்ளம் உருக, கண்ணீர் மல்க, நாம சங்கீர்த்தனம் செய்வார். ஒரு நாள் இரவெல்லாம் அகண்ட பஜனையில் ஈடுபட்டதன் காரணமாக காலை வெகு நேரம் தூங்கி விட்டார். அவர் ட்யூடியில் சென்றிருக்க வேண்டிய ரயில் போய் விட்டது. கண்விழித்தவர் அதை அறிந்து மிகவும் சஞ்சலப்பட்டார். அவசர அவசரமாக உடையணிந்து கொண்டு,அடுத்து புறப்படப்போகும் வண்டியில் ஏறி அமர்ந்தார். திரும்பி வரும்போதாவது முதலில் சென்ற வண்டியில் பயணம் செய்யலாம் என்று முடிவு செய்தார்.

அப்போது அவருடைய நண்பர்கள் சிலர் அவரை அங்கு கண்டு ஆச்சரியப்பட்டனர். ''நீங்கள் முதல் ரயிலில் 'ட்யூடி'யில் போய் விட்டு எப்படி இத்தனை சீக்கிரம் திரும்பினீர்கள்?'' என்று கேட்டனர். அவர் விழித்தார். அப்படிக் கேட்டவர்களுக்குப் பைத்தியம் பிடித்து விட்டதோ என்று எண்ணினார். இவருக்கு ஏதாவது புத்திக் கோளாறோ என்று நண்பர்கள் நினைத்தனர்!

வழி யெங்கும் எல்லா ஸ்டேஷன்களிலும் சக ஊழியர்கள் அவரிடம் இதையே கேட்டனர். முதலில் சென்ற ரயிலுக்குச் சம்பந்தமான

குறிப்பேடுகளில் அவரது கையெழுத்து இருப்பதைக் காட்டினர். கார்டுக்கு ஒன்றுமே புரியவில்லை. அவருக்குத் தலையைச் சுற்றியது.

அந்த ரயில் வண்டி லாகூரை அடைந்தது. கார்டு கீழே இறங்கினர். கார்டுகள் தங்கும் அறைக்குச் சென்றார். முதல் ரயிலைத் தவற விட்டதைப் பற்றி அங்கிருந்தவர்களிடம் அவர் கூறிய போது அவர்கள் சிரித்தார்கள். ''உங்களுக்கு என்ன, பைத்தியம் பிடித்து விட்டதா? நீங்கள் முதல் வண்டியில் வந்தீர்கள்; உங்கள் உடைகளைக் கழற்றி கோட் ஸ்டாண்டில் மாட்டி விட்டு குளிக்கச் சென்றீர்கள்! இப்போது வந்து இப்படிச் சொல்கிறீர்களே! உங்களுக்கு ஞாபக மறதியா, இல்லை, மூளைக் கோளாறு?'' என்று கேட்டார்கள்.

அந்த உடைகள் கோட் ஸ்டாண்டில் அப்படியே இருந்தன. 'யாரோ' கொண்டு வந்து அவற்றை அங்கு வைத்து விட்டுப் போயிருக்க வேண்டும். இந்த பக்தருக்குப் பதில், அவரைப் போலவே தோற்றம் உள்ள வேறொருவர் முதல் ரயிலில் பயணம் செய்து, குறிப்பேடுகளில் கையெழுத்துப் போட்டிருக்கிறார். பக்தர் வந்து விட்ட பிறகு அந்த 'யாரோ' ஒருவர் தாம் வந்த காரியம் முடிந்து விட்டதும் அங்கிருந்து போய் விட்டார். அந்த உடைகள் இன்னும் பாதுகாக்கப்பட்டு வருகின்றன.

இந்த நிகழ்ச்சிக்குப் பிறகு அந்த ரயில்வே கார்டு தமது வேலையை ராஜிநாமா செய்து விட்டார். ''எனக்காக கார்டு உத்தியோகம் பார்த்த கடவுள், என்னைக் காப்பாற்ற மாட்டாரா? சே, இந்த நம்பிக்கையின்றி இத்தனை நாள் வாழ்ந்திருக்கிறேனே'' என்று தம்மை நொந்து கொண்டார் அவர். பிறகு, ஆண்டவனிடம் பரிபூரண சரணாகதி யடைந்து, எந்நேரமும் பக்தியால் உருகிக் கரைந்து கொண்டிருந்தார் அவர்.

அறுபது வருடங்களுக்கு முன்பு நடந்த இந்த நிகழ்ச்சி ஒரு பத்திரிகையில் வெளி வந்திருந்தது. அந்தப் பத்திரிகையை ஆச்ரமத்தின் நூல் நிலையத்திலிருந்து கொண்டு வரச் சொல்லி, முதலியாரிடம் கொடுத்துப் படிக்கச் சொன்னார் பகவான்.

சில வருடங்களுக்குப் பிறகு மற்றோர் உண்மை நிகழ்ச்சியும் ப்த்திரிகையில் வெளி வந்தது.

இது நடந்தது மத்தியப் பிரதேசத்தில். ராணுவத்தில் சுபேதாராக இருந்த ஒருவர், பெரிய பக்திமானாக இருந்தார். பஜனை கோஷ்டியுடன் சேர்ந்து, மெய்ம்மறந்து பாடுவதில் அவருக்கு என்றுமே நாட்டமுண்டு.

ராணுவ முகாம் இருந்த இடத்திற்கு அருகில் வசித்து வந்த கிராம மக்கள், தினமும் இரவில் பஜனை செய்வது வழக்கம். காவல் பணி அளிக்கப்பட்டிருந்த அந்த அதிகாரி, பஜனை கோஷத்தைக் கேட்டதும், வேலையை விட்டு விட்டு அங்கு போய் விடுவார். ஆண்டவனின் திருநாமம் அவரைக் காந்தமாக இழுத்தது.

கடமையைச் செய்யத் தவறிய இந்த பக்திமானை உயர் அதிகாரி கடுமையாகக் கண்டித்தார். ''ராணுவத்தில் கடமையைச் செய்யத் தவறு

பவருக்கு என்ன தண்டனை என்று தெரியும் அல்லவா? சுட்டுக் கொன்று விடுவார்கள். உத்தியோகத்தில் நீங்கள் நற்பெயர் வாங்கி யிருப்பதால் இம்முறை உங்களை மன்னித்து விடுகிறேன். மறுமுறை இவ்வாறு நடந்தால் நீங்கள் சுட்டுக் கொல்லப்படுவீர்கள்'' என்று எச்சரித்தார்.

இனி ஒழுங்காக நடந்து கொள்வதாக உறுதியளித்தார் சுபேதார். ஆனால், மறுநாளே, பஜனை தொடங்கியதும் மறு சிந்தனையின்றி, கடமையையும் மறந்து, ஓடிச் சென்று கிராம மக்களுடன் சேர்ந்து கொண்டு நாம சங்கீர்த்தனம் செய்யத் தொடங்கி விட்டார். மறு நாட் காலை மேலதிகாரியிடம் சென்று உண்மையை ஒப்புக் கொண்டார்:

''நேற்றைய தினமும் நான் கடமையிலிருந்து தவறி விட்டேன். 'ட்யூடி'யை விட்டுப் பஜனைக்கு ஓடி விட்டேன். அங்கு போகாமல் என்னால் இருக்க முடியவில்லை. ராணுவ விதிகளின்படி என்னைச் சுட்டுக் கொன்று விடுங்கள்'' என்றார்.

மேலதிகாரிக்குத் தூக்கிவாரிப் போட்டது. ''என்ன! ஏதாவது கனவு கண்டாயா? அல்லது உனக்குப் பைத்தியம் பிடித்து விட்டதா? நேற்று இரவு இரண்டு முறை நான் முகாமைச் சுற்றி ரோந்து வந்தேன். இரண்டு முறையும் நீ 'ட்யூடி'யில் இருந்ததைப் பார்த்தேன். அப்படி யிருக்கும் போது, 'நேற்று இரவு 'ட்யூடி' பார்க்காமல் பஜனையில் கலந்து கொள்ளச் சென்று விட்டேன்' என்கிறாயே, வேடிக்கையாகத்தானே இருக்கிறது'' என்றார் மேலதிகாரி.

அப்போதுதான் அந்த பக்தருக்கு கடவுளின் மகிமை புரிந்தது. தம் நாமாக்கள் எனும் அமுதத்தில் மூழ்கியிருந்தவரைக் காப்பாற்றுவதற்காக, ஆண்டவனே ஓர் இரவு சுபேதாராகப் பணியாற்றியதை நினைத்த போது அவர் உள்ளம் பக்தியால் கரைந்தது. அதற்குப் பிறகு ஆண்டவனின் திருத்தொண்டிற்குத் தம்மை அர்ப்பணித்துக்கொண்டார்.

மகான்களும் ஞானிகளும் பக்தர்களின் கனவில் தோன்றி அருள் வழங்குவதைப் பற்றி நிறையக் கேள்விப் படுகிறோம். ரமண பகவானும் அவ்வாறு கனவில் தோன்றி அடியார்களை ஆட்கொண்டதைப்பற்றிய இரு நிகழ்ச்சிகளையும் முதலியார் குறிப்பிட்டிருக்கிறார்:

மாதவசாமி என்பவர் பகவானுக்கு அன்புத் தொண்டு புரிந்து வந்தார். அவரிடம் பகவான் ஒரு நாள் ஆச்ரமத்தின் ஆபீசிலிருந்து சிறு பாக்கெட் நோட் புக் ஒன்று எடுத்து வரச் சொன்னார். ஆனால், அவர் மறந்து விட்டார். மறு நாளும் பகவான் நினைவு படுத்தினார். ஏனோ தெரியவில்லை. அன்றும் மாதவசாமிக்கு அதைப் பற்றிய நினைவேயில்லை. மூன்றாம் நாள் கே. கே. நம்பியார் என்ற டிஸ்ட்ரிக்ட் போர்டு என்ஜினீயர் பகவானுக்குத் தேவையான நோட் புக்கைக் கொண்டு வந்து தந்தார். ஆச்சரியமடைந்த பகவான், ''இதை ஏன் எனக்குக் கொண்டு வந்து தந்தீர்கள்?'' என்று அவரிடம் கேட்டார்.

''பகவான் கொண்டு வரச் சொன்னார். எடுத்து வந்தேன்'' என்றார் நம்பியார்.

''என்னது? உங்ககிட்டே என்னிக்குச் சொன்னேன்?'' என்று கேட்டார் பகவான்.

பின்னர், பகவான் முதல் நாள் தம் கனவில் தோன்றி தமக்கு ஒரு நோட் புக் தேவையென்றும் அது எம்மாதிரி யிருக்க வேண்டும் என்றும் கூறியதாகவும், அதனுல் அதை எடுத்து வந்ததாகவும் கூறினுர் நம்பியார். அப்போது பகவான், மாதவசாமியைப் பார்த்து, ''நீ எனக்கு நோட்புக் கொடுக்கவில்லை. இதோ பாரு, நம்பியார் கொண்டு வந்து கொடுத் திருக்கிறுர்'' என்று விளையாட்டுச் சிரிப்புடன் கூறினுர்.

ஒரு சமயம் ஆச்ரமத்தில் பேனு மை தீர்ந்து விட்டது. அப்போது சேலத்தில் இருந்த டி. எஸ். ராஜகோபால ஐயர் என்ற பக்தரின் கனவில் பகவான் தோன்றி, மை வேண்டுமென்று கேட்க, அவர் ஒரு ஜாடி நிறைய மை கொண்டு வந்து கொடுத்தார். அப்போதும் அவர் கூறியதைக் கேட்டு ஆச்சரியப்பட்டார் பகவான்.

பகவான் ரமணரின் உண்மை சொரூபத்தை நேரில் தரிசித்த ஒரு நேபாள பக்தர் கூறியுள்ளதையும் நினைவு படுத்துகிறுர் முதலியார்.

நேபாளத்திலிருக்கும் திரிசேந்திரா கல்லூரியின் முதல்வரான திரு ருத்ரராஜ் பாண்டே என்பவர் ஆச்ரமத்திற்கு வந்து பகவானின் சந்நிதி யில் சிறிது நேரம் இருந்துவிட்டு அருணுசலேச்வரரைத் தரிசிக்கக் கோயிலுக்குச் சென்றுர். அங்கு என்ன நடந்தது என்பதை அவரே கூறக் கேட்போம்:

> ''கருவறையின் அருகில் ஓர் எண்ணெய் விளக்கு மினுக்கிக் கொண் டிருந்தது. என்னை அழைத்துச் சென்றவர், 'அருணுசலா' என்று மெல் லிய குரலில் கூவினுர். உடனே என் கவனமெல்லாம் கருவறையினுள் இருந்த சிவலிங்கத்தின் மீது பதிந்தது. என்ன அதிசயம்! அங்கு லிங்கத் திற்குப் பதில் ரமண மகரிஷியின் உருவத்தைக் காண்கிறேன். சிரித்த முகத்துடன், ஒளிமிகு கண்களுடன் என்னை அவர் பார்க்கிறுர். ஆச்சரி யம் என்னவென்றுல், ஒன்றல்ல, இரண்டல்ல, மூன்றல்ல, நூற்றுக் கணக்கான சிரித்த முகங்களையும் பிரகாசமான கண்களையும் காண் கிறேன். கருவறையில் திரும்பும் இடங்களிலெல்லாம் மகரிஷியின் தோற்றத்தைத் தரிசிக்கிறேன். அருணுசலேச்வரரைக் காண ஆலயத்திற்குச் சென்றேன். அங்கு அவர் நடமாடும் தெய்வமாகக் காட்சி தந்ததைக் கண்டு ஆனந்தித்தேன்.''

ஸ்ரீ ரமண பகவான் பெரும்பாலும் மௌனத்தாலேயே அடியார்களை ஆட்கொண்ட ஆன்மிக வள்ளல். அன்னுரது திருச்சந்நிதியில் அமர்ந்த வர்கள், அவரது அருட்பார்வை பேசிய மௌன மொழியைக் கேட்டு மனச்சாந்தி பெற்றதில் வியப்பில்லை.

பகவானது கருணுகடாட்சம் ஒவ்வொருவருக்கு ஒவ்வொரு சமயத் தில் ஒவ்வொரு மாதிரியான பொருளைத் தரும். அவரவர் மனவெழுச்சிக் கும் மனநிலைக்கும் மனப்போராட்டத்திற்கும் ஏற்றவாறு அது அமையும்.

முகவைக் கண்ண முருகனர் தமது 'ரமண சந்நிதி முறை'யில், 'அஞ்ச லெனச் சொல்லி யெனையாண்ட பெம்மான்' என்றும், 'அஞ்சல் அஞ்சல் என்றே அணிவாய் மலர்ந்தடியார் சஞ்சலங்கள் போக்குமவன்' என்றும் கூறியிருக்கிறார். இதைப்பற்றி தேவராஜ முதலியார் ஒரு சமயம் முருகனரிடம் குறிப்பிட்டு, ''கவி என்றால் எதை வேண்டுமானாலும் கற்பனை செய்து எழுதி விடுவதா? 'பயப்படாதே' என்று பகவான் உங்களிடம் எப்போதாவது கூறியிருக்கிறாரா?'' என்று கேட்டார்.

அதைக் கேட்டு முருகனர் சற்று உணர்ச்சியுடன், ''பகவான் பேசா விட்டால் என்ன? அவருடைய கண் பார்வை என்னை நோக்கி 'நான் இருக்கிறேன், நீ பயப்படாதே' என்று கூறுவது போலிருக்கிறது'' என்று பதிலளித்தார்.

அதற்கு மேல் முதலியாரால் ஒன்றுமே பேச முடியவில்லை. பகவானின் அருள்நோக்கில் அவரும் மூழ்கித் திளைத்திருக்கிறாரே! ''நீ கவலைப் படாதே. உனக்கு அடைக்கலம் தந்து காப்பாற்றுகிறேன்'' என்று பகவானின் அருள்நோக்கு ஆயிரம் முறை அவருக்கு அபயம் அளித்திருக்கிறதே!

மௌனத்தாலேயே பக்தர்களின் பல சந்தேகங்களையும் சஞ்சலங்களையும் போக்கியருளும் பகவானிடம் உரையாட வேண்டும் என்றும் அவர் திருவாய் மலர்ந்தருளுவதைக் கேட்க வேண்டும் என்றும் தணியாத ஆவலோடு ஆச்ரமத்திற்கு வந்தவர்களும் உண்டு. அப்படி வருபவர்களில் பலர், 'மனத்தை அடக்குவதற்கு எது எளிதான வழி?' என்று பகவானிடம் கேட்பார்கள். அதற்குப் பகவான் தமது ஆன்ம விசாரத் தத்துவத்திற்கு ஏற்ற வகையில் பதிலளிப்பார்:

''மனத்தை அடக்க வேண்டும் என்று நினைப்பது யார்? இந்தக் கேள்வியைக் கேட்கும் 'நான்' எது? அதை அறிந்து கொண்டு விட்டால், எல்லா பிரச்னைகளும் தீர்ந்துவிடும்.''

ஆன்மிக சாந்தி பெற வேண்டும் என்று எண்ணுபவர்கள் எந்த முறையைப் பின்பற்றினாலும், தங்கள் எண்ண ஓட்டங்களைத் தடுத்து, மனத்தை அடக்கித்தானே ஆகவேண்டும். அவர்களுக்குப் பகவான் வழங்கிய நல்லுபதேசம் என்றும் நினைவிற்கொள்ளத் தக்கது.

> 'இதற்குக் குறுக்கு வழியே கிடையாது. இதற்கு ஒரே நேர் வழிதான் உண்டு. பகவத் கீதையில் கூறியுள்ளபடி, கட்டவிழ்ந்த குரங்காகச் சஞ்சலமுற்ற மனம் வெளியே ஓடியலையும் போது, அதை இழுத்துப் பிடித்து, ஒருநிலைப்படுத்தி ஆன்ம சொரூபத்தில் பதிய வைக்க வேண்டும். இது எளிதானது அல்ல. இருப்பினும் இந்தப் பயிற்சியை விடாது செய்து வர வேண்டும். நாளடைவில் பழகப் பழக, மனத்தைக் கட்டுப்படுத்தும் வலிமையை நாம் பெற்று, அதை அடிமையாக்கி அடக்கியாளும் எசமானனாகி விடுவோம்.'

பகவானிடம் வருபவர்களில் பலர், ''ஆன்ம தரிசனம் பெற வேண்டுமானால், குடும்பத்தையும் உத்தியோகத்தையும் விட்டுவிட்டுக் காட்டுக்குப்

போய்த் துறவியாய் வாழ்ந்தால்தான் முடியுமா?'' என்று கேட்பார்கள். அதற்குப் பகவான் வழக்கமாகத் தரும் பதில் இதுதான்:

''துறவு என்பது நம் மனத்தைப் பொறுத்த நிலை. ஒருவன் தன் குடும்பத்துடன் பட்டணத்தில் வசித்தாலும், பந்தபாசங்களற்ற ஒரு சந்நியாசியாக வாழ முடியும். அதைப் போலவே ஒருவன் தன் மனைவி மக்களையும் உத்தியோகத்தையும் சொத்துக்களையும் விட்டு விட்டு காட்டுக்குப் போன பிறகும், அவனுடைய மனம் அவற்றையே நினைத்துக் கொண்டிருந்தால், அவன் சம்சாரியாகவே இருப்பான். காட்டுக்குப் போய் என்ன பிரயோஜனம்? வீட்டையும் உறவினரையும் விட்டு வந்து விட்டாலும் உன் மனம் உன்னுடனேயே வந்து விடுகிறதே! 'நான் ஒரு சம்சாரி' என்ற எண்ணம் போய், 'நான் ஒரு சந்நியாசி' என்ற எண்ணம் இருக்கப் போகிறது. புதிய பற்றும் பாசமும் தோன்றும். நாம், நம் மனத்தையே துறந்து விட வேண்டும். 'நான்' 'நமது' என்ற எண்ணங்களையே விலக்கி விட வேண்டும்.''

ஒரு சமயம் தேவராஜ முதலியார் பகவானைப் பார்த்து, ''ஆடு மாடுகள் போன்ற பிராணிகளுக்கு முக்தி கிடையாது என்று சொல்லுகிறார்களே. 'பிராணிகள் மனிதப் பிறவி யெடுத்து, மனிதனாக வாழ்ந்த பிறகுதான் ஆன்ம விடுதலை பெற முடியும்' என்று புத்தகத்திலும் படித்திருக்கிறேனே. இது உண்மையா?'' என்று கேட்டார்.

அதற்கு பகவான், ''அப்படி யொன்றுமில்லை. கஜேந்திர மோட்சம் கதையை நீ கேள்விப்பட்டதில்லையா?'' என்று திருப்பிக் கேட்டார்.

ஆச்ரமத்திலிருந்த லட்சுமி என்ற பசு இறப்பதற்கு ஓராண்டுக்கு முன் இந்தப் பேச்சு நடைபெற்றது. லட்சுமி இறந்தபோது தேவராஜ முதலியார் ஆச்ரமத்திலில்லை. ஒரு மாதம் கடந்த பிறகு முதலியார் பகவானைத் தரிசிக்கச் சென்ற போது, லட்சுமியின் சமாதியில் பொறிக்கப் படுவதற்காகத் தாம் எழுதியுள்ள ஒரு பாட்டை பகவான் அவரிடம் காட்டினார். அதில் கடைசி வரியில் வரும் 'விமுக்தி நாள்' என்பதைச் சுட்டிக் காட்டி முதலியார் பகவானிடம், ''லட்சுமி முக்தியடைந்த தினத்தை இது குறிக்கிறதா, அல்லது...''என்று இழுத்தார். 'இறந்து விட்டது என்று சொல்லுவதற்குப் பதில் இவ்வாறு கூறியிருக்கிறாரா, அல்லது உண்மையிலேயே அந்தப் பசுவிற்கு மோட்சம் கிடைத்து விட்டதா?' என்று முதலியார் கேட்க நினைத்ததை அறிந்து கொண்ட பகவான், ''அந்த வார்த்தைக்கு 'முக்தியடைந்து விட்டது' என்றுதான் அர்த்தம்'' என்று சந்தேகத்திற்கிடமின்றிக் கூறினார். பின்னர், பக்தர்கள் லட்சுமியைப் பற்றி பல மொழிகளில் எழுதி யிருந்த கவிதைகளை முதலியாரிடம் தந்து படிக்கச் சொன்னார். லட்சுமி, ஆச்ரமத்திற்கு எப்படி வந்து சேர்ந்தது என்ற விவரத்திலிருந்து தொடங்கி, எல்லா நிகழ்ச்சிகளையும் ஒன்று விடாமல் அவரிடம் கூறினார். அந்த விவரங்களை யெல்லாம் அப்படியே எழுதிப் பகவானிடம் காட்ட, அவர் அதைத் திருத்திக் கொடுத்தார். அது ஒரு சிறு பிரசுரமாக ரமணாச்ரமத்தாரால் தற்போது வெளியிடப்பட்டிருக்கிறது.

ஒருநாள் பகவானுடன் பேசிக் கொண்டிருந்த போது தேவராஜ முதலியார், ''பகவானே! முக்தியைப் பற்றி எனக்கு ஒன்றுமே தெரியாது. எனக்கு மோட்சத்தைப்பற்றிய கவலை கூடக் கிடையாது. நான் எப்போதும் சந்தோஷமாக இருந்தால் போதும், வேறு ஒன்றும் வேண்டாம்'' என்றார்.

அதற்குப் பகவான், ''நீங்கள் அந்த வார்த்தையை உபயோகப் படுத்தாவிட்டாலும், நீங்கள் மோட்சத்தைத் தான் விரும்புகிறீர்கள். நீங்கள் விரும்பும் எல்லையற்ற பேரானந்தம் ஆன்ம விடுதலையின் மூலம் தான் கிடைக்கும். அதுதான் முக்தி யென்பது. அதாவது அஞ்ஞானம் விலகி, மெய்யறிவு பெறுவதைத்தான் முக்தி என்கிறோம்.

''மனிதன் ஆனந்தத்தை நாடுவதில் தவறொன்றுமில்லை. ஏனெனில், எப்போதும் ஆனந்த நிலையில் இருப்பதுதான் அவனுடைய இயல்பு. ஆனால் உலகப் பொருள்களில் அந்த ஆனந்தத்தைப் பெறலாம் என்று நினைப்பதுதான் தவறு. அழிவற்ற ஆன்ம வஸ்துவில் மனத்தைப் பதிய வைப்பதன் மூலமே நாம் நிரந்தரமான ஆனந்தத்தைப் பெற முடியும்'' என்ற பேருண்மையைப் பகவானிடமிருந்து பெறற்கரிய உபதேசமாகப் பெற்றார் தேவராஜ முதலியார்.

பகவான் ரமணர், ஆன்ம விடுதலைக்கு ஞான மார்க்கத்தை உபதேசித்தருளிய மெய்ஞானியாவார். அதே நேரத்தில் கடவுட் பக்தியில் திளைத்த பரம பக்தருமாவார். இளவயதில் நாயன்மார்களின் வரலாற்றைப் படித்துப் படித்து நெக்குருகி, கண்ணீர் சிந்திய அவர், முதிய பருவத்திலும் புராணக் கதைகளைக் கேட்கும்போதெல்லாம் நெக்குருகுவார். ஆண்டவனின் திருவிளையாடல்களையும் மெய்யடியார் களின் துயரங்களையும் கேட்டுக் கண்ணீர் வடிப்பார்.

ஆண்டவனின் திருநாமத்தை எந்நேரத்திலும் உச்சரிக்கும்படியும், நேரம் கிடைத்தபோது நாம சங்கீர்த்தனம் செய்யும்படியும் அவர் அநேக பக்தர்களிடம் கூறியிருக்கிறார். ராமன், கிருஷ்ணன், சிவன், முருகன் போன்ற தெய்வத் திருநாமங்களே நம்மை உய்விக்கும் சக்தி பெற்றவை என்பதை உணர்த்தி யிருக்கிறார். 'கடவுளும் கடவுளின் திருநாமமும் வெவ்வேறானவை யல்ல' என்று பகவான் கூறுவது வழக்கம்.

பக்தியோகத்தின் அடிப்படையே சரணாகதிதான். அந்த சரணாகதி தத்துவத்தை தேவராஜ முதலியாருக்குச் சந்தேகத்திற்கிடமின்றி உபதேசித்தருளினார் பகவான்.

ஒருநாள் முதலியார் நிம்மதியற்றிருந்தார். பகவான் தம்மைப் பரிபூரணமாக ஆட்கொள்ளவில்லை யென்றும், தமக்குத் தேவையான வற்றை யெல்லாம் செய்யவில்லை யென்றும் மனக் குறைப்பட்டார். நேரே பகவானிடம் சென்றார். சிவப்பிரகாசம் பிள்ளை இயற்றியுள்ள மூன்று பாடல்களைப் பாடினார். ''பகவானே, என் மனத்தில் உள்ள வருத்தத்தை இந்தப் பாடல்கள் தெளிவாகக் கூறுகின்றன. தயவு செய்து செவி மடுக்க வேண்டும்'' என்று பிரார்த்தித்துக் கொண்டார். அப்பாடல் களில் அடங்கியுள்ள கருத்து இவைதான்:

'நாம் எத்தனை தான் திட்டங்கள் போட்டாலும் ஆண்டவனின் அருளின்றி எதுவுமே நடைபெறுது என்றும், ஒரு திட்டமும் போடாமல் சும்மா இருப்பவனே சிறந்த பக்தன் என்றும் தாங்கள் உபதேசித்திருக்கிறீர்கள். ஆனல், உங்கள் உபதேசப்படி என்னல் நடந்து கொள்ள முடியவில்லை. என் மனத்தை அடக்க முடியவில்லை.'

'குருதேவா, தாங்கள் காட்டிய புனித வழியை என்னல் பின்பற்ற முடியவில்லை. உலகப் பற்றையும், பாசத்தையும் என்னல் விட முடியவில்லை. 'அழிக்கக்கூடிய உடல் நான் அல்ல' என்ற உண்மையைப் புரிய வைத்திருக்கிறீர்களே தவிர, உண்மை நிலையை உணரும்படி தாங்கள் செய்யவில்லையே! கருணையுள்ளம் படைத்த குருவானவர் தம் அடிமையைத் திருத்தி நல்வழிப்படுத்த வேண்டும். ஒன்றுக்கும் உதவாதவன் என்று அவனை ஒதுக்கித் தள்ளி விடக் கூடாது.'

'நான் போகும் வழியிலேயே என்னை விட்டு விட்டால் நான் உய்வது எங்ஙனம்? பலவீனனுன என்னல் என்னைத் திருத்திக் கொள்ள முடியவில்லை. தாங்களும் என்னைத் திருத்தாமல் இருக்கிறீர்கள். தங்களை விட்டால் இப்பிறவியிலும் மறு பிறவியிலும் எனக்கு வேறு கதி ஏது? உங்கள் எண்ணம்தான் என்ன? என்னை என்னதான் செய்யப் போகிறீர்கள்? தாங்கள் பாராமுகமாய் இருப்பது சரியா, சற்குருநாதா?'

உண்மையான பக்தன், நெஞ்சுருகப் பிரார்த்திக்கும்போது பகவான் செவி சாய்க்காமல் இருப்பாரா? கருணைத் தெய்வம் பேசிற்று:

''நான் செய்யறேனே இல்லையோ, அதைப்பற்றி உனக்கென்ன? நீ சரண்டர் (சரணுகதி) பண்ணிவிட்டு சும்மா யிருக்க வேண்டியதுதானே.''

உண்மையான பக்தன் எப்படி இருக்க வேண்டும் என்பதை உலகிற்கு ஞானபகவான் எத்தனை எளிதாக உபதேசித்து விட்டார்!

* (திரு தேவராஜ முதலியார் 15—6—72 அன்று ஸ்ரீ ரமணரடி சேர்ந்தார்.)




திருவண்ணாமலை வீதியில் திருப்புகழ் முழக்கம்

இள வயதில் இதயத்தில் அருணாசலத் திருநாமம் ஓயாது ஒலிக்க, ஒளியைத் தேடி திருவருணைத்தலம் வந்து, அருணாசலத்தின் மடியில் தவழ்ந்து, அந்த ஞான மலையின் திருவடிவாய்த் திகழ்ந்து, நாடி வந்தவர்களுக்கெல்லாம் நற்கதி யருளி, சரணடைந்தவர்களைச் சம்சாரக் கடலினின்றும் மீட்டு, கலியுகத்தில் காண்பதற்கரிய கருணாமூர்த்தியாய்க் காட்சியளித்தவர் பகவான் ரமண மகரிஷி அவர்கள். அம்மகானின் தரிசனத்தாலேயே மனச் சாந்தி பெற்றவர்களும், அவர் திருச் சந்நிதியில் அமர்ந்ததாலேயே பேரானந்தம் அடைந்தவர்களும், கடைக்கண் பார்வையால் கர்ம வினைகள் நீங்கியவர்களும், உபதேச மொழிகள் கேட்டு உன்னத நிலையடைந்தவர்களும் தத்தம் அனுபவங்களைச் சொல்லிச் சொல்லி, எழுதி எழுதித் தாங்கள் புண்ணியம் பெற்றதோடு, கேட்பவர்களையும் படிப்பவர்களையும் புனிதப்படுத்தி வருகிறார்கள். அத்தகைய ரமண பக்தர்கள் சிலரைப் பற்றி எழுதியதன் மூலம் ஸ்ரீ ரமண தத்துவத்தின் சிறப்பை ஓரளவு விளக்க முடிந்தது. 'எந்தரோ மகானுபாவுலு அந்தரிகி வந்தனமு'

என்று தியாகப் பிரம்மம் கண்ணுக்குத் தெரியாமல் எண் திசைகளிலும் பரந்து கிடக்கும் மகான்களுக்கெல்லாம் மானசீகமாக நமஸ்காரம் செய்தது போல், நானும் உலகின் பல பகுதிகளிலும் வாழ்ந்த, வாழ்ந்து கொண்டிருக்கிற ரமண பகவானின் மெய்யடியார்களுக்கு இரு கரம் குவித்து அஞ்சலி செலுத்துகிறேன். அவர்களது ஒப்பற்ற பெருமை அருணசலத்தின் எல்லையற்ற மகிமைக்கு அணி கூட்டுகிறது. அவர்கள் பெற்ற அனுபவங்கள் முதலும் முடிவுமில்லா அருணசல தத்துவத்தில் கரைந்து மறைந்து, அதன் மாட்சிக்குச் சாட்சியாக என்றென்றும் விளங்கிவரும் என்பதில் எள்ளளவும் சந்தேகமில்லை.

வழிபாட்டுக்குரிய தெய்வம், மனித குலத்தின் மீதுள்ள பெருங் கருணையால், வணக்கத்திற்குரிய குருவாக உலகில் அவதாரம் செய்கிறது. அந்தக் குருவைத் தஞ்சமென அடைந்து, திட பக்தியோடும், தூய்மையான உள்ளத்தோடும் வணங்குபவர்கள் பிறவிப் பெருங் கடலைக் கடந்து, ஆன்ம தரிசனம் பெற்று, பிறரால் வழிபடத் தகுந்தவராகிறார்கள்.

ஆதி குருவான அருணசலேசன், வெங்கடராமனை ஆட்கொண்டார். அக்கணமே ஆன்ம தரிசனம் ஆயிற்று. தந்தையை அடைக்கலம் அடைந்த ரமணேசன், சற்குருவாக உயர்ந்தார். பிறர் வழிபடத் தக்க பகவான் ஆனார்.

ரமண பகவானைக் குருவாக ஏற்று, இதய கமலத்தில் இருத்தி, அவரைத் தன்னுள் இயங்கும் ஆன்ம சக்தியாக உணர்ந்து, தன்னை அழித்து 'அது'வாக இருந்து, இணையற்ற இல்லத்தரசியாய், மாசற்ற பக்தையாய், ஒப்பற்ற ஞானியாய் அனைவரையும் அருள்பாலித்த அன்னை ஜானகியின் மகிமை 'அருணசல மகிமை'யின் ஓர் அங்கமாக அமைவதில் பொருத்தம் இருக்கிறது.

'சத்தியத்தைப் பேசு' 'தர்மத்தைச் செய்' என்று வேதம் ஆணையிட, அவ்வழி நடந்த சான்றோர்களால் பண்படுத்தப்பட்டு, ஆன்மிக வளம் கொழிக்கும் நம் பாரத மண்ணில், அவ்வப்போது மகான்கள் அவதரித்து தூய வாழ்க்கை மேற்கொண்டு, நம் பண்டையப் பெருமைகளை நினைவு படுத்திக் கொண்டே யிருக்கிறார்கள். அவர்கள் வரிசையில் தோன்றிய பெண் ரத்தினமான ஜானகி தேவியார், இல்லறமான நல்லறம் நடத்தி, பெண்குலம் தர்ம நெறியிலிருந்தும், சத்திய வாழ்க்கையிலிருந்தும் மாறாது, நியாயத்தோடும் நேர்மையோடும் வாழ்ந்து, ஆண்டவனிடம் பக்தி செலுத்தி வந்தால் முக்தி பெறலாம் என்பதை உணர்த்தவே அவதரித்தவர். 'சம்சாரத்திலிருந்து கொண்டே ஒருவர் பந்த பாசங்களற்ற சந்நியாசியாக வாழலாம், முக்திநிலை யடையலாம், அதற்காகக் காடுமலைகளைத் தேடிக் கொண்டு போக வேண்டியதில்லை' என்ற ரமண பகவானின் வாக்கிற்கு இலக்கணமாகத் திகழ்ந்தவர் அவ்வம்மையார். தம்மை நாடி வந்தவர்களையெல்லாம் கடமை மறவாத, ஒழுக்கம் தவறாத நல்ல குடும்ப ஸ்திரீகளாக இருக்கும்படி உபதேசித்து, ஒவ்வொரு வீட்டையும் ஆலயமாக்கி, அங்கு அன்பினால் விளக்கேற்றி, கருணையினால் அதற்கு

குட முழுக்குச் செய்தருளிய குரு தேவி ஜானகி மாதாவின் வாழ்க்கை நிகழ்ச்சிகளை அறியும்போது பக்தி யுணர்வோடு ஆனந்தப் பரவசமும் மேலிடுகிறது.

ஸ்ரீ ஆதி சங்கரர் அவதரித்த கேரளத்தில், கொல்லம் அருகில் உள்ள ஒரு கிராமத்தில், 1906-ல் பழநி ஆண்டவரின் பக்தரான வைத்திய நாதனுக்கும் செல்லம்மாளுக்கும் மகளாகப் பிறந்தாள் ஜானகி. சிறு வயதிலிருந்தே, நற்பண்புகளோடும் நல்லொழுக்கங்களோடும் வளர்ந்த அப்பெண், பக்த விஜயம், பாகவதம், ராமாயணம் போன்ற புனித நூல்களில் ஆழ்ந்து, எந்நேரமும் ஆண்டவனின் சிந்தனையிலேயே லயித்திருப்பாள். வீட்டுக் காரியங்களிலும், ஆண்டவனின் வழிபாட்டிலும், தோத்திரப் பாடல்களிலுமே மனத்தைச் செலுத்தி வந்த அவளுக்கு, திருமணத்தில் நாட்டமே இருக்கவில்லை. அவள் கன்னிப் பெண்ணாகவே இருந்து விடலாம் என்று கனவு கண்டாள். ஆனால், அவள் கனவு பலிக்க வில்லை.

பதினான்காவது வயதில், 1919-ம் ஆண்டில், டாக்டர் கணபதி ஐயருக்கு இரண்டாந்தாரமாக வாழ்க்கைப்பட்டாள் ஜானகி. தன் எண்ணத்திற்கு மாறாகத் திருமணமாகி விட்டாலும், தன் மன நிலையைப் புரிந்து கொண்ட கணவனாக வாய்த்ததில் மன நிறைவு பெற்றாள். மனைவியின் தூய வாழ்க்கைக்கும் பக்தியுள்ளத்திற்கும் உறுதுணையாய் நின்றார் கணவர். அவர்களது தாம்பத்ய வாழ்வில் மங்கலம் துலங்கியது. மகிழ்ச்சி பொங்கியது. மக்கட் பேறு மலர்ந்தது.

ஐந்தாறு ஆண்டுகள் கடந்தன. ஜானகியின் வாழ்வில் மாற்றங்கள் தோன்றவாரம்பித்தன. பிறர் எண்ணங்களை அறிவது, நடக்கப் போகும் நிகழ்ச்சிகளை முன்பே உணர்வது போன்ற சில அபூர்வ சக்திகள் தோன்றின. அவளுடைய பக்தி உறுதியாயிற்று.

1934-ம் ஆண்டு கணபதி ஐயரின் வீட்டுக்கு ஒரு சாது வந்தார். தன் வழக்கப்படி அவரை இன்முகத்துடன் வரவேற்று அன்புடன் உபசரித்தாள் ஜானகி. அந்த சாது, ஜானகியைத் தனக்குச் சமமான மற்றோர் ஆசனத்தில் அமரச் சொல்லி, ''உனக்கு என்ன வேண்டும் கேள்'' என்றார். ''சுவாமி, எனக்கு இந்த வாழ்க்கையிலேயே விடுதலை வேண்டும். பந்த பாசங்களற்று, அஞ்ஞானம் அகன்று முக்தி நிலையடைய வேண்டும். குருநாதர் ஒருவரின் கருணை யிருந்தால்தான் அது முடியும். எனவே, எனக்கொரு சற்குருவைக் காட்டியருள வேண்டும்'' என்று கேட்டாள் அன்னை ஜானகி. அந்த சாது, தன் சுய உருவத்தைக் காட்டி, ''நான் சிக்கில் சிங்காரவேலன் தாயே. உனக்காக உலகில் ஒரு குரு அவதரித்திருக்கிறார். அவர் அருணாசலத்தில் இருக்கிறார். அவர் பெயர் ரமண மகரிஷி. அவரைத் தரிசித்து, அவரையே குருவாக ஏற்றுக் கொள். உனக்கு எல்லா நலன்களும் உண்டாகும்'' என்று கூறிச் சென்றார்.

அன்றையிலிருந்து ஜானகிக்கு ஸ்ரீ ரமண பகவானைத் தரிசிக்க வேண்டும் என்ற பேராவல் மேலிட்டது. குடும்ப அலுவல்கள் காரணமாகவும், கணவரின் வேலை காரணமாகவும் திருவண்ணாமலைப் பயணத்தை ஒத்திப்



ஸ்ரீ ஜானகி மாதா

போட்டுக் கொண்டே வந்தாள். அன்னையினுள் இயங்கிய தெய் விகச் சுடர் பிரகாசிக்கத்தொடங் கியது. ஆனல், ஆன்மிக மலர்ச்சி யின் அனுபவங்களைத் தாங்கிக் கொள்ளக் கூடிய பக்குவம் ஜானகியின் உள்ளத்திற்கோ உடலுக்கோ இருக்கவில்லை.

இனியும் நாட்களைக் கடத் தக் கூடாது என்று 1935-ம் ஆண்டில் கணபதி ஐயரும் ஜானகியும் ரமணுச்ரமத்திற்குச் சென்ருர்கள். பக்தர்களோடு பக்தர்களாகத் தரிசன அறை யில் அமர்ந்திருந்த ஜானகி, பொறுமை இழந்து போனுர். தம் நிலையைப் பகவானிடம் நேரில் சொல்லிவிட வேண்டும் என்று அவர் துடித்தார். பகவானிடம் ஒரு வார்த்தை கூடப் பேசாமலேயே அன்று இரவு ஊருக்குத் திரும்ப நேரிடுமோ என்று எண்ணியபோது, அவருக்குத் துக்கம் துக்கமாக வந்தது.

'என்னை ஆட்கொண்டிருக்கும் அபூர்வ சக்தியைத் தாங்க முடியாமல் நிலை தடுமாறிப் போய் மூளை குழம்பி விட்டால் என்ன செய்வது? எனக்கு குருவின் துணை கிடைக்குமா? பகவான் என்னை சிஷ்யையாக ஏற்றுக் கொள் வாரா? 'நான் குருவல்ல, எனக்குச் சீடரும் கிடையாது' என்று பகவான் யாரிடமோ கூறி யிருக்கிருராமே' என்று பலவாறு சிந்தித்துக் குழம்பிக் கொண்டிருந்தார் ஜானகி. அப்போது அன்னையின் உள்ளக் குமுறலை அறிந்தவர் போல், பகவான் சட்டென்று எழுந்து வெளியேறினுர். பாராயணம் முடிவதற்கு முன் பகவான் அவ்வாறு எழுந்து போவது வழக்கமல்ல. எனவே, பகவானின் செய்கை அனைவரையும் ஆச்சரிய மடையச் செய்தது.

பகவான் தம்மிடம் கொண்டுள்ள கருணையின் அடையாளமாகவே இதைக் கருதிய ஜானகியும் வெளியே வந்தார். சற்றைக்கெல்லாம் மாட்டுக் கொட்டில் பக்கமிருந்து பகவான் திரும்பிக் கொண்டிருந்தார். அதுதான் தக்க தருணம் என்று எண்ணிய ஜானகி, மகானின் மலரடிகளில் விழுந்தார். பணியாள் ஒருவன் அவரைத் தடுக்கப் போனுன். பகவான் அவனைப் பேசாமல் ஒதுங்கி இருக்கச் சொன்னுர்.

எழுந்து நின்ற அன்னை ஜானகியின் உடல் நடுங்கியது. கண்ணீர் வழிந்தோடியது. தமது ஆன்மிக அனுபவங்களைப் பகவானிடம் கூறினுர். ஆன்மதரிசனத்தையும் முக்தியையும் வேண்டி நிற்பதைக் கூறினுர்.

சித்தம் தடுமாறிப் போகாமல் இருப்பதற்காகத் தமக்குக் குருவாக இருந்து துணை புரியும்படி மன்றாடினார். கருணைக் கடல் அபயம் அளித்தது.

''உனக்குக் குரு கிடையாது என்று ஏன் நினைத்துக் கொண்டிருக்கிறாய்? நானிருக்க பயமேன்? நான் உன் குருவாக இருந்து காப்பாற்றுகிறேன். உனக்கு ஒரு கெடுதலும் நேராது.''

அருணாசல ரமணன் அன்னையின் உள்ளத்தில் குடியேறினார். பரிபூரண சரணாகதிக்கு, சத்தியப் பொருள் அடிமையாகியது.

இரண்டாண்டுகள் கழித்து, ஜானகி மாதாவுக்கு மேலும் பல அற்புத அனுபவங்கள் ஏற்பட்டன. குண்டலினி சக்தி அவருள் ஒளியாய் விசுவ ரூபம் எடுத்து, ஒலியாய்த் தாக்கி, மண்டையைப் பிளந்தது. உள்ளும் புறமும் பரம்பொருள் ஜோதியாய்த் தரிசனம் தந்தது. பல்வேறு தெய்வங்கள் திவ்யத் தோற்றமளித்து லீலைகள் புரிந்தன. அருள் வெள்ளப் பெருக்கில் மூழ்கிய அன்னை, திக்குமுக்காடிப் போனார். உடல் நலம் குன்றியது. படுத்த படுக்கையாகி விட்டார்.

ஒருநாள் இரவு, படுக்கையிலிருந்த ஜானகியின் உடல், மேல்நோக்கிக் கிளம்பி அந்தரத்தில் நின்றது. அருகில் படுத்திருந்த உறவினள் ஒருத்தி, ''இதென்னம்மா வேடிக்கை?'' என்று கூச்சலிட்டாள். அதைக் கேட்ட மாதா, ''இம்மாதிரியான மாயா ஜால சித்து வேலைகள் செய்து காட்டுவதில் எனக்கு விருப்பமில்லை. பிறரைப் பிரமிக்க வைக்கும் அற்புதங்களை நான் நிகழ்த்திக் காட்ட வேண்டாம்'' என்று கூறினார். அடுத்த கணம் அவரது உடல் படுக்கையில் இறங்கி விட்டது.

தம்முள் இயங்கிய அபூர்வசக்தியை நிதானப்படுத்தும் நோக்கத்தோடு, உடல் மெலிந்து பலவீனமுற்ற நிலையிலும் பகவானைத் தரிசித்து வர, திருவண்ணாமலைக்குச் சென்றார் ஜானகி மாதா. கருணாமூர்த்தியின் எதிரில் கைகூப்பி நின்றார். அருட்பெருக்கை நிதானப்படுத்தி நேர்ப் பாதையில் திருப்பும் ஆற்றல் பெற்ற சற்குரு, ஆன்மிக அணையாக இருந்து அன்னையை அருள்பாலித்தார். கருணை பொழியும் கண் நோக்காலேயே ஆர்ப்பரிக்கும் குண்டலினி சக்தியை ஒரு நிலைப்படுத்தி அமைதி நிலவச் செய்தார்.

கணவர் ஓய்வு பெற்ற பிறகு 1941-ம் ஆண்டு முதல் தஞ்சை கணபதி நகரில் சொந்த வீட்டில் குடியேறினார். 1955-ல் கணவரை இழந்தார். அது முதல் தாம் அருணாசல ஜோதியில் கலக்கும் 1969-ம் ஆண்டுவரை குருதேவி ஜானகி மாதா கனகாம்பர வர்ண உடை யணிந்து, சந்நியாசியாகவே வாழ்ந்தார். பக்தர்களுக்கு அன்பும் ஆதரவும் காட்டி தெய்வமாகத் துணை புரிந்திருக்கிறார். பலருக்குக் கனவில் தோன்றி ஆசி வழங்கி இருக்கிறார். ராமனாகவும், கிருஷ்ணனாகவும், முருகனாகவும், அன்னபூரணியாகவும், அகிலாண்டேச்வரியாகவும், காமாட்சியாகவும், பார்வதிதேவியாகவும் தரிசனமளித்திருக்கிறார். இன்னல்களைக் களைந்திருக்கிறார். நோய்களைத் தீர்த்து வைத்திருக்கிறார். 'கடமையைச் செய். பகவானை நம்பு. நற்கதி கிடைக்கும்' என்பதே அவர் அனைவருக்கும் அருளிய உபதேசமாகும்.

தஞ்சை 'ஜானகி நிலைய'த்தில் ஜானகி மாதா, மெய்ம்மறந்து தியானத்தில் ஆழ்ந்திருந்த காட்சியையும், அவர் ரமண பகவானுக்கு முறைப்படி செய்த பூஜையையும், சகஸ்ரநாம அர்ச்சனைகளையும் நேரில் பார்த்தவர்கள் உண்மையிலேயே கொடுத்து வைத்தவர்கள். மாதாவுக்குப் பக்தர்கள் பாத பூஜைகள் செய்து மகிழ்ந்தார்கள்.

இல்லமாகவும், ஆச்ரமமாகவும் திகழ்ந்த 'ஜானகி நிலைய'த்தில் அன்னையின் சமாதியைக் கருவறையாகக் கொண்டு தற்போது ஓர் ஆலயம் எழும்பியிருக்கிறது. குரு பக்திக்கும், அன்பு நெறிக்கும், ஞான வாழ்வுக்கும் என்றென்றும் அது ஓர் எடுத்துக் காட்டாக அமையப் போகிறது.

குருவிடம் சரணடைந்து அவரைப் பரிபூரணமாக நம்பி விட்டால், அவர் ஒருபோதும் நம்மைக் கைவிட மாட்டார் என்பதற்கு அத்தாட்சியாக ஜானகி மாதாவின் வாழ்க்கையில் பல நிகழ்ச்சிகள் நடந்துள்ளன. அவற்றில் ஒன்றைப்பற்றி மாதாவின் மகள் பத்மாவதி சீதாபதி அண்மையில் என்னிடம் விவரித்தபோது, தூய பக்தியின் மகிமையை முழுமையாக உணர முடிந்தது.

பத்மாவதியின் மூன்று வயது மகனுக்குக் கண்களில் புண் ஏற்பட்டு, பார்வையே போய் விட்டது. எத்தனையோ மருத்துவர்களைப் பார்த்து விட்டார்கள். எத்தனையோ வைத்தியம் செய்தாகி விட்டது. ஒன்றும் பலனளிக்கவில்லை. ''இனி ஒரு வைத்தியத்திற்கும் குணமாகாது. குழந்தைக்குக் கண் பார்வை திரும்பாது'' என்று மருத்துவ நிபுணர்களும் கூறிவிட்டார்கள்.

மகள், மாதாவிடம் தஞ்சமடைந்தாள். மாதாவோ, குருவிடம் சரணடைந்தாள்.

''பத்மா, பகவானிடம் வேண்டிக் கொள். கண்கண்ட தெய்வம், நிச்சயம் கண்ணைக் கொடுக்கும்'' என்றார் ஜானகி மாதா.

மாதா கூறியபடியே பகவான் ரமணரைக் குறித்துப் பிரார்த்தித்துக் கொண்டாள் அந்தத் தாய். மனிதன் கைவிட்ட பிறகு, பிரார்த்தனையைத் தவிர வேறு வழி ஏது?

பக்தர்களின் வேண்டுகோளைப் பகவான் புறக்கணிப்பாரா? அனைவரும் ஆச்சரியம் அடையும்படி அந்த அதிசயம் நடந்தது.

அண்ணாமலை கார்த்திகை தீப தினத்தில், ஜோதி தரிசனத்தன்று, அந்தக் குழந்தைக்குத் திடீரென்று கண் தெரிந்தது. அருணாசலத்தில் தோன்றிய ஒளி, இருள் அகற்றி இவர்கள் வாழ்வுக்கு ஒளி வழங்கியது.

குழந்தையை அழைத்துக் கொண்டு ரமணாச்ரமம் சென்ற தாய், பகவானின் பெருங் கருணையால் நிகழ்ந்த அதிசயத்தைக் கண்ணீருக்கிடையே கூறினாள்.

அதைக் கேட்டு பகவான் சிரித்தார். எல்லாம் தெரிந்தவர், ''ஓகோ, அப்படியா?'' என்று கேட்டார், ஒன்றுமே தெரியாதவர் போல்!

திருவண்ணுமலை ரமணுச்ரமத்திற்கு மேற்கே பலாக்கொத்து என்ற இடத்தில் ஓர் ஆச்ரமம் இருக்கிறது. அதில் அண்ணுமலை சுவாமிகள் என்ற சாது வாழ்ந்து வருகிறுர். அவரைத் தரிசிக்கவும் அவரது உபதேச மொழிகளைக் கேட்டு மனச்சாந்தி பெறவும் மெய்யன்பர்கள் அங்கு தினமும் வந்து கூடுகிறுர்கள்.

தென்னுற்காடு மாவட்டத்தில், விருத்தாசலத்திலிருந்து திருச்சி செல்லும் பாதையில் உள்ள தொண்டங்குறிச்சியில் அறுபது ஆண்டுகட்கு முன் பிறந்த செல்லப்பெருமாள், இருபதாவது வயதில் ரமணுச்ரமத்திற்கு வந்தார். பகவானின் அடிமையானுர். அண்ணுமலை சுவாமிகளாக மாறினுர்.

அவருடைய தந்தை ஒரு ஜோசியர். மகன் பிறந்த உடனேயே ஜாதகத்தைக் கணித்துப் பார்த்தார். அவன் பிற்காலத்தில் ஒரு சாதுவாகப் போகிறுன் என்பது அவருக்குத் தெரிந்து விட்டது. எனவே, மகனை வளர்ப்பதில் தந்தை அக்கறை காட்டவில்லை. அரிச்சுவடி வகுப்புக்குமேல் அவர் செல்லப்பெருமாளைப் படிக்க வைக்கவில்லையே!

பிற்காலத்தில் அமையப் போகும் வாழ்க்கைக்கு அடையாளமாக இளவயது முதற்கொண்டே செல்லப்பெருமாள் உலக வாழ்க்கையில் நாட்டம் கொள்ளாமல் எந்நேரமும் கடவுட் சிந்தனையிலேயே ஈடுபட்டிருந்தான். நாம சங்கீர்த்தனம் செய்வதில் ஆனந்தம் கொண்டான். பஜனை மடத்திலேயே நேரத்தைக் கடத்தினுன்.

ஒருநாள் யாரோ ஒருவர் அவனிடம் ரமண பகவானின் புகைப்படம் ஒன்றைக் காட்டினுர். மகரிஷியின் கண்கள் காந்தம் போல் அவனை வசீகரித்தன. மகான் இருக்கும் இடம் அறிந்து, அருணுசலத்திற்கு வந்து சேர்ந்தான்.

பகவானிடம் மனத்தைப் பறி கொடுத்து, அவரது தொண்டிற்கே தன்னை அர்ப்பணித்துக் கொண்டார் அந்த இருபது வயது இளைஞர். பத்து நாட்கள் கழிந்தன. பகவான் இளைஞரைப் பார்த்து, ''நீ எப்போது வரப் போகிறுய் என்று காத்துக் கொண்டிருந்தேன், ஐயா...'' என்று திருவாய் மலர்ந்தருளினுர். 'என்ன! பகவான் என்னை எதிர்பார்த்துக் கொண்டிருந்தாரா? எனக்கும் பகவானுக்கும் பூர்வ ஜன்மத் தொடர்பு இருக்கிறதா? என்ன பாக்யம் செய்தேன்' என்று புளகிதம் அடைந்தார் இளைஞர் செல்லப்பெருமாள்.

தாய்ப் பறவை குஞ்சுப் பறவையைப் பழக்கி வளர்ப்பது போல் குறிப்பால் உணர்த்தியே செல்லப்பெருமாளை ஞான அமுது ஊட்டி வளர்த்தார் பகவான். கல்வியறிவில்லாதவனுக்கு, தமிழ் எழுதவும் படிக்கவும் பயிற்றுவித்தார். பாடல்களைக் கற்றுத் தந்தார். குளிக்கும் போதும், உணவு உட்கொள்ளும்போதும் அரிய கருத்துக்களைப் புரிய வைக்க எளிய பொன்மொழிகளாகக் கூறியருளினுர். தஞ்சம் என்று வந்தவர்களுக்கு அவரவர் நிலைக்கேற்ப உபதேசம் செய்தருளி, மாயத் திரையை மெல்ல மெல்ல விலக்கி, கை தூக்கி விட்டுக் கரையேற்றும் கருணுமூர்த்தியாயிற்றே அருணை வள்ளல்.

ஆச்ரமத்தில் கட்டடங்கள் ஒவ்வொன்ருக எழும்பின. அதற்கு அண்ணுமலை சுவாமியை ஒரு கருவியாக்கிக் கொண்டார் பகவான். 'ஆச்ரமத்தின் புகழ் ஓங்கப் போகிறது. பக்தர்கள் வந்து குவியப் போகிருர்கள். தேவையான பொருளும் வந்து சேரும்' என்ற நெடு நோக்கோடு திட்டங்களைத் தீட்டி, ஆச்ரமத்தைச் சிறுகச் சிறுக பகவான் விரிவு படுத்தினுர் என்று அண்ணுமலை சுவாமிகள் கூறுகிருர். '''கோ சாலை ஒன்று இப்போதே கட்டி வைப்போம். பசுக்கள் நிறைய வரும்' என்று பகவான் கூறினுர். கோ சாலையைக் கட்டி முடித்தோம். யார் யாரோ பசுக்களைக் கொண்டு வந்து விட்டார்கள்'' என்ருர் சுவாமிகள்.

ஆச்ரமத்தில் பண வசதி இருக்காது. நிர்வாகிகள் செய்வதறியாது தவிப்பார்கள். ஆனுல், பெரிய பெரிய திட்டங்களெல்லாம் எப்படியோ நிறைவேறி விடும். சற்றும் எதிர்பாராமல் யாரோ ஓர் அன்பர் ஆச்ரமத்திற்கு வருவார். அதற்கான முழுச் செலவையும் ஏற்றுக் கொண்டு விடுவார். கட்டட வேலை எளிதில் முடிந்து விடும். எல்லோரும் ஆச்சரியப் படுவார்கள்.

உடல் உழைப்புக்கு வாய்ப்புத் தந்து பக்தனின் உள்ளத்தையும் பண்படுத்திக் கொண்டிருந்தார் பகவான். இருப்பினும் அண்ணுமலை சுவாமிகளுக்கு மன நிம்மதி இல்லை. கருணைத் தெய்வத்தின் அரவணைப்பு இருப்பினும், ஆச்ரமத்தின் நிர்வாகத்தினருக்கும் தமக்கும் இடையே கருத்து வேற்றுமை தோன்றியதைக் குறித்து வருந்தினுர். அமைதியான வாழ்வுக்கு அங்கு நிலவிய சூழ்நிலை பெரும் தடையாக இருந்ததை உணர்ந்து மிகவும் வேதனைப்பட்டார். அங்கிருந்து போய்விடுவதே நல்லது என்று அவருக்குத் தோன்றியது.

அடுத்த சில நாட்களுக்குள் ஆச்ரமத்திலிருந்து விலகி, பக்கத்திலுள்ள பலாக்கொத்தில் ஒரு குடில் அமைத்துக் கொண்டு வாசம் செய்வது என்று அவர் முடிவு செய்தார். அண்ணுமலை சுவாமிகள் அதைப் பகவானிடம் கூறியபோது, பகவானின் முகம் மலர்ந்தது. 'ரொம்ப நல்லது' 'ரொம்ப நல்லது' 'ரொம்ப நல்லது' என்று மகிழ்ச்சியோடு மூன்றுதரம் கூறி, ஆசி வழங்கினுர். ஒன்பது ஆண்டுகள் குருநாதனுக்கருகில் நிழலாய் இருந்து விட்டுப் பிரிந்து செல்வது என்பது எளிதா? பகவானே ஆசி வழங்கி விட்டதால் சுவாமிகளுக்கு மனப் பளு சற்றுக் குறைந்தது. பலாக்கொத்தில் இருந்து கொண்டே பகவானைத் தரிசித்துக் கொண்டும், உபதேச மொழிகளைக் கேட்டுக் கொண்டும் நாட்களைக் கடத்தி வந்தார் அண்ணுமலை சுவாமிகள்.

'சாது அருணுசலா' என்ற சாட்விக், செலவுக்காக இவருக்கு மாதம் ஐம்பது ரூபாய் கொடுத்து உதவிக் கொண்டிருந்தார். எட்டு ஆண்டுகள் இந்த ஏற்பாடு நடந்து வந்தது. ஒருநாள் சாட்விக், பகவானிடம் இந்த உதவித் தொகையைப் பற்றிக் கூறவும், பகவான், ''அண்ணுமலை சுவாமிக்கு உதவி செய்ய நீ யார்?'' என்று சட்டென்று கேட்டு விட்டார். சாட்விக்கிற்குச் சுருக்கென்றது. அன்றுடன் அந்த உதவிப் பணத்தை நிறுத்தி விட்டார். இது நடந்தது 1946-ம் ஆண்டில்.

அன்றே வந்தவாசியை அடுத்த தெள்ளாரைச் சேர்ந்த ஜெயராம முதலியார் என்னும் அன்பரிடமிருந்து அண்ணுமலை சுவாமிகளுக்கு மூன்று ரூபாய் மணியார்டர் வந்தது. அது முதல் சுவாமிகளின் ஆச்ரமம் தனித்து இயங்க ஆரம்பித்தது. பகவானின் லீலைகளை யாரே அறிவர்!

அதற்குப் பிறகு மிகவும் தீவிரமான கட்டுப்பாட்டை விதித்தார் பகவான். அண்ணுமலை சுவாமியை அந்த இடத்தை விட்டு எங்கும் போக வேண்டாம் என்று கூறி விட்டார். தம்மைத் தரிசிக்கக்கூட ரமணுச்ரமத்திற்கு வரவேண்டாம் என்று கண்டிப்பாகச் சொல்லி விட்டார். எத்தனை கடுமையான தடை உத்தரவு! அண்ணுமலை சுவாமிகள் அந்தச் சோதனையிலும் வெற்றி கண்டார். உயிரே போவதானுலும் குரு வாக்கை மீறலாமா? அது ஆண்டவனின் கட்டளையை மீறுவதற்கு ஒப்பாகுமே!

பகவான் அவ்வப்போது பலாக்கொத்துக்கு வந்து அண்ணுமலை சுவாமிகளிடம் உரையாடி விட்டுப் போவது வழக்கம்: ஒருநாள் திடீரென்று அங்கு வந்த பகவான், ''உன்னைத் தரிசித்து விட்டுப் போகலாம் என்றுதான் வந்தேன்'' என்ருராம். இதைக் கேட்டதும் பெரிய அபசாரம் செய்து விட்டது போல் துடிதுடித்துப் போனுராம் அண்ணுமலை சுவாமிகள். அவர் நிலையைக் கண்ட பகவான், ''நான் சொன்ன வார்த்தைக்கு நீ கட்டுப்பட்டிருக்கிருயே. உன் பக்தி ஓசந்ததில்லையா? அதுக்காகத்தான் அப்படிச் சொன்னேன்'' என்ருராம்.

இது நாள்வரை அண்ணுமலை சுவாமி ரமணுச்ரமத்திற்குச் செல்லவேயில்லை. பகவானின் சமாதி ஆலயத்தைத் தரிசிக்கக் கூடச் சென்றதில்லை.

''என்ன, பகவான் தேகத்தைத் துறந்த தினத்தன்று கூட நீங்கள் அங்கே போகவில்லையா?'' என்று ஆச்சரியத்துடன் கேட்டேன் நான்.

''இல்லை'' என்று அடக்கத்துடன் நிதானமாகப் பதிலளித்தார் அண்ணுமலை சுவாமிகள்.

எளிமையான தோற்றம்; சாந்த முகம்; இனிமையான பேச்சு. எந்நேரமும் பகவானின் நினைவிலேயே நிலைத்திருக்கும்

ஸ்ரீ அண்ணுமலை சுவாமிகள்



உள்ளம். பகவான் கூறிய கருத்துக்களேயும், அவர் இயற்றிய பாடல் களேயும் மேற்கோள் காட்டியே பேசுகிருர் அவர்.

'யான் பெற்ற இன்பத்தை இவ் வையகமும் பெறவேண்டும்' என்ற தூய நோக்கத்துடன் தம் அனுபவங்களே நம்முடன் பகிர்ந்து கொள்கிருர்.

சுவாமிகளிடம் ஒரு பழைய டைரி இருக்கிறது. அதில் பகவான் பக்தர்களுக்கு அவ்வப்போது கூறிய உபதேச மொழிகளே எழுதி வைத் திருக்கிருர். தாம் கேட்ட சில கேள்விகளுக்குப் பகவான் அருளிய விளக் கங்களேயும் குறித்து வைத்திருக்கிருர். சுவாமிகள் தமது அரிய நிதியாகக் கருதும் அந்த டயரியிலிருக்கும் சில ரத்தினங்களே நாம் காண்போம்....

திருப் பாதங்களேத் தொட்டு நமஸ்கரிக்க அனுமதி வேண்டும் என்று கேட்டுக்கொண்டு ஒருவர், பகவானின் அருகில் நெருங்கி ஞர். அப்போது பகவான் அவரைப் பார்த்து, ''பகவானின் பாதம் பக்தனின் நெஞ்சில்தான் இருக்கிறது. அதை விடாமல் பிடித்துக் கொள்வதே சுகம். என் காலேப் பிடித்தால் ஏமாந்துதான் போவாய். இது ஒருநாள் மறைந்து போகும். நம்முள்ளே இருக்கும் பாதத்தைப் பூஜிப்பதே உயர்ந்த பூஜையாகும்.

ஒரு சமயம் அண்ணுமலே சுவாமிகள் பகவானிடம், ''நாம் உலக விவகாரத்தில் இருந்து கொண்டே பக்தி பண்ண முடியுமா?'' என்று கேட்டார். அதற்குப் பகவான் உடனே பதில் சொல்லவில்லே. பத்து நிமிடங்கள் கழித்து பகவானின் தரிசனத்திற்காக வந்த சில பெண் குழந்தைகள் அவர் முன்னிலேயில் கும்மியடித்துப் பாட ஆரம்பித் தார்கள். 'தயிர் கடைவோமே, கிருஷ்ணன்தனே மறவாமல்' என்று அப் பெண்கள் பாடியதை சுட்டிக் காட்டி பகவான், ''என்ன ஓய், நீ கேட்ட கேள்விக்கு இதுதான் பதில். இதுவே கர்ம யோகம்'' என்று சொல்லி அருளினுர்.

பகவானிடம், ''இந்த உலகத்தில் கெட்டவர்கள் அதிகமாய் இருப்பதால்தான் இத்தனே கஷ்டங்கள் இருக்கின்றன. இந்நிலேயில் நல்லவர்கள் எப்படிச் சுகமாக இருப்பது?'' என்று ஒருவர் கேட்டார். அதற்குப் பகவான், ''நாம் எல்லோரையும் நல்லவர்களாகவே கருத வேண்டும். கெட்டவர்கள் கெடுதல் செய்து நம்மைத் தங்களிடத்தில் வராதே என்று தடுத்து உதவுகிருர்கள். நல்லவர்கள் நமக்கு நல்லது செய்து நன்மை செய்கிருர்கள்; கெட்டவர்கள் நமக்குக் கெடுதல் செய்து நன்மை செய்கிருர்கள்'' என்ருர்.

''நமஸ்காரம் என்பது என்ன? நம் மனசையும் தேகத்தையும் கடவுளுக்கு அர்ப்பணம் செய்யும் பாவனேயாகச் செய்வதுதான் நமஸ்காரம். அந்த பாவத்தை அடியோடு விட்டு விட்டு, 'சாமிக்கு ஒரு கும்பிடு மட்டும் போட்டு விட்டால், அவரை வசியப்படுத்தி விடலாம். பிறகு நாம் நம் இஷ்டப்படி எது வேண்டுமானுலும் செய்யலாம் என்று நினேப்பது தவறு. சாமி ஒருபோதும் ஏமாந்து

போகமாட்டார். சுயநலத்திற்காக, கள்ளக் கும்பிடு போடுபவர்கள் தான் கடைசியில் ஏமாந்து போவார்கள். மனத்தில் சுத்தமா இருப்பதே பெரிய நமஸ்காரம்.''

''முற்பிறவியில் நாங்கள் யார், எப்படி யிருந்தோம், எங்கள் வரலாறு என்ன என்பதெல்லாம் ஏன் தெரியவில்லை?'' என்று சிலர் பகவானிடம் கேட்டார்கள். அதைக் கேட்ட பகவான் சிரித்தார். ''போன ஜென்மத்தின் வரலாறு இருக்கட்டும். இந்த ஜென்மத்தில் 'நான் யார்?' என்று தெரிந்து கொண்டால் போதும். கடவுள், நம்மீதுள்ள கருணையினுலேயே முன் ஜென்ம விவரங்களை மறைத்து வைத்திருக்கிருர். ஏனென்ருல், முன் ஜென்மத்தில் தான் ஒரு புண்ணியவானுக இருந்தோம் என்று ஒருவனுக்குத் தெரிந்தால், அவன் இப்போது மிகவும் கர்வம் அடைவான். பாவி என்று தெரிந்தால், 'ஐயோ! நான் ஒரு பாவி, எப்படிக் கடைத்தேறுவேன்' என்று ஏக்கம் அடைந்து உயர்வதற்கான முயற்சியைச் செய்யாமலே இருந்து விடுவான். ஆகையால் போன ஜென்மத்து விவகார மெல்லாம் தெரியாமல் இருப்பதே நல்லது'' என்ருர்.

**கேள்வி:** பகவானே, நான் வேத சாஸ்திரங்கள் எவ்வளவோ பார்த்திருக்கிறேன். அதில் எனக்கு ஆத்மஞானம் வரவில்லையே, ஏன்?

**பகவான்:** சாஸ்திரத்திலே ஆத்மஞானம் இருந்தால்தானே உங்களுக்கு ஆத்மஞானம் வரும். சாஸ்திரத்தைப்பார்த்தால் சாஸ்திர ஞானம் வரும். ஆத்மாவைப் பார்த்தால் ஆத்மஞானம் வரும்.

ஒரு நாள் மாலையில் பகவான் நடந்து கொண்டிருந்தபோது, அண்ணுமலை சுவாமிகளும் உடன் சென்றிருந்தார். அப்போது பகவானின் இடக்கை விரலிலும் வலக்கால் விரலிலும் பிளாஸ்திரி போட்டிருந்ததைப் பார்த்து, ''பகவானே, கத்தி பட்டதா?'' எனக் கேட்டார் சுவாமிகள். அதற்குப் பகவான், ''இல்லை, கை போய் கத்தியில் பட்டது. கால்போய் கல்லில் பட்டது'' என்ருர், சிரித்துக்கொண்டே

**கேள்வி:** சத்சங்கம் என்ருல் என்ன?

**பகவான்:** சத்சங்கம் என்ருல், ஆத்ம சங்கமே. அது முடியாதவர்களுக்குத்தான் சத்துக்களான சாதுக்களின் சங்கம் வேண்டும்.

**கேள்வி:** சத்சங்கம் ஒருவனுக்கு எப்போது வாய்க்கும்?

**பகவான்:** சாதுக்களின் நல்லுறவும் சேர்க்கையும் வாய்ப்பது முற்பிறவியின் புண்ணியத்தின் பலனே. முற்பிறவியில் அநேக வருடங்கள் ஈச்வர பூஜை, ஜபம், தபம், தீர்த்த யாத்திரை முதலியவற்றை முறையாகச் செய்தவர்களுக்குத்தான் சற்குரு வாய்ப்பார்.

இத்தனை புண்ணியங்கள் செய்து அருணுசல ரமணனை இப் பிறவியில் சற்குருவாக அடைந்து, அவரோடு பேசிப் பழகி, நற்தொண்டாற்றி, நல் உபதேசம் பெற்று, தன் நிலையில் வாழும் அண்ணுமலை சுவாமிகள் போன்ற நல்லோர்களைக் காண்பதும் நன்றே; நலமிக்க அவர்கள் சொல் கேட்பதும் நன்றே; அவர்கள் குணங்கள் உரைப்பதும் நன்றே; அவர்களோடு இணங்கி யிருப்பதும் நன்றே.

அருணாசல திருத்தலத்தில் எழுந்தருளி, ஆன்மிக ஒளி பெற்று, உள்ளத்தில் முருகன் அருள் ஊற்றுப் பொங்க, மாமந்திரமாம் திருப்புகழை உலகிற்கு வாரி வழங்கியவர் ஸ்ரீ அருணகிரிநாதர். ஞான பண்டிதனை ஸ்ரீ முருகக் கடவுளிடமே உபதேசம் பெற்றதால், திருப்புகழைத் தவிர, கந்தரனுபூதி, கந்தர் அலங்காரம், கந்தரந்தாதி, திருவகுப்பு, வேல் விருத்தம், மயில் விருத்தம், சேவல் விருத்தம், திருஏழு கூற்றிருக்கை என்று பல நூல்கள் அவரது நாவினின்றும் பிறந்தன. அருணையம்பதியிலேயே தங்கி யிராமல் பல முருகத் தலங்களுக்குச் சென்று திருப்புகழ் பாடியிருக்கிறார் அருணகிரிநாதர்.

அருணகிரியாரின் வாழ்க்கை வரலாறு சர்ச்சைக்கு இடமின்றி, சரித்திர ஆதாரங்களோடு எழுதி வைக்கப்படவில்லை. அவர் சுமார் ஐந்நூறு ஆண்டுகளுக்கு முன் வாழ்ந்திருக்க வேண்டும் என்று கூறப்படுகிறது. மகாபாரத காவியத்தைத் தமிழில் ஆக்கித் தந்த வில்லிப்புத்தூராரும், காளமேகப் புலவரும், இரட்டையரும், அருணகிரியாரும் ஒரே காலத்தில் வாழ்ந்திருக்க வேண்டும் என்பது பொதுவாக ஒப்புக் கொள்ளப்பட்டிருக்கிறது.

அருணகிரிநாதரின் பிறப்பைப் பற்றியும், பெற்றோரைப் பற்றியும், வாழ்க்கையைப் பற்றியும், மறைவைப் பற்றியும் இன்னும் ஆராய்ச்சிகள் நடைபெற்றுக் கொண்டிருக்கின்றன. ஆனால்; அவரது ஆன்மிக வாழ்க்கையையொட்டி அருணாசலேச்வரர் ஆலயத்தில் நிகழ்ந்த சில அதிசய நிகழ்ச்சிகள் மட்டும் செவி வழி வந்த செய்திகளாக அருணாசலத்தின் மகிமைக்கு மெருகூட்டுகின்றன.

பொருளிழந்து, உடல் நலமிழந்து, மேலும் உயிர்வாழ விரும்பாத அருணகிரி, அண்ணாமலையார் ஆலயத்திலுள்ள வல்லாள மகாராஜா கோபுரத்தின் மீதேறி, தற்கொலை செய்து கொள்ளும் பொருட்டுக் கீழே குதித்தார். அப்போது அவ்வழியே வந்த வயோதிகர் ஒருவர், அவரைக் கீழே விழாமல் தம் கரங்களில் தாங்கிக் கொண்டார். பின்னர் அவருக்கு சடாட்சர மந்திர உபதேசம் செய்து, ஜப மாலையும் தந்து, வடப்புறத்தில் உள்ள கோபுரத்து இளையனாரான முருகன் சந்நிதியில் அமர்ந்து தியானம் செய்யும்படி பணித்தார்.

தம் உயிரைக் காப்பாற்றிய வயோதிகர், விருத்தராக வந்து வள்ளியை மணம் புரிந்த கந்தவேள் என்பது அப்போது அருணகிரியாருக்குத் தெரியாது. பல ஆண்டுகள் அங்கு தவம் இயற்றியதன் பலனாக, முருகன், அருணகிரியாரின் முன் தோன்றி, ''நடந்துபோன வாழ்க்கையை மறந்து விடு. இனி உன் வாழ்க்கை உலகிற்குப் பயன் உள்ளதாக அமையப் போகிறது. வாழ்நாள் முழுதும் என் புகழையே பாடிக் கொண்டிரு'' என்று கூறினார். கந்தப்பனைக் கண்ணுக்கு முன்னே தரிசிக்கும் பேறுபெற்ற அருணகிரிநாதர், நா தழுதழுக்க, ''கந்தப் பெருமானே, உன் புகழை நான் பாடுவதா? நான் எழுத்தறிவில்லாதவன். முறைப்படி தமிழ் கற்றவனும் அல்ல. நான் எதைப் பாடுவது? ஒன்றும் விளங்க வில்லையே, குருநாதா!'' என்று கதறி அழுதார்.



ஸ்ரீ வள்ளி தெய்வானையுடன் ஸ்ரீ கோபுரத்து இளையனார்

திருத்தொண்டர் புராணம் பாடி அருளிய சேக்கிழார் பெருமானுக்கு 'உலகெலாம் உணர்ந்து ஓதற்கரியவன்' என்று தந்தை அடியெடுத்துக் கொடுத்தது போல், குமரச் செல்வன் அருணகிரியாருக்கு, 'முத்தைத் தரு பத்தித் திருநகை' என்று முதலடி எடுத்துக் கொடுத்தார். அதை ஆரம்ப மாகக் கொண்டு ஆயிரம் ஆயிரம் சந்தப் பாக்கள் பாடி அருளினர் அருணகிரிநாதர். நம் தீவினைகளைப் போக்கும் நன்மருந்தாக அமைந்த அத் திருப்புகழ் மாலையை முருகனின் திருவடிகளில் சூட்டினர்.

பிரபுட தேவராயர் என்னும் மன்னன் திருவண்ணுமலையை அரசாண்ட போது, சம்பந்தாண்டான் என்ற சமண பண்டிதர் அரசனுக்கு நெருங்கிய நண்பனுயிருந்தார். அவர் ஒரு தேவி உபாசகர். நினைத்தால் தேவி அவருக்குத் தரிசனம் தருவாள்.

அருணகிரிநாதரின் புகழ் ஓங்கி வளருவதைக் கண்ட சம்பந்தாண் டான் அவரை அவமானப் படுத்தத் திட்டமிட்டார். அரசனிடம் சென்று ''நான் அம்பிகையை உங்கள் கண் முன் கொண்டு வந்து நிறுத்துகிறேன். அருணகிரியால் கந்தப் பெருமானை உங்களுக்குக் காட்ட முடியுமா? அவர் அழைத்தால் முருகன் வருவாரா? ஒரு போட்டி நடத்திப் பார்த்து விடு வோம். உங்களுக்கு அம்பிகை தரிசனமாகாவிட்டால் நானும் என் மனைவி மக்களும் ஊரை விட்டே வெளியேறி விடுகிறோம். தங்களுக்கு முருகன் தரிசனம் தராவிட்டால் அருணகிரி ஊரைவிட்டு ஓடி விட வேண்டும்''

என்று கூறி, ஒரு பந்தயத்திற்கு ஏற்பாடு செய்தார். அதற்கு அருணகிரியாரும் இணங்கினுர்.

பந்தயம் தொடங்கியது. சம்பந்தாண்டான் கடுமையான பூஜைகள் செய்து அம்பிகையை அழைத்தார்.

உலக நாயகி அவருக்கு மட்டும் காட்சி தந்தாளே தவிர, அரசனுக்குத் தரிசனம் தரவில்லை.

அடுத்து, அருணகிரியார் உள்ளம் உருகப் பாடி முருகனை அழைத்தார். ஆனுல், அவர் வரவில்லை. அவரால் வர முடியவில்லை. அன்னை பார்வதியின் அரவணைப்பில் திக்குமுக்காடிக் கொண்டிருந்த பாலன் எப்படி வருவான்?

அன்னையின் அருளைப் பரிபூரணமாய்ப் பெற்றிருந்த சம்பந்தாண்டான், மடியிலிருக்கும் குமரனைக் கீழே விடாமல் கட்டியணைத்துக் கொள்ளும்படி அன்னையிடம் வேண்டிக் கொள்ள, பக்தனுக்குக் கட்டுப்பட்ட பராசக்தி அவ்விதமே செய்தாள்.

சம்பந்தாண்டானின் இந்தச் சூழ்ச்சியை அருணகிரியார் தமது ஞான திருஷ்டியால் உணர்ந்தார். முருகனின் ஊர்தியான மயிலைக் குறித்துப் பிரார்த்தித்துக் கொண்டார். மனமிரங்கிய மயில், அன்னையின் முன் நின்று தோகை விரித்து எழிலாட்டம் ஆடியது. மோகன நடனத்தில் மனத்தைப் பறிகொடுத்த பராசக்தி, தன்னை மறந்த நிலையில் மைந்தனின் மீதிருந்த பிடியைத் தளர விட்டாள். அப்போது அருணகிரியார் 'அதல சேதனுராட அகில மேருமீதாட...' என்ற பாடலைத் தொடங்கி, 'மயிலுமாடி, நீயாடி வரவேணும்' என்ற அடியை நெக்குருகப் பாடினுர். பக்தன் அன்பொழுக அழைத்தது ஆறுமுகனின் காதுகளில் விழுந்தது. மறுகணம் மயில் மீதேறி, ஆடிக் கொண்டே வந்து, கற்தூணில் காட்சியளித்தான். அருணகிரியும் அரசனும் அங்கிருந்த அத்தனை பேரும் மெய் சிலிர்த்துப் போய் 'வெற்றி வேல் முருகனுக்கு ஹரோஹரா' என்று பரவசத்துடன் முழக்கமிட்டனர். முருகன் தோன்றிய கம்பத்தைக் கருவறையாகக் கொண்டதே அண்ணுமலையார் ஆலயத்திலிருக்கும் கம்பத்து இளையனுர் கோயில்.

**பா**ரத நாடு அரசியல் விடுதலை பெற்ற நந்நாளில், ஆன்ம விடுதலை பெற்ற அருணகிரியாரின் விழா, அண்ணுமலையார் ஆலயத்தில் ஆண்டு தோறும் நடந்தேறி வருகிறது. பதினேழு ஆண்டுகளுக்கு முன்பு சிறிய அளவில் தொடங்கப் பெற்ற இந்தத் திருவிழா, இன்று அன்பும் அருளும், பக்தியும் பண்பும் பெருக்கும் பெருவிழாவாகத் திகழ்ந்து வருகிறது.

திருவண்ணுமலை மக்கள் ஐந்தாறு ஆண்டுகளாக மழை இல்லாமல் வாடியதைக் கண்டு, சில முருக பக்தர்கள் சுதந்திர தினத்தன்று, திருவருணை வீதிகளில் தித்திக்கும் திருப்புகழ் பாராயணம் செய்தார்கள். அன்று மாலை திருவண்ணுமலை எல்லைக்குள் பெருமழை பெய்ததாம். அன்று தொடங்கிய சிறிய முயற்சிதான் இன்று ஆலமரமாக வளர்ந்து,

அருணுசலத்தில் ஒரு முக்கிய விழாவாக உருப்பெற்றிருக்கிறது. ஒவ்வோர் ஆண்டும் இவ்விழா நடந்து முடிந்ததும் தவருமல் மழை பெய்வதாகக் கூறுகிருர்கள்.

இந்த ஆண்டு அருணகிரி விழாவைக் காண திருவருணை சென்றிருந்த நாங்கள், அந்த அற்புதத்தைக் கண்ணுல் கண்டோம்.

வருண பகவான் மறுநாள் வரையிலும் காத்திருக்கவில்லை. அன்று மாலையே, வெளியூர்களிலிருந்து வந்திருந்த அருணகிரியாரின் அடியார்கள், தெருவெங்கும் திருப்புகழ் பாடல்களை முழங்கிக் கொண்டு சென்ற போதே, திடீரென்று வானில் கரு மேகங்கள் சூழ்ந்து மழை பொழிந்த அற்புதத்தைக் கண்டு நாங்கள் பரவசத்தில் ஆழ்ந்தோம்.



ஸ்ரீ அருணகிரிநாதர்.

'பெருத்த பாருளீர் நீங்கள் வாருமே' என்று முன்பு அருணகிரியார் அழைத்ததற்கிணங்க, பஜனை கோஷ்டிகளும், பக்த கோடிகளும் அங்கு பல்லாயிரக் கணக்கில் வந்து கூடியிருந்தார்கள். அன்று திருவருணை யெங்கும் பக்தி வெள்ளம் கரை புரண்டோடக் கண்டேன். தெய்வத்தமிழ் தேமதுரத் தேரேறி பவனிவரக் கண்டேன். அருணகிரி நாதரும் சேஷாத்ரி சுவாமிகளும், ரமண பகவானும், வள்ளிமலை வள்ளலும் அண்ணுமலையின் உச்சியில் நின்று, அக் காட்சியைக் கண்டு களிக்கக் கண்டேன். பகுத்தறிவில் பிறந்த நாத்திகத்தை அங்கு காண முடியவில்லை. நம்பிக்கை உணர்வில் பிறக்கும் ஆத்திகத்தைத்தான் கண்டேன்.

ஐந்நூறு ஆண்டுகளுக்கு முன் அருணுசலத்தில் தோன்றி, கால வெள்ளத்தில் மங்கி மறைந்து போன திருப்புகழையும், அதைப் படைத்துத் தந்த அருணகிரிநாதரின் புகழையும் உலகில் பரப்புவதற்காகவே தோன்றிய ஸ்ரீ வள்ளிமலை சுவாமிகள், அருணுசலத்தை நாடி வந்தார். அங்கு மலை மீது அமர்ந்திருந்த ரமண மகரிஷியைப் பழநியாண்டவனுகத் தரிசித்து, அவரிடமிருந்து திருப்புகழைப் பிழையில்லாமல் கற்றுக் கொண்டதோடு, அவற்றில் புதைந்திருந்த மறை பொருளையும் தெரிந்து கொண்டார். பின்னர் ஸ்ரீ சேஷாத்ரி சுவாமிகளிடமிருந்து திருப்புகழ் மாமந்திரத்தையே உபதேசமாகப் பெற்றுக்கொண்டு வள்ளிமலைக்குச் சென்ருர். திருவண்ணுமலைத் தெருக்களில் பெருக்கெடுத்து ஓடிய திருப்புகழ் தேன் காதில் பாய்ந்த போது, பழைய வரலாறுகளெல்லாம் நினைவில் நிழலாடின.

முதலும் முடிவுமில்லா முழு முதற் கடவுளான முக்கண்ணன் அருணசலத்தில் ஞான ஒளி நல்கும் நற்சுடராய் நிற்கிருர். 'சக்தியின்றி சிவன் இல்லை' என்ற தத்துவத்தை விளக்க, இறைவனின் இடப் பாகம் பெற்று பெருமையுடன் வீற்றிருக்கிருள் உலக நாயகியான உண்ணுமுலை உமையவள். கலியுகத்தில் தூய பக்திக்கு அடிமையாகி, அடியார்களைத் தடுத்தாட்கொள்ளக் காத்திருக்கிறேன் என்கிருர் கலியுகவரதனுன கார்த்திகேயப் பெருமான்.

அருணசல மகிமையே மகிமை!



ஸ்ரீ கரைகண்டேச்வரர் ஆலயம் (பூண்டி)

ஸ்ரீ அருணகிரிநாதர் திருவிழாவில் கலந்து கொள்ளச் சென்ற நான், அண்ணாமலையார் ஆலயத்திலுள்ள கோபுரத்து இளையனார் திருக்கோயில் சந்நிதி மண்டபத்தில் அமர்ந்திருந்த போது, ஈசருடன் ஞானமொழி பேசிய ஆறுமுகனின் பெருமை, அருணாசல மகிமையுடன் பின்னிப் பிணைந்திருப்பதைப் பற்றிச் சிந்தித்துக் கொண்டிருந்தேன். அச் சமயத்தில், அருணாசலத்திற்கு அருகில் செய்யாற்றின் கரையில், முருகன், ஏழு சிவ லிங்கங்களைப் பிரதிஷ்டை செய்து வழிபட்ட புராண வரலாறும், அதை நான் அறிந்த விந்தையும், அத் தலங்களுக்கெல்லாம் சென்று தரிசித்து விட்டு வந்த விவரங்களும் என் மனத்தில் பளிச்சிட்டன.

இரண்டு மாதங்களுக்கு முன் ஓர் இரவு என் கனவில் ஸ்ரீ காஞ்சி ஆசாரிய சுவாமிகள் தோன்றினார். அவருடைய கண்கள் இரண்டும் மிகப் பெரியவையாக இருந்தன. பரந்த கடலில் நம் பூமி சுழன்றால் எப்படி யிருக்குமோ, அப்படி அவ்விரு விழிகளும் சுழன்று கொண்டிருந்தன. சுவாமிகள் நன்றாகக் குனிந்து பார்த்ததால் படுத்துக் கொண்டிருந்த என் முகத்தின் வெகு அருகில் அவரது திருமுகம் இருந்தது. அக் கண்களிலிருந்து வீசிய பிரகாசத்தை என்னால் தாங்கிக் கொள்ள முடியவில்லை.

29

''என் கண் சரியா தெரிகிறதா, பாருடா'' என்று சிரித்துக் கொண்டே கேட்டார் சுவாமிகள்.

நான் அவ் விழிகளைப் பார்த்தேன். அவை பெரிய கண்ணாடிக் கோலி குண்டுகள் போலிருந்தன. அவற்றுள் பல உலகங்களைக் கண்டேன். விவரிக்க முடியாத எத்தனையோ காட்சிகளைக் கண்டேன். எனக்குப் பேசவே நா எழவில்லை. உடம்பெல்லாம் நடுங்கியது. கண்களை இறுக மூடிக் கொண்டு, 'ஓ'வென்று கதறிக் கொண்டே சுவாமிகளின் பாதங்களில் விழுந்து வணங்கினேன்.

கருணைத் தெய்வம் பேசிற்று: ''அழாதே......எழுந்திரு.''

நான் எழுந்து நின்றேன். ஒளிமிகு கண்களை நேருக்கு நேர் பார்க்க முடியாததால் தலையைக் கீழே குனிந்து கொண்டேன்.

''இதோ பாரு, நீ பூண்டி சாமியாரைப் பற்றி எழுதினது போறாது... இன்னும் கொஞ்சம் எழுது'' என்றார் ஸ்ரீ காஞ்சி முனிவர் சட்டென்று. தலை நிமிர்ந்து பார்த்தேன். சுவாமிகள் மறைந்து விட்டார். என் கனவும் கலைந்து விட்டது.

மறுநாட் காலை ஐந்து மணிக்கு, முன்பே திட்டமிட்டிருந்தபடி நானும் நண்பர்களும் திருவண்ணாமலைக்குப் புறப்பட்டுச் சென்றோம். அங்கு எங்கள் அலுவல்களை முடித்துக் கொண்டு திரும்பும்போது, திடீரென்று பூண்டிக்குச் செல்லலாமே என்ற ஓர் எண்ணம் என்னுள் எழுந்தது. அங்கு சென்று ஆறு மாதங்களுக்கு மேல் ஆகி விட்டிருந்ததால் உடனிருந்த நண்பர்களும் ஆமோதிக்கவே கார் கலசபாக்கத்தை நோக்கி விரைந்தது.

நாங்கள் சென்றபோது சாமியார் கண்களை மூடி, புருவங்களை உயர்த்தி, பல்லைக் கடிக்கும் பாவனையில் தலையை ஒரு பக்கமாக அசைத்துக் கொண்டிருந்தார். அப்படிச் செய்யும்போது அவர் சாதாரணமாக யாருடனும் பேசுவதில்லை. பக்தர்கள் அருகில் நெருங்குவதே கிடையாது. இம் மாதிரி சமயங்களில் 'சாமியார் யோகத்தில் இருக்கிறார்' என்று பக்தர்கள் கூறுகிறார்கள். அரைமணி, ஒரு மணி, இரண்டு மணி, நான்கு மணி நேரம் கூட இந்த 'யோகப் பயிற்சி' நீடிப்பதுண்டு.

நாங்கள் அவரையே பார்த்துக் கொண்டு, எதிரிலுள்ள கொட்டகையில் அமர்ந்திருந்தோம். அப்போது பள்ளி ஆசிரியர் வெங்கடேசன் அருகில் வந்து, ''பாவம், நீங்க ரொம்ப நாள் கழிச்சு வந்திருக்கீங்க...... சாமியாரோட பேச முடியாது. இரண்டு நாளா யோகத்திலேயே இருக்காரு...... யாருடனும் ஒரு வார்த்தை கூடப் பேசலே'' என்றார்.

''நான் சாமியாருடன் பேச வரவில்லை. சும்மாதான் பார்த்துட்டுப் போகலாம் என்று வந்தேன்'' என்று கூறிவிட்டு, சுமார் இருபது நிமிடங்கள் அங்கேயே அமர்ந்திருந்தேன்.

புறப்படுவதற்கு முன் சாமியாரிடம் விடை பெற்றுக் கொள்ள வேண்டும் என்று தோன்றியது. திண்ணையை நெருங்கினேன். அருகில் சென்றதும், முதல் நாள் நான் கண்ட கனவைச் சாமியாரிடம் சொல்லும்படி என் உள்ளிருந்து ஒரு சக்தி என்னை உந்தியது.

''நேற்று ராத்திரி காஞ்சிபுரம் ஸ்ரீ சங்கராசாரிய சுவாமிகள் என் சொப்பனத்திலே வந்து, உங்களைப் பத்தி நான் எழுதினது போதாது, இன்னும் கொஞ்சம் எழுதுன்னு சொன்னரு...'' என்று தொடங்கினேன். நான் சங்கராசாரியாரின் பெயரைச் சொன்னதுமே சாமியார் யோகப் பயிற்சியை நிறுத்தி விட்டார். நான் கூறியதை உன்னிப்பாகக் கேட்டார்.

''சாமியைப் பற்றித் தெரிந்த வரைக்கும் முன்னேயே எழுதிவிட்டேன். இன்னும் ஏதாவது விவரம் சொன்னு எழுதலாம்னு நினைக்கிறேன்......'' என்று தயங்கியபடி கூறினேன் நான்.

''எழுது எழுது'' என்ருர் சாமியார்.

''தெரிஞ்சாத்தானே எழுதலாம்...சாமி, பக்கத்திலே இருக்கிற காஞ்சி, கடலாடி பக்கமெல்லாம் நீங்க தங்கியிருந்ததாகச் சொல்ருங்களே... அங்கெல்லாம் போய்ப் பார்த்தா ஏதாவது விவரங்கள் கிடைக்குமா?'' என்று கேட்டேன்.



ஸ்ரீ பூண்டி சாமியார்

''நல்லது, போய் வா......காஞ்சியிலே சங்கராசாரியார் மடம் இருக்கு.''

எனக்குச் சந்தேகம் வந்து விட்டது.

''பெரிய காஞ்சிபுரத்தைச் சொல்றீங்களா?'' என்று கேட்டேன்.

''இந்தக் காஞ்சியைத்தான் சொல்றேனய்யா... அது கல் கட்டடம்......மேஸ்திரி வேலை.''

''அங்கே கோயில் இருக்குதா?''

''இருக்குய்யா......போய்ப் பாரு......அங்கே மூனு லிங்கம்...... நாராயணசாமி செட்டியாரைக் கேளு, எல்லாம் சொல்லுவாரு.''

''நாராயணசாமி செட்டியாரா?''

''ஆமாய்யா, தர்மகர்த்தா நாராயணசாமி செட்டியார்தான்.''

அடுத்த கணம் சாமியாரிடம் உத்தரவு பெற்றுக் கொண்டு பத்து மைலில் இருக்கும் காஞ்சி கிராமத்தை நோக்கி எங்கள் கார் பறந்தது.



குருவிமலை

கடலாடியைக் கடந்து காஞ்சிக்குள் நுழைந்தோம். வலப்புறம் ஒரு சிறு கோயில் தென்பட்டது. இறங்கி விசாரித்தோம். அது முருகன் கோயில் என்றும், ஈச்வரன் கோயில் சற்றுத் தொலைவில் ஆற்றங் கரையில் இருப்பதாகவும் அறிந்தோம்.

அந்தச் சிறு கிராமத்தில் சங்கராசாரியார் மடம் இருக்கும் என்று எப்படி எதிர்பார்க்க முடியும்? இருப்பினும் பூண்டி சாமியார் சொல்லியிருக்கிறாரே என்ற நம்பிக்கையில் முருகன் கோயில் சந்நிதித் தெருவில், ஒரு வீட்டுத் தாழ்வாரத்தில் படுத்திருந்த ஒருவரைப் பார்த்து, ''காஞ்சியிலே சங்கராசாரியார் மடம் ஏதாவதுயிருக்கா?'' என்று விசாரித்தேன்.

''சங்கராசாரியார் மடம் எதுவும் இங்கே கிடையாதே......'சங்கர நிலையம்'னு ஒண்ணு இருக்கு'' என்றார் அந்த ஆசாமி.

''எங்கே யிருக்கு?''

''இதேதான். இதை நான்தான் கவனிச்சுக்கறேன். காஞ்சி சங்கராசாரியார் இங்கே வந்திருந்தபோது வேத பாடசாலை நடத்துவதற்கு ஓர் இடம் வாங்கச் சொன்னார். பொதுப் பணத்துலே இதை வாங்கி வெச்சிருக்கோம்'' என்று கூறி விட்டு, ''உள்ளே வந்து பாருங்களேன்'' என்று எங்களை அழைத்துச் சென்றார். ஆச்சரியத்துடன் உள்ளே சென்றோம். அங்கு காஞ்சிப் பெரியவர்களின் வண்ணப் படம் ஒன்று மாட்டப் பட்டிருந்தது. கீழே விழுந்து குருநாதரை வணங்கி எழுந்தோம்.

இதைத்தான் பூண்டி சாமியார், 'மடம்' என்று சொல்லி யிருக்க வேண்டும் என்று தெரிந்து கொண்டோம். அது கருங்கல் கட்டடம் அல்ல. சிற்பிகளின் கைவண்ணமும் அங்கில்லை. சாதாரண செங்கல் கட்டடம். இதைத்தான் தமக்கே உரிய மொழியில் சாமியார் 'மேஸ்திரி வேலை' என்று கூறியிருக்க வேண்டும். நாங்கள் காஞ்சி கிராமத்திற்குள் நுழைந்து கரைகண்டேச்வரர் ஆலயத்திற்குச் சென்றோம். செய்யாற்றங் கரை ஓரமாக சோலைகளைக் கடந்து சென்றபோது பேரானந்தமாக இருந்தது. ஆகா! எத்தனை சாந்தி! எத்தனை அமைதி!

அது ஓர் அழகிய ஆலயம். அங்கு காலம் தவறாமல் முறைப்படி வழிபாடுகள் நடைபெற்று வருகின்றன என்று அறிந்தோம். ஸ்ரீ காஞ்சி காமகோடி சுவாமிகள் அக் கோயிலுக்கு வருகை தந்த விவரங்களும்,

அவரது அருளாசியால் திருப்பணிகளும், குடமுழுக்கு விழாக்களும் நடைபெற்ற செய்திகளும் அங்கு எழுதி வைக்கப் பட்டிருக்கின்றன.

கல்யாண மண்டபத்தில் 'காஞ்சி புராணம்' என்ற தலைப்பில் எழுதிவைக்கப் பட்டிருந்ததைப் படித்த போதுதான், காஞ்சிப் பயணத்திற்கும் அருணாசல மகிமைக்கும் இருந்த தொடர்பைத் தெளிவாகப் புரிந்து கொண்டேன்.



காஞ்சி

பார்வதி தேவி ஈசனின் இடப் பாகத் தைப் பெறுவதற்காகக் காஞ்சிமா நகரி லிருந்து அருணாசலத்திற்கு வரும் வழியில் வாலாஜா அருகிலுள்ள வாழைப்பந்தல் என்ற இடத்தில் தங்கியதாகவும், அங்கு அனுட்டானம் செய்வதற்காக சுப்பிரமணிய ரிடம் நீர் கொண்டு வரும்படி கேட்டுக் கொண்டதாகவும், அப்போது ஆறுமுகர் தன் வேலாயுதத்தை வீசி எறிய, அது மலையின் சிகரங்களில் தவம் செய்து கொண்டிருந்த போதவான், புத்திராண்டன், புருகூதன், போதன், பாண்டரங்கன், கோமன், வாமன் என்ற ஏழு அந்தணர்களைத் தாக்கி, மலையையும் துளைத்து நீர்கொண்டு வந்தது என்றும், அந்த ஆறுதான் சேய் ஆறு - சேய் உண்டாக்கிய ஆறு— என்றும் திரு எல்லப்ப நாவலரின் அருணாசல புராணத்தில் நான் முன்பு படித்திருக்கிறேன்.

அந்த நீர் சிவப்பாக இருக்கக் காரணம் என்னவென்று குமரக் கட வுள் அன்னையிடம் கேட்க, பார்வதிதேவி, புராண வரலாற்றைக் கூறினாள்:

அந்தமாபுரமென்ற பட்டணத்தில் ஏழு பிராமணர்கள் இள வயதில் தீவினைகள் செய்து, பின்னர் மனம் திருந்தி, பிரமனின் அருள் வேண்டிப் பல ஆண்டுகள் தவம் இருந்தனர். பிரும்மதேவன் அவர்கள் முன் தோன்றி 'நீங்கள் ஏழு பேரும் மலைச் சிகரங்களில் தவம் செய்தால், பின்னர் முருக னின் வேல் வந்து தாக்கி, உங்களுடைய சிரங்களைக் கொய்யும் போது, உங்கள் பாவங்கள் நீங்கும்' என்று கூறிச் சென்றார். பிரும்மதேவர் கூறி யது போலவே அவர்களை முருகனின் கூர்மையான வேல் தாக்க, அவர் களுடைய ரத்தம் நீரில் கரைந்து, அது சிவப்பாயிற்று.

அருணாசல புராணத்தில் கூறப்பட் டுள்ள இந்த வரலாற்றுக்குத் தொடர்ச்சி யாகக் காஞ்சிப் புராணம் அமைந்திருக் கிறது. தவத்தில் ஆழ்ந்திருந்த பெரியோர் களின் தலைகளைக் கொய்ததனால் ஏற்பட்ட பாவம் நீங்கும் பொருட்டு செய்யாற்றின் மேற் கரையில் ஏழு

கடலாடி



லிங்கங்களைப் பிரதிஷ்டை செய்து பூஜிக்கும்படி சுப்பிரமணியரிடம் அம்பிகை கூறியதாகவும், அதன்படியே அவர் செய்ததாகவும், காஞ்சி முதல் குருவிமலை வரையில் உள்ள அந்த ஏழு தலங்களுக்கும் 'சப்த கரைகண்டம்' என்று பெயர் வழங்கி வருவதாகவும் காஞ்சி புராணத்தில் கூறப்பட்டுள்ளது.

பின்னர், 'சப்த கரை கண்டம்' என்று அழைக்கப்படும் காஞ்சி, கடலாடி, மாம்பாக்கம், மாதிமங்கலம், எலத்தூர், பூண்டி, குருவிமலை முதலிய கிராமங்களிலுள்ள கோயில்களைத் தேடிச் சென்றோம். அவற்றுள், குருவிமலை, மாம்பாக்கம் கோயில்கள் சீரழிந்து பூஜையற்றுப் போயிருக்கின்றன. சிவலிங்கங்கள் மாத்திரம் காணப்படுகின்றன. குருவிமலையில் பாழடைந்த கருவறை மண்டபம் மட்டும் இருக்கிறது. அதனருகே செல்ல முடியாமல் ஒரே முட்புதர், குப்பை கூளம், அசுத்தம், துர்நாற்றம். மாம்பாக்கம் ஆலயத்திலுள்ள மண்டபங்களும் கற்தூண்களும் ஆபத்தான நிலையில் உள்ளன.

கடலாடி கோயிலும் சிலமாயிருக்கிறது. ஆனால், எல்லா சந்நிதிகளும் இருக்கின்றன. குருக்கள் ஒருவேளை மட்டும் வந்து, அபிஷேகம் செய்து தீபாராதனையும் செய்வதாகக் கூறினார்கள்.

பூண்டி, எலத்தூர் கோயில்கள் சற்று ஒளி பெற்று விளங்குகின்றன. மாதிமங்கலம், காஞ்சி கோயில்களில் அபிஷேக, ஆராதனை, அர்ச்சனை களோடு முறையான வழிபாடுகள் நடைபெற்று வருகின்றன.

பூண்டி சாமியார் குறிப்பிட்ட நாராயணசாமி செட்டியாரைப்பற்றி காஞ்சியில் விசாரித்தோம். தற்போது அவர் தர்மகர்த்தா அல்ல வென்றும், 'குள்ளப்பா' என்ற வெங்கடராம செட்டியாரை விசாரித்தால் எல்லாம் தெரியும் என்று கூறினார்கள். அந்த வயோதிகர் காய்ச்சலில் படுத்திருந்ததால் அதிக நேரம் அவருடன் பேச முடியாமல் போயிற்று. ஸ்ரீ காமகோடி சுவாமிகள் காஞ்சி கரைகண்டேச்வரர் கோயிலின் திருப்பணியில் காட்டிய பெரும் அக்கறையைப் பற்றி அவர் பக்தி உணர்ச்சியோடு கூறினார்.

மாதிமங்கலத்திற்கும் கடலாடிக்குமிடையே வலப்புறத்தில் ஒரு பெரிய மலை தெரிந்தது. கடலாடியிலிருந்த ஒரு பெரியவரிடம் அது என்ன மலை என்று விசாரித்தேன்.

''அதுதாங்க பர்வத மலை. மேலே ஈச்பரன் கோயில் இருக்கு.''

''மேலே ஏற முடியுமா? படிக்கட்டு இருக்கா?''

''படிக்கட்டெல்லாம் கிடையாது. காட்டுப் பாதைதான். மேலே போவனும்னு நாலு, அஞ்சு மணி நேரம் ஆகும். ரொம்ப பேஜாரா இருக்கும்.''

''மேலே உள்ள கோயில்லே பூஜை யெல்லாம் நடக்குதா?''

''வருஷத்துலே ரெண்டு தரம் குருக்கள் போய் வருவாரு. ஆனா தினம் ராத்திரியிலே சித்தர்கள் வந்து பூஜை செய்யறதா சொல்லுவாங்க.



எலத்தூர்

அங்கே படுத்தா, மணி சப்தம் கேட்கும். கற்பூர வாசனை தெரியும். காலையில் எழுந்து பார்த்தா சாமி மேலே பூ போட்டிருக்கும்.''

நண்பர் பாப்ஜி, மலைச் சிகரத்தையே உற்றுப் பார்த்துக் கொண்டிருந்தார். கடைசியில், ''என்ன ஆனாலும் சரி, ஒரு நாள் ஏறிப் போய் அந்தக் கோயில்லே ஒரு ராத்திரி தங்கிப் பார்த்துட வேண்டியதுதான்'' என்றார்.

ஒன்றரை மாதங்களுக்குப் பிறகு ஒரு நாள் பர்வத மலையில் ஏறிப் பார்த்துவிட்டு வந்து விடுவது என்று முடிவு செய்து நாங்கள் புறப்பட்டுச் சென்றோம். மலையேறுவதைக் குறித்து அவ்வூர்வாசிகள் எங்களை ரொம்பவும் பயமுறுத்தி வைத்திருந்ததால், பூண்டி சாமியாரிடம் மலையைப் பற்றி விசாரித்து விட்டு அவர் ஆசியையும் பெற்றுச் செல்வது என்று தீர்மானித்து, பூண்டிக்குச் சென்றோம்.



மாதிமங்கலம்

சாமியாரிடம் சென்று, ''பர்வத மலையிலே ஏறிப் பார்க்கலாம்னு வந்திருக்கோம். போய்வரலாமா?'' என்று கேட்டேன் நான்.

''நல்லது, போய் வாப்பா'' என்றார் சாமியார்.

''அங்கே என்னெல்லாம் பார்க்கணும்?'' என்று கேட்டேன் அடுத்தபடி.

''பச்சையம்மா கோயில். சிவராத்திரி விசேஷம். அன்னபிஷேகம். ரத சப்தமி...அன்னிக்கு நான் அங்கேயிருந்தேன்'' என்றார் சாமியார்.

மலையின் மீது சிவன் கோயில் இருப்பதாகத்தான் சொன்னார்கள். ஆனால், பூண்டி சாமியார் பச்சையம்மன் என்கிறார். மனத்தில் குழப்பம் ஏற்பட்டாலும் நான் குறுக்குக் கேள்வி கேட்காமல் அவர் கூறியவற்றைப் பேசாமல் கேட்டுக் கொண்டேன்.

''சாமி, அந்த மலை ஏர்றது ரொம்பக் கஷ்டம்னு எல்லாரும் சொல்றாங்களே, சௌக்கியமா போய்வரத்துக்கு நீங்க ஆசிர்வாதம் செய்யுங்க.''

மாம்பாக்கம்



''போப்பா......பெரிய தண்டவாளம், சின்ன தண்டவாளம்...... கடப்பாரை...எல்லாம் ஜம்பர் வேலை'' என்றார் சாமியார்.

எனக்குத் தலைகால் புரியவில்லை. இருந்தாலும் வாயை மூடிக் கொண்டிருந்தேன்.

''கடலாடிக்குப் போய் மணியக்காரர் நாகேச்வர ஐயரைப் பார்த்துட்டுப் போலாம்னு இருக்கோம்.''

''நேரங் கடந்து போச்சு...'' என்றார் சாமியார்.

''ராத்திரி மலைமேலே தங்கலாம்னு நினைச்சுக்கிட்டிருக்கோம். அங்கே சித்தர்கள் நடமாட்டம் இருக்கும்னு சொல்றாங்களே...அந்தக் காட்சிகள் எல்லாம் எங்களுக்குக் கிடைக்குமா?''

''போய் வாப்பா......ஆக்கமும் ஊக்கமும் இருந்தா எல்லாம் கிடைக்கும்'' என்றார் சாமியார்.

பூண்டி சுவாமிகளிடம் விபூதிப் பிரசாதம் பெற்றுக் கொண்டு வழியில் சில இடங்களைப் படம் பிடித்துக்கொண்டு நாங்கள் கடலாடியை அடைந்த போது மாலை நான்கு மணியாகி விட்டது. நேரே மணியக்காரர் நாகேச்வரன் வீட்டைத் தேடிச் சென்றோம். நாங்கள் வந்த காரியத்தைக் கூறிய போது எல்லையற்ற மகிழ்ச்சி யடைந்தார் அவர். 'அருணாசல மகிமை'யில் கடலாடியும், பர்வத மலையும் இடம் பெறுவதைக் குறித்து அவருக்குத் தான் எத்தனை ஆர்வம், ஆனந்தம்! ஒரு பெட்ரோமாக்ஸ் விளக்கை எடுத்துக் கொண்டு, உடனேயே மலையேறி, இரவு ஏழு, எட்டுக்குள் உச்சிக்குப் போய்விட வேண்டும் என்று நாங்கள் துடித்தோம். அவரிடம் எங்கள் விருப்பத்தையும் வெளியிட்டோம்.

''சார், நீங்க என்னைத் தேடிக்கொண்டு கடலாடிக்கு வந்திருக்கிறீர்கள். உங்களை மலைக்கு அனுப்பி,திரும்பி ஜாக்கிரதையா அழைத்துக் கொண்டு வர வேண்டியது என் பொறுப்பு. எப்படிப் போவது, எப்போ போவது என்பதை யெல்லாம் என்னிடம் விட்டு விடுங்கள்'' என்று கண்டிப்பாகக் கூறினார் அவர். அவர் ஒரு கறார் பேர்வழி என்பதைப் புரிந்துகொண்ட நான், ''சரி, நீங்கள் சொல்வதை அப்படியே கேட்கிறோம்'' என்றேன்.

''சாப்பிட்டுவிட்டு ராத்திரி இங்கேயே படுத்துக்கோங்க. விடியற் காலை அஞ்சு மணிக்கெல்லாம் எழுந்து குளிச்சுட்டு மலைக்குக் கிளம்பிடலாம். அதற்கு வேண்டிய ஏற்பாடெல்லாம் நான் கவனித்துக் கொள்கிறேன்'' என்று நாகேச்வர ஐயர் கூறவே, நாங்கள் காஞ்சி கரை கண்டேச்வரரைத் தரிசித்து விட்டு வந்து சாப்பிடுவதாகக் கூறி அவரிடமிருந்து விடை பெற்றுக் கொண்டோம்.

'நேரங் கடந்து போச்சு' என்று பூண்டி சாமியார் சொன்னது பலித்து விட்டது. நாங்கள் அன்று மலை ஏற முடியவில்லை.

பர்வத மலை வரையில் எங்களை அழைத்து வந்த ஸ்ரீ காஞ்சிப் பெரியவர்கள், தேவையான சௌகரியங்களோடு எங்களை மலையேற வைப்பதற்கும் அங்கு ஒரு நல்ல மனிதரையும் காட்டித் தந்து உதவி புரிந்த அதிசயத்தை விவரிக்க வார்த்தைகளில்லை.

நாகேச்வர ஐயர், ஸ்ரீ காஞ்சிப் பெரியவர்களின் பூர்வாசிரம சகோதரரான கணபதி சாஸ்திரிகளின் மாப்பிள்ளை என்பதை அறிந்து மட்டற்ற மகிழ்ச்சி யடைந்தேன் நான். அவரைப் போலவே அவருடைய மனைவியாரும் சிரித்துச் சிரித்துப் பேசினர். உள்ளன்போடும் உயர்ந்த பண்போடும் உபசரித்தார்.

ஸ்ரீ காமகோடி சுவாமிகள் பட்டத்திற்கு வந்த 1907-ம் ஆண்டில் தாம் பிறந்ததாகவும், அதனால் தம்முடைய பாட்டனர் திரிபுரசுந்தரி யென்று தமக்குப் பெயரிட்டதாகவும் கூறினர் அந்த அம்மாள்.

நாற்பது ஆண்டுகளுக்கு முன்பு மௌனப் படங்களைத் திரையிடும் தொழிலில் ஈடுபட்டிருந்த நாகேச்வரன், காமகோடி சுவாமிகளுக்கு 'பயாஸ்கோப்' படம் போட்டுக் காட்டியதை நகைச்சுவையோடு நினைவு கூர்ந்தார். அப்போது கடலாடிக்கு வருகை தந்த சுவாமிகளுக்கு எகிப்து தேசத்தில் நடைபெற்ற திருவிழாப் படம் ஒன்றைப் போட்டுக் காட்டினராம். அதை சுவாமிகள் ரசித்துப் பல கேள்விகள் கேட்டாராம். அத்துடன் ''நீ ஜனங்களுக்குப் போட்டுக் காட்டும் போது எப்படி விளக்கம் கொடுப்பே. அப்படியே பேசிக் காட்டு'' என்றாராம். நாகேச்வரனும் கொட்டகையில் பேசுவது போலவே பேசிக் காட்டினராம். சுவாமிகள் அதை வெகுவாக ரசித்தாராம்.

நானூறு வருடங்களுக்கு முன், விஜய நகர சாம்ராஜ்யத்தைச் சேர்ந்த அச்சுததேவராயர் என்ற மன்னர், நாகேச்வரனின் முன்னோர் களுக்குப் பல கிராமங்களை மான்யமாக வழங்கியிருக்கிறார். அதற்கான தாமிர பட்டயங்களை பெரும் நிதியாகக் கருதி இன்னும் காத்து வருகிறார். அவற்றைத் தன் மடியில் வைத்துக் கொண்டு பெருமையுடன் புகைப்படம் எடுத்துக் கொண்டார்.

பல வருடங்களுக்கு முன் சென்னை சமஸ்கிருத கல்லூரியில் உரை யாற்றும் போது காஞ்சிப் பெரியவர்கள், வட ஆற்காடு மாவட்டத்தில் ஒருத்திக்கு நல்ல பாம்பு பிறந்ததையும், குழந்தையைப் போல் வீட்டில் வளர்ந்து வந்த அந்தப் பாம்பின் மீது குருட்டுக் கிழவி ஒருத்தி, சுடச் சுடப் பால் பாத்திரத்தை வைத்து விட்டதால் அது இறந்து போனதையும் அத னால் அந்தக் குடும்பத்தில் பிறக்கும் முதல் பிள்ளைக்கு நாகேச்வரன் என்ற பெயர் வைக்கும் பழக்கம் ஏற்பட்டது என்றும் ஓர் உண்மைக் கதையைக் கூறி, அத்தனை பேரையும் கண் கலங்க வைத்தார். இதைப்பற்றி 'ஸ்ரீசைலத்தில் ஸ்ரீ சங்கரர்' என்ற நூலில் நான் குறிப்பிட்டிருக்கிறேன்.

நாகேச்வர ஐயருடன் பேசிக் கொண்டிருந்த போது, அவர்களுடைய வம்சத்தில் பிறந்த ஒருத்திக்குத்தான் பாம்பு பிறந்தது என்றும், அவர் தற்போது வசிக்கும் அதே வீட்டில்தான் குருட்டுக் கிழவியொருத்தியின் அஜாக்கிரதையினால் அது உயிரிழக்க நேரிட்டது என்றும், அந்த வம்சத்தில் பிறந்ததனால்தான் தமக்கு நாகேச்வரன் என்ற பெயரிடப்பட்டதாகவும் அவர் கூறினர். சற்றும் எதிர்பாராதவகையில், ஏற்கெனவே நான் கேள்விப் பட்டிருந்த ஓர் அற்புத நிகழ்ச்சி நடைபெற்ற வீட்டில் இருக் கிறோம் என்பதை அறிந்த போது பேராச்சரியத்தில் பேச்சற்றுப் போனேன்.

மறு நாள் காலை ஐந்து மணிக்கெல்லாம் எழுந்து, பம்ப் செட்டில் குளித்து விட்டு, காப்பியைக் குடித்து விட்டு நாங்கள் மலையேறத் தயாராகி விட்டோம். எங்கள் மூட்டைகளைத் தூக்கி வரவும், எங்களுக்கு வழி காட்டவும் மூன்று நபர்களை ஏற்பாடு செய்திருந்தார் நாகேச்வரன். தர்மலிங்கம், தொப்புளான், தாத்தா மூவரும் முன்னால் செல்ல, நான், பாப்ஜி, புகைப்படக்காரர் சுந்தரம், காரோட்டி பழநி நால்வரும் பின்னால் சென்றோம். கிராமத்தின் வீதிகளைக் கடந்து மலையடிவாரத்தை நோக்கி நடந்த போது, கிராமவாசிகள் எங்களை ஆச்சரியத்துடன் பார்த்தார்கள். சிலர் ஏளனமாகச் சிரித்தார்கள். 'இவர்களாவது இந்த மலையை ஏறி விட்டு வருவதாவது' என்ற அலட்சிய பாவம் அவர்கள் முகங்களில் நெளிந்ததைக் கண்டு நாங்கள் அதைரியப்படவில்லை. 'இது என்ன, பெரிய மலையா? இது எங்களுக்குப் பரங்கிமலையைப் போல் ரொம்ப சாதாரணமானதுதான்' என்ற கர்வத்துடனேயே சென்றோம்.

சரியாக காலை ஆறு மணிக்கு மலையடிவாரத்திற்கு வந்து விட்டோம். ஆள் உயரம் வளர்ந்துள்ள கோரைப் புற்களையும், முட் செடிகளையும் விலக்கிக் கொண்டு காட்டுப் பாதையில் மெள்ள நடந்து கொண்டிருந்தோம். வழியெங்கும் சிறிய கற்களும், பெரிய கற்களும் சிதறிக் கிடக்க, மேட்டிலும் பள்ளத்திலும் இப்படியும் அப்படியும் கால்களை மாற்றிமாற்றி வைத்து, குதித்து, தாண்டி, திணறித் தட்டுத் தடுமாறி முன்னேறிக் கொண்டிருந்தோம்.

ஒரு மணி நேரம் நடப்பதற்குள் அத்தனை பேர் உடலிலும் ரத்தம் கசிந்து கொண்டிருந்தது. எத்தனையோ பேர் உயர்ந்த லட்சியங்களுக்காக ரத்தம் சிந்துகிறார்கள். எங்கள் லட்சியமும் உயரத்தில் இருந்ததால் நாங்கள் ரத்தம் சிந்தினோம்!

முட் செடிகள் எங்கள் உடலில் குத்திக் காயப் படுத்தின. மேல் துண்டைப் பற்றி இழுத்தன. ஆன்மிக வாழ்க்கையில் உன்னத நிலையடைய முயலுபவர்களை முன்னேற விடாமல், ஆசாபாசங்கள் பெரும் தடைகளாக

பர்வதமலைத் தோற்றம்



இருந்து பற்றியிழுப்பது போல், முட் செடிகள் எங்கள் பயணத்தைத் தடுக்கப் பார்த்தன. நாங்கள் எதற்கும் சளைக்கவில்லை. எதைக் கண்டும் அசந்து விடவில்லை. கருமமே கண்ணுக, மெள்ளமெள்ள உயர்ந்து கொண்டிருந்தோம்!



ஸ்ரீ நாகேச்வர ஐயர் தம்பதி

சுந்தரம் சட்டென்று ஒரு பாறையின் மீது அமர்ந்தார். ''ஆகா, இங்கேயிருந்து 'வ்யூ' எவ்வளவு நன்ருயிருக்கிறது!'' என்று இயற்கையை ரசிக்க ஆரம்பித்தார். அவரைத் தொடர்ந்து நானும் பாப்ஜியும் இயற்கையின் ரசனையில் மனத்தை ஓட விட்டோம். எல்லோருக்கும் மெள்ள மூச்சு இரைக்கத் தொடங்கி விட்டது. அதை வெளியில் காட்டிக் கொள்ள வெட்கம். இயற்கையை ரசிக்கும் சாக்கில் சற்று இளைப்பாறினேம்!

மீண்டும் நடந்தோம். நடந்து கொண்டே யிருந்தோம். சட்டென்று நின்று மேலே பார்த்தேன் நான்.

இரண்டு மணி நேரம் நடந்திருப்போம். மலைச் சிகரம் அருகில் வருவதாகக் காணும். வழிகாட்டியைப் பார்த்து, ''அங்கே போக இன்னும் எத்தனை நேரம் ஆகும்?'' என்று கேட்டேன் நான்.

''சார், நீங்க மேலே பார்க்கக் கூடாது. கீழே பார்த்துக்கிட்டே நடக்கணும். என் காலைப் பார்த்துகிட்டே பேசாமெ நடங்க. உச்சியைப் பார்த்தா மலைப்பாத்தான் இருக்கும். மனசுலே அதைரியம் வந்துடும்'' என்ருர் தர்மலிங்கம்.

''சரி, அப்படியே செய்கிறேன்'' என்று சொல்லிவிட்டு, முன்னல் நடந்து சென்ற தர்மலிங்கத்தின் கால்களைப் பார்த்துக் கொண்டே நடந்தேன் நான். அதனல் என் கால்களைக் கவனிக்கத் தவறி விட்டேன். என் இடக்கால் சற்று வழுக்கி விடவே, ஒரு பள்ளத்தில் காலை விட்டு விட்டேன். முழங்கால் முட்டிக்குக் கீழ் நல்ல அடி. ரத்தம் பீறிட்டது. எல்லோரும் வந்து முதற் சிகிச்சை யளித்தார்கள். துணியைக் கிழித்துக் கட்டினுர்கள். மேற்கொண்டு என்னல் ஏற முடியுமா, அல்லது முன்வைத்த காலைப் பின் வைக்க வேண்டியதுதானு என்ற கவலைக்குறி என் நண்பர்களின் முகங்களில் படரக் கண்டேன். ''கவலைப்படாதீர்கள். காமகோடிப் பெரியவரின் துணையும், பூண்டி சாமியாரின் ஆசியும் இருக்கிறது. நான் எப்படியாவது ஏறி விடுவேன்'' என்று அவர்களுக்கு நம்பிக்கையளித்தேன்.

என் இடக் கால் திடீரென்று வலுவிழந்து போயிற்று. அது நான் சொன்ன பேச்சைக் கேட்காமல் எங்கெங்கோ ஊன்றியது. தள்ளாட ஆரம்பித்தேன். தர்மலிங்கம் பார்த்தார். மரக் கிளையை உடைத்துச் சீவி, அழகான தடியாக்கி என் கையில் தந்தார். அதை ஊன்றிக் கொண்டே தாத்தாவைப் போல் நான் நடக்கத் தொடங்கினேன். இந்தக் காட்சி சுந்தரத்திற்கு வேடிக்கையாயிருந்தது. சிரித்துக் கொண்டே ஒரு போட்டோ 'தட்டி'க் கொண்டார்.

நடந்து கொண்டிருந்தோம்.

''தொடாதேய்யா'' என்று அலறினர் சுந்தரம். அவருடைய கால்களும் உதறத் தொடங்கின. கீழே விழுந்து விடுவாரோ என்று பயந்த பழநி, அவரைப் பிடிக்கப் போனர். அப்போதுதான் சுந்தரம் அப்படி அலறினர். காமிராப் பையைக் கையில் வைத்துக் கொண்டு ஒரு மாதிரி 'அட்ஜஸ்ட்' செய்து கொண்டு மிக மிக ஜாக்கிரதையாகப்போய்க் கொண்டிருக்கும் போது, யாராவது தொட்டால் பாலன்ஸ் தவறி விழுந்து விடுவோமோ என்ற கிலி அவருக்கு!

நடந்து கொண்டிருந்தோம்.

''யோவ், தொடாதேன்னு கேட்க மாட்டியா?'' என்று மீண்டும் அலறினர் சுந்தரம். ஆனல், அவர் அருகில் ஒருவருமே இல்லை. ஒரு மரக் கிளை அவர் மீது பட்டிருக்கிறது. அவ்வளவுதான். யாரோ தொடுவதாக நினைத்து நடுங்கியே விட்டார் அவர்!

அப்போது 'பழநி ஆண்டவருக்கு அரோஹரா, அண்ணுமலையாருக்கு அரோஹரா' என்ற முழக்கம் கேட்டது. அது மலைப் பாறைகளில் மோதி எதிரொலித்தது. கீழே ஏறி வருபவர்கள் கொடுத்த குரல் அது.

நாங்களும் ''அண்ணுமலையாருக்கு அரோஹரா'' என்று பதிலுக்குக் குரல் கொடுத்துக் கொண்டே திரும்பிப் பார்த்தோம். அங்கிருந்து திருவண்ணுமலை தெரிந்தது. கன்னத்தில் போட்டுக் கொண்டோம்.

'அண்ணுமலையாருக்கு அரோகரா' என்று அவ்வப்போது குரல் எழுப்பிக் கொண்டே பர்வத மலைப் பயணத்தைத் தொடர்ந்தோம். இத்தனை நேரம் கருணையோடு மலைக்குப் பின்னல் மறைந்திருந்த சூரியன், மேலெழுந்து எங்களைக் கடுமையாகத் தாக்கத் தொடங்கினன். களைப்பு மேலிட்டது. அசதியால் ஓய்ந்து விட்டோம்.

''இன்னும் எவ்வளவு தூரம் இருக்கிறது?'' என்று தர்மலிங்கத்தினிடம் கேட்டேன் நான்.

''இதோ ஆயிடுத்து, வாங்க......தோ அந்த உச்சிக்கு ஏறி கொஞ்சம் இறங்கி, கொஞ்சம் ஏறிட்டா, சுலபமாப் போயிடலாம்'' என்று தர்மலிங்கம் மிக சாமர்த்தியமாகப் பதில் சொன்னர். எங்களை ஏதோ சிறு குழந்தைகள் என்று நினைத்து, நாங்கள் அதைரியம் அடைந்து விடக் கூடாதே என்பதற்காக 'இதோ வந்தாச்சு, இன்னும் கொஞ்சம்தான்' என்று அவர் அடிக்கடி சொல்லிக் கொண்டிருந்ததைக் கேட்டு நாங்கள் உள்ளுக்குள் சிரித்துக் கொண்டோம்.



பர்வத மலைப் பயணம்

''பாதி தூரமாவது வந்திருப்போமா?'' என்று கேட்டார் பழநி.

''பாதி தூரமா?...ஓ வந்திருப்போம்'' என்று கூறிவிட்டுத் தர்மலிங்கம் தொப்புளானைப் பார்த்தார். தொப்புளான் தாத்தாவைப் பார்த்தார். எவ்வளவு தூரம் வந்திருப்போம் என்று அவர்களுக்கே 'ஐடியா' இல்லை.

''இதோ ஆயுடுச்சுங்க. நீங்க இப்படி நடந்தீங்கன்னு இருட்டினப் புறம் தான் போய்ச் சேருவோம்'' என்று தர்மலிங்கம் எங்கள் நடையைக் கேலி செய்தார்.

''என்னய்யா செய்யறது? நாங்களெல்லாம் பட்டணத்து ஆசாமிங்க. நடந்து எங்கே பழக்கம்? கார்லேயும் பஸ்லேயும் ஏறியே பழக்கப்பட்டுப் போச்சு. மலை ஏர்றதுன்னு முடியுமா?''

''பின்னே என்னமோ பரங்கிமலை மாதிரி சொலபமா ஏறிடுவேன்னு சொன்னீங்களே!'' என்று கேட்டுவிட்டு தர்மலிங்கம், தொப்புளானைப் பார்த்துக் கண் சிமிட்டினுர்.

எங்களுக்கு நாக்கைப் பிடுங்கிக் கொள்ளலாம் போலிருந்தது!

''வழி ஒழுங்காயிருந்தால் நடந்துடுவோம். எங்கே பார்த்தாலும் ஒரே முள்ளுச் செடி. ஆள் உயரத்துக்குக் கோரைப் புல். கால் எடுத்து வச்சா கல்லுவழுக்குது. உங்களுக்குப் பழக்கம், வேகமாக நடந்துடறீங்க'' என்ருர் சுந்தரம் சற்று உரத்தக் குரலில்.

''அது சரி......உங்களுக்கு ஏன் சார் கால் உதறுது? அவருக்குத்தான் கால்லே அடிபட்டுது; உங்களுக்கு என்ன?'' என்று சுந்தரத்தைப் பார்த்துக் கேலியாகக் கேட்டார் தர்மலிங்கம்.

மறு நாள் காலை ஐந்து மணிக்கெல்லாம் எழுந்து, பம்ப் செட்டில் குளித்து விட்டு, காப்பியைக் குடித்து விட்டு நாங்கள் மலையேறத் தயாராகி விட்டோம். எங்கள் மூட்டைகளைத் தூக்கி வரவும், எங்களுக்கு வழி காட்டவும் மூன்று நபர்களை ஏற்பாடு செய்திருந்தார் நாகேச்வரன். தர்மலிங்கம், தொப்புளான், தாத்தா மூவரும் முன்னால் செல்ல, நான், பாப்ஜி, புகைப்படக்காரர் சுந்தரம், காரோட்டி பழநி நால்வரும் பின்னால் சென்றோம். கிராமத்தின் வீதிகளைக் கடந்து மலையடிவாரத்தை நோக்கி நடந்த போது, கிராமவாசிகள் எங்களை ஆச்சரியத்துடன் பார்த்தார்கள். சிலர் ஏளனமாகச் சிரித்தார்கள். 'இவர்களாவது இந்த மலையை ஏறி விட்டு வருவதாவது' என்ற அலட்சிய பாவம் அவர்கள் முகங்களில் நெளிந்ததைக் கண்டு நாங்கள் அதைரியப்படவில்லை. 'இது என்ன, பெரிய மலையா? இது எங்களுக்குப் பரங்கிமலையைப் போல் ரொம்ப சாதாரணமானதுதான்' என்ற கர்வத்துடனேயே சென்றோம்.

சரியாக காலை ஆறு மணிக்கு மலையடிவாரத்திற்கு வந்து விட்டோம். ஆள் உயரம் வளர்ந்துள்ள கோரைப் புற்களையும், முட் செடிகளையும் விலக்கிக் கொண்டு காட்டுப் பாதையில் மெள்ள நடந்து கொண்டிருந்தோம். வழியெங்கும் சிறிய கற்களும், பெரிய கற்களும் சிதறிக் கிடக்க, மேட்டிலும் பள்ளத்திலும் இப்படியும் அப்படியும் கால்களை மாற்றிமாற்றி வைத்து, குதித்து, தாண்டி, திணறித் தட்டுத் தடுமாறி முன்னேறிக் கொண்டிருந்தோம்.

ஒரு மணி நேரம் நடப்பதற்குள் அத்தனை பேர் உடலிலும் ரத்தம் கசிந்து கொண்டிருந்தது. எத்தனையோ பேர் உயர்ந்த லட்சியங்களுக்காக ரத்தம் சிந்துகிறார்கள். எங்கள் லட்சியமும் உயரத்தில் இருந்ததால் நாங்கள் ரத்தம் சிந்தினோம்!

முட் செடிகள் எங்கள் உடலில் குத்திக் காயப் படுத்தின. மேல் துண்டைப் பற்றி இழுத்தன. ஆன்மிக வாழ்க்கையில் உன்னத நிலையடைய முயலுபவர்களை முன்னேற விடாமல், ஆசாபாசங்கள் பெரும் தடைகளாக

பர்வதமலைத் தோற்றம்



''கொஞ்சம் தண்ணி குடிச்சிட்டு வந்துடறேன்......'' என்று கூறி பாப்ஜியைப் பார்த்தேன்.

''அதான் இல்லே. இரண்டு புட்டியிலேயும் இருந்த தண்ணி முழுதும் ஆயிடுத்து'' என்று கையை விரித்தார் அவர்.

''ஒரு வெற்றிலே இருந்தா கொடு'' என்று சுந்தரத்தைக் கேட்டேன்.

''அதுவும் ஆயிடுத்து. புகையிலேதான் இருக்கு!'' என்றார் சுந்தரம்.

''இந்த மலேயிலே சித்தர்கள் வாசம் செய்யறதா சொல்கிறுங்களே, இப்ப யாராவது ஒரு தம்ளர் 'ஐஸ் வாட்டர் கொண்டு வந்து கொடுத்தா எப்படி யிருக்கும்?'' என்றார் பாப்ஜி.

''நூறு ரூபாய் கொடுப்பேன்'' என்றார் சுந்தரம்.

''மேலே வாங்க. சுனே இருக்கு......வேணுங்கற தண்ணி குடிக்க லாம்'' என்று எங்களே உற்சாகப்படுத்தினர் தர்மலிங்கம்.

''மேலே போய்ச் சேர்ற வரைக்கும் உயிர் இருக்குமா? தாகம் பிராணன் போகிறது'' என்றேன் நான்.

''இதோ முக்கியமான இடத்துக்கு வந்துட்டோம். எல்லோரும் பார்த்து மெதுவா ஏறணும். கடப்பாறையைப் பிடிச்சுக்கிட்டு, ரொம்ப ஜாக்கிரதையா ஏறணும். கையை யெல்லாம் நல்லாத் துடைச்சுக்குங்க..'' என்றார் தர்மலிங்கம். அது ரொம்பச் செங்குத்தான ஏற்றம். மிகவும் குறுகலான பாதை. இருபுறமும் கிடுகிடு பாதாளம். இதை எப்படி ஏறப் போகிறேம் என்று எல்லோரும் ஒரு கணம் கவலேயோடு நின்றேம்.

அந்த இடத்தில் ஒரு திரிசூலம் இருக்கிறது. அதற்குக் கற்பூரம் ஏற்றி எல்லோரும் கும்பிட்டோம். ''அண்ணுமலேயாருக்கு அரோஹரா'' என்று முழக்கமிட்டோம்.

''சுந்தரம், முதல்லே நீ ஏறிப் போய் மேலே நில்லு. அப்போதான் நாங்க ஏறி வர்றபோது நீ போட்டோ எடுக்கலாம்......''என்றார் பாப்ஜி.

பர்வத மலேயிலிருந்து திருவண்ணுமலே தரிசனம்



சுந்தரம் மறுத்து விட்டார். ''காமிராவையும் எடுத்துக்கிட்டு எப்படிய்யா ஏர்றது? காமிராவைப் பிடிப்பேனு, கடப்பாறையைப் பிடிப்பேனு? அதெல்லாம் நடக்காது'' என்ருர். தனியே ஏறிப் போவதற்கு அவருக்குப் பயம். முதலில் யாராவது ஏறட்டும். அதைப் பார்த்துக் கொண்டு பின்னலேயே ஏறலாம் என்று அவர் காத்திருந்தார்.

''சரி, அப்போ ஒண்ணு செய். நாங்க ஏறிப் போருேம். நீ கீழேயிருந்து போட்டோ எடுத்துட்டு, கடைசியிலே வா'' என்ருர் பாப்ஜி.

''யோவ்! அதெல்லாம் வாணும்... இந்த 'ஆங்கில்லே' போட்டோ சரியா விழாது. மறுபடியும் கீழே இறங்கற போது போட்டோ எடுத்துக்கலாம்...'' என்று கூறி காமிராவைத் தொப்புளானிடம் கொடுத்து விட்டார் சுந்தரம்.

ஒவ்வொருவராக ஏற ஆரம்பித்தோம். அவரவர் சௌகரியப்படி ஒவ்வொருவரும் ஒவ்வொரு விதமாக ஏறினேம். ஆனல், எல்லோரும் பயந்து கொண்டேதான் ஏறினேம். உயிரைக் கையில் பிடித்துக்கொண்டு ஏறினேம். வேண்டாத தெய்வங்களை யெல்லாம் வேண்டிக் கொண்டு ஏறினேம். கடப்பாறையின் மீதே கண்ணுக, மேலேயும் கீழேயும் பக்கவாட்டிலுப் பாராமல், மெள்ள உட்கார்ந்து, ஊர்ந்து, தவழ்ந்து ஒரு வழியாக மேலே போய்ச் சேர்ந்து விட்டோம்.

இரண்டடிக்கு ஒரு கடப்பாறையாக எதிரும் புதிருமாக அங்கே நட்டு வைத்திருக்கிருர்கள். ஒன்றைக் கெட்டியாகப் பிடித்துக் கொண்டு, மற்ருெரு கையால் மேலுள்ள கம்பியைப் பிடித்துக் கொள்வதும், பிறகு முதல் பிடியைத் தளர விடுவதுமாக எப்படியோ ஏறி விட்டோம். ஏறும்போது அங்கொன்றும் இங்கொன்றுமாக இரும்புக் கம்பிகள் உடைந்திருப்பது கண்ணில் படுகிறது. அப்போதெல்லாம் 'நாம் பிடித்திருக்கும் கம்பி உடைந்து விட்டால் நம் கதி என்ன?' என்று நினைக்கத் தோன்றுகிறது. குலை நடுங்குகிறது.

''பாறையிலே கடப்பாறையைப் புதைச்சு வெச்சிருக்காங்களே. இதுக்குத்தான் ஜம்பர் வேலைன்னு பெயர்'' என்கிருர் பாப்ஜி.

ஓகோ, இதைத்தான் பூண்டி சாமியார், 'ஜம்ப்பர் வேலைய்யா' என்று சொல்லி யிருக்கிருர். சாமியார், 'பெரிய தண்டவாளம், சின்ன தண்டவாளம்' என்ருரே, அது என்ன?'' என்று கேட்டேன் நான்.

''இதோ பாருங்க. இரண்டு பாறைகளை இணைக்க தண்டவாளத்தில் பாலம் போட்டிருக்காங்க. அதுலே ரொம்ப ஜாக்கிரதையா போகணும்'' என்கிருர் தர்மலிங்கம். 'அட ராமா, இன்னொரு கண்டமா?' என்று நினைத்துக் கொள்கிருேம்.

ஒவ்வொருவராக நாற்கால் பிராணியைப் போல் அதில் தவழ்ந்து சென்ருேம். அது 'கிடுகிடு' என்று ஆடுகிறது. உயிர் போய், உயிர் வருகிறது.

''அதோ பாரு, பூண்டி சாமியார் சொன்ன சின்ன தண்டவாளம்'' என்று காட்டுகிறார் பாப்ஜி.

அங்கு இரும்பாலான ஓர் ஏணி இருக்கிறது. அது ஆடுகிறதா, விழுந்துவிடுமா என்ற பயத்துடன் சோதித்துப் பார்த்துவிட்டு, அதில் ஏறிப் போகிறோம். மீண்டும் கொஞ்ச தூரம் பாறையோடு பாறையாக ஒட்டி, உராய்ந்து கொண்டு, இரும்புக் கம்பிகளைப் பிடித்துக் கொண்டு ஒரு மண்டபத்திற்கு வந்து சேருகிறோம்.



மலைமீதுள்ள ஸ்ரீ மல்லிகார்ஜுன சுவாமி ஆலயம்

அது பாழடைந்த மண்டபம். அதில் வந்து அமர்ந்ததும் 'ஜில்' லென்று காற்று வருகிறது. சற்று இளைப்பாறலாம் என்று தோன்றுகிறது. நாங்கள் அங்கு அமர்ந்திருக்கும்போது, பாண்டு, அவருடைய குடும்பத்தோடு வந்து சேர்ந்தார். தமது மூன்று வயது மகனைத் தோளில் சுமந்து கொண்டு, மலையேறி வந்ததோடு, இந்தச் சறுக்கும் பாறையில் கம்பிகளைப் பிடித்துக் கொண்டு அவர் ஏறி வந்ததை எண்ணியபோது அதிசயிக்காமல் இருக்க முடியவில்லை.

அந்த இளைப்பாறி மண்டபத்தைக் கடந்து சென்றதும் ஓர் அருமையான சுனை இருக்கிறது. படிக்கட்டுகளில் இறங்கிப் போய் பாண்டு தண்ணீர் கொண்டு வந்து கொடுத்தார். அதைத் தம்ளர் தம்ளராக தாகம் அடங்கப் பருகினோம். ஐஸ் வாட்டர் தோற்றது. அத்தனை குளிர்ச்சி!

''நீ கேட்ட ஐஸ் வாட்டரை விடக் குளிர்ச்சியாக சித்தர்கள் கொடுத்து விட்டார்கள்'' என்றேன் நான் பாப்ஜியைப் பார்த்து.

''வாங்க, இதிலே குளிச்சிப் பாருங்க. என்ன அருமையா இருக்கு தெரியுமா? மூலிகைகள் கலந்த தண்ணி. உடம்புக்கு ரொம்ப நல்லது'' என்று ஏற்கெனவே குளித்துவிட்டு வந்த பாண்டு, எங்களை அழைத்தார்.

ஒவ்வொருவராக பயந்து நடுங்கி அதில் இறங்கிக் குளித்தோம். ஆகா! அந்த ஐஸ் கிணற்றில் குளிக்கக் கொடுத்து வைத்திருக்கவேண்டும். நடந்து வந்த களைப்பெல்லாம் ஒரே நொடியில் பறந்து விடுகிறது. அசதியெல்லாம் மறைந்து விடுகிறது. அதைப் போல் இன்னொரு மலை கூட ஏறி விடலாம் என்ற தெம்பும் பலமும் வருகிறது.



ஸ்ரீ விநாயகர், ஸ்ரீ ஆறுமுகன்

எல்லோருக்கும் 'கப கப' வென்று பசியெடுக்கவே ஆளுக்கு ஒரு பிடி தயிர் சாதத்தை எடுத்து உருட்டி சாப்பிட்டோம்.

"இதுதான் கோட்டை மைதானம்" என்று இடப்புறத்தில் உள்ள திறந்த வெளியைச் சுட்டிக் காட்டினார் தர்மலிங்கம். அங்கு இடிந்த கோட்டை சுவர்கள் காணப்படுகின்றன. அதுதான் ராணிக் கோட்டை.

அங்கிருந்து பார்த்தால் இயற்கைக் காட்சி, கண்ணைக் கவரும் வண்ண ஓவியமாகக் கண் முன்னால் விரிகிறது. ஜவ்வாது மலைத் தொடர்ச்சி, தொலைவில் கோட்டைச் சுவர் போல் சுற்றி வருவது தெரிகிறது.

கோட்டை மைதானத்தை விட்டு இறங்கி மீண்டும் மேலே ஏறிப் போனோம். அங்கு பாதை தப்பிப் போய் நாங்கள் இரண்டு 'பார்ட்டி' யாகப் பிரிந்து விட்டோம். தர்மலிங்கம் முன்னே செல்ல, சுந்தரம், நான், பழநி மூவரும் அவர் பின்னால் சென்று விட்டோம். அது மிகவும் ஆபத்தான சரிவுப் பாதை. கால் இடறி விழுந்தால், எலும்புகள் கூடக் கிடைக்காது. சிறிது தூரம் சென்ற பிறகுதான் அது வழியே இல்லை என்று தெரிந்தது. திரும்புவதற்குக்கூட இடமில்லை. பாறையோடு ஒட்டிக் கொண்டு, பின்புறமாகவே நடந்து வந்து சேர்ந்தோம்.

"என்ன தர்மலிங்கம். அவங்களை எங்கே அழைச்சிட்டுப் போயிட்டே?" என்று கேட்டு தாத்தா சிரித்தார்.

"எமன் வாய்க்கு அழைச்சிக்கிட்டுப் போனார். எப்படியோ தப்பி வந்துட்டோம்" என்றேன் நான்.

கரடுமுரடான பாறைகளில் ஏறி இறங்கினோம். அங்கு இரு பெரிய பாதங்கள் பாறையில் பொறித்து வைக்கப்பட்டிருப்பதைக் கண்டோம்.

"இதுதான் அண்ணாமலையார் பாதம், கும்பிடுங்க" என்றார் பாண்டு. அங்கும் ஒரு திரிசூலம் இருக்கிறது. கற்பூரத்தைக் கொளுத்தினார் தொப்புளான். பாதங்களைக் கண்களில் ஒற்றிக் கொண்டு, மலைச் சிகரத்தை நோக்கி நடந்தோம்.



ஸ்ரீ மல்லிகார்ஜுன சுவாமி

சுமார் இருபது அடி தூரம் இரும்பு வேலியைப் பிடித்துக் கொண்டு மலைச் சரிவுப் பாதையில் நடந்தோம். இடப்புறம் திரும்பி மூவாயிரம் அடி ஆழமான பள்ளத் தாக்கைப் பார்க்கும்போது வயிற்றை என்னமோ செய்கிறது.

வலப்புறம் திரும்பியதும் இரு பாறைகளுக்கிடையே ஒரு பிளவு இருக்கிறது. அதில் ஒருவர் மட்டும் செல்ல முடியும். அதில் செதுக்கப் பட்டுள்ள சிறு படிக்கட்டுகளில் ஜாக்கிரதையாகக் கால் ஊன்றி மெள்ள மேலே ஏறிப் போய் மலைச் சிகரத்தை அடைகிறோம். கோயில் கோபுரம் தரிசனமாகிறது. கைலாயத்திற்கே வந்து விட்ட உணர்வைப் பெறுகிறோம்.

அந்தச் சிறிய பாறையில் ஒரு சிறிய கோயிலைக் கட்டியிருக்கிறார்கள். உள்ளே சென்றால், குகையைப் போல் ஒரே கும்மிருட்டு. விளக்கேற்றி, மிகவும் சிரமப்பட்டு அங்குள்ள தெய்வச் சிலைகளைப் பார்க்க வேண்டி யிருக்கிறது.

முதலில் விநாயகரும், வள்ளி தெய்வானை சமேத ஆறுமுகனும் இருக்கிறார்கள். அவர்களுக்குப் பின்புறம், உள்ளறையில் வீரபத்திரரும் துர்க்கையும் எழுந்தருளி யிருக்கிறார்கள்.

ஸ்ரீ பிரமராம்பிகை



மகரிஷியின் உருவச்சிலை



அடுத்த மண்டபத்தில் ஸ்ரீ மல்லிகார்ஜுன சுவாமியின் கருவறை இருக்கிறது. அதற்கடுத்த மண்டபத்தில் ஸ்ரீ பிரமராம்பிகையின் சந்நிதியிருக்கிறது. வெளியே இருபுறமும் துவாரபாலிகைகள் காவல் புரிகிறார்கள். வெளித் தாழ்வாரத்தில் தர்ம பத்தினியோடு கூடிய மகரிஷி ஒருவரின் உருவச்சிலை இருக்கிறது. எல்லாமே அற்புதமான சிற்ப எழிலோடு தெய்வக் களை மிளிரும் தோற்றங்கள்.

எல்லாவற்றையும் மிகப் பிரயாசைப்பட்டுப் படம் பிடித்துக் கொண்டு வந்த, சுந்தரம், ''அடுத்தபடி என்ன?'' என்று கேட்டார்.

''முதலில் சாப்பிடுவோம். பிறகு அதைப் பற்றி யோசிக்கலாம்'' என்றார் பாப்ஜி, மூட்டையைப் பிரித்துக் கொண்டே.



பர்வத மலைப் படங்களை பூண்டி சாமியார் பார்க்கிறார்

எல்லோரும் சாப்பாட்டை முடித்துக் கொண்டு சற்று உலாவச் சென்றோம்.

மலையுச்சியில் காற்று பயங்கரமாக வீசியது. பாறையோரமாக நடப்பதற்குக் கூட பயமா யிருந்தது. 'காற்று நம்மைக் கீழே தள்ளி விடுமோ' என்ற ஓர் அச்சத்துடனேயே அங்கு நின்று சுற்று முற்றும் திரும்பிப் பார்த்தோம். உச்சியிலிருந்து பார்க்கும் போது நீரற்று வறண்டிருக்கும் செய்யாறு, பாம்பு போல் வளைந்து செல்வது தெரிகிறது. நாங்கள் முதல் நாள் நேரில் சென்று தரிசித்த சப்த கரைகண்ட தலங்களை, பர்வத மலையின் உச்சியிலிருந்து மீண்டும் ஒரு முறை கண்டு ஆனந்தித்தோம். ஓரிரு கோயில்கள் மட்டும் கண்களுக்கு புலப்பட்டன.

''அதோ, ஒரு தோப்பு தெரியுது பார், அதுதான் பூண்டி. அதோ, ஒரு இலுப்பை மரம் தெரியுது பார், அதுக்குப் பக்கத்திலேதான் மாம்பாக்கம் கோயில் இருக்குது. அதோ, இரண்டு இலுப்பை மரம் தெரியுது பார்,

30

அதுக்குக் கொஞ்சம் தள்ளி யிருக்குது பார், அதான் கடலாடி கோயில்'' என்று ஒவ்வோர் இடத்தையும் தர்மலிங்கம் அடையாளம் காட்ட, நாங்கள் பார்த்துப் பார்த்துப் பரவசமடைந்தோம்.

''அதோ பார்த்திங்களா? அதான் போளூர் மலே. இந்தப் பக்கம், அந்தாண்டே தொலேவிலே தெரியுதே, அதுதான் திருவண்ணுமலே'' என்று ஒவ்வொரு மலேயாகச் சுட்டிக் காட்டினுர் பாண்டு.

உச்சியிலிருந்து தரிசிக்கும் போது சூரிய ஒளியில் மின்னும் அருணுசல லிங்கம் உள்ளத்தில் ஞான தீபமாக மிளிர்கிறது.

''இந்தப் பக்கம் வாங்க'' என்று எங்களே மேற்கு புறம் அழைத்துக் கொண்டு போனுர் தர்மலிங்கம். அங்கிருந்து பல கிராமங்களேக் கண்டோம். பல மலேத் தொடர்ச்சிகளேப் பார்த்தோம்.

சுற்றிலும் கொலு பொம்மைகளேப் போல் இயற்கை அன்னே வடித்துத் தந்துள்ள வனப்புமிகு வண்ணக் காட்சிகளின் எல்லேயற்ற எழிலேக் கண்டு களித்துக் கொண்டிருந்தால் அலுப்பும் தோன்றுவதில்லே, பொழுது போவதும் தெரிவதில்லே.

மலேயுச்சியில் கோயிலுக்கு மேற்குப்புறத்தில், ஒரு கட்டடம் இருக்கிறது. அது என்னவென்று கேட்டேன்.

''அது ஒரு சாமியாரின் சமாதி'' என்ருர் தொப்புளான்.

''யார்ரா இவன்! தெரிஞ்சா சொல்லணும். இல்லாதபோஞ வாயை மூடிக்கிணு இருக்கணும். இது சமாதி இல்லீங்க?'' என்று தர்மலிங்கம், தொப்புளான் கூறியதை மறுத்துக் கூறினுர்.

''பின்னே இது என்ன கட்டடம்?'' என்று மீண்டும் கேட்டேன் நான்.

''இங்கே ஒரு சாமியார் வந்தாருங்க. அவர் யோகத்திலே இருக்கப் போறதா சொல்லி, இங்கே உட்கார்ந்தாரு. தன்னேச் சுத்தி சமாதி மாதிரி கட்டச் சொன்னுர். உள்ளே கொஞ்ச நாள் இருந்துட்டுக் கீழே இறங்கிப் போயிட்டார்'' என்று தலேயும் இல்லாமல் வாலும் இல்லாமல் தர்மலிங்கம் ஒரு செய்தியைக் கூறினுர்.

அதன் சுவரில் ஏதோ எழுத்துக்கள் தெரிந்தன. கூர்ந்து கவனித்தேன்.

*1957—கைலாயவர்க்கம்.*

*ராமகிரி யோகீஸ்வரர் சமாதி நிலேயம்.*

*விட்டோபா பரம்பரை.*

*ஹரித்துவாரம்.*

*ஓம்.*

*கணேசகிரி.*

என்று எழுதப்பட்டிருந்தது. இதைப் பற்றிய விளக்கத்தைக் கீழே போய் யாரிடமாவது கேட்டுத் தெரிந்து கொள்ள வேண்டும் என்று நினேத்துக் கொண்டு அங்கிருந்து நகர்ந்தேன்.

கோயிலுக்கு வடபுறத்தில் ஒரு சிறு சுனை இருக்கிறது. அந்நீர் கற்கண்டாக இனிக்கிறது.

எல்லோரும் மீண்டும் மண்டபத்திற்கு வந்தோம். ஒருவருக்கும் பேசுவதற்குக் கூட சக்தி இல்லை. காலை நீட்டிப் படுத்து விட்டோம்.

அரை மணிக்கெல்லாம், நிசப்தமா யிருந்த அந்த இடத்தில் திடீரென்று பேச்சுக் குரல் கேட்டது. ஜன நடமாட்டம் அதிகமாயிற்று. குழந்தைகளின் அழுகுரல் கேட்டது. லேசாகக் கண்களைத் திறந்து பார்த்தேன்.

ஆண்களும் பெண்களும் குழந்தைகளுமாகப் பத்துப் பதினைந்து பேர் கோயிலுக்கு வந்திருந்தார்கள். அவர்களெல்லாரும் மூலக்காடு என்ற கிராமத்திலிருந்து பொங்கல் படைத்துச் சாமி கும்பிட மலையேறி வந்திருந்தவர்கள். இங்கேயே சமைத்துச் சாப்பிடப் போகிறார்கள். இரவு மலையில் தங்கி விட்டு, காலையில்தான் திரும்பப் போகிறார்கள். நாங்கள் ஏறி வந்த வழியாக அவர்கள் வரவில்லை. மாதிமங்கலம் வழியாக ஏறி வந்திருக்கிறார்கள். பாப்ஜி ஒரு நொடியில் சேகரித்துக் கொண்டு வந்து சுந்தரத்திடம் சொல்லிக் கொண்டிருந்த இந்தச் செய்திகள் அரைத் தூக்கத்திலிருந்த என் காதில் விழுந்தன.

''சுந்தரம், நீ சாப்பாட்டிற்குக் கவலைப்பட வேண்டாம். அவங்க அரிசி, பருப்பு, காய்கறி, தயிர் விறகு எல்லாம் கொண்டு வந்திருக்காங்க... வெத்தலை, புகையிலை 'ஸ்டாக்'கூட இருக்கு'' என்று பாப்ஜி, சுந்தரத்திற்குக் கீழ் ஸ்தாயிலில் தைரியமளித்துக் கொண்டிருந்தார்.

''ராத்திரி நமக்கு நல்ல துணையாச்சு'' என்றார் சுந்தரம்.

''ஆனா, இதுலே ஒரு கஷ்டம் இருக்கு. இத்தனை ஜன சந்தடி யிருந்தால், சித்தர்கள் நடமாட்டம் இருக்காது. நாம் வந்த காரியம் கெட்டு விடும்'' என்றார் பாப்ஜி. எனக்குக் கண்களைச் செருகியது. சுற்றிலும் 'கசமுச'வென்று பேச்சு சத்தம் கேட்டதே யொழிய ஒன்றுமே தெளிவாகக் காதில் விழவில்லை. மெள்ள மெள்ள உறக்கக்கேணியில் மூழ்கிக் கொண்டிருந்தேன்.

கண் விழித்தபோது மதியம் மணி இரண்டரை யிருக்கும். தூக்கம் வராமல் புரண்டுக் கொண்டிருந்த பாப்ஜியையும் சுந்தரத்தையும் எழுப்பி உட்கார வைத்தேன். எங்களுக்கு திடீரென்று ஒரு கவலை வந்துவிட்டது.

'இந்த இடத்தில் இரவுவரை எப்படிப் பொழுதைக் கழிப்பது?'

''அதற்காகத்தான் ஆண்டவனா பார்த்து இங்கே நிறையப் பேரை அனுப்பி வச்சிருக்கார். வா, அவங்ககிட்டே போய் பேச்சுக் கொடுக்கலாம்'' என்று பாப்ஜி 'ஐடியா' கொடுக்க, நாங்கள் மண்டபத்தை விட்டு வெளியே வந்தோம். அங்கு தர்மலிங்கம், பாண்டு, தொப்புளான், தாத்தா எல்லோரும் சிறு 'மகாநாடு' கூட்டி பேசிக் கொண்டிருந்தார்கள். எங்களைப் பார்த்ததும் பேச்சை நிறுத்திவிட்டு, ''என்ன, நல்லா தூங்கினீங்களா? பாவம், ரொம்ப களைச்சுட்டீங்க'' என்றார் தர்மலிங்கம்.

''களைப்பெல்லாம் பறந்து போச்சு'' என்றேன் நான்.

''கால்லே அடிபட்டதே, அது எப்படி யிருக்குங்க'' என்று கேட்டார் பாண்டு.

''வலியே தெரியலே'' என்றேன்.

''நீங்க வேணு பாருங்க. நாளேக்கே காயம் ஆறிடும். இந்த மலேயிலே இருக்கிற மூலிகைகங்களோட விசேஷங்க அது. இந்தக் காத்துப் பட்டாலே எந்த வியாதியும் குணமாயிடும். எந்த ரணமும் ஆறிடும்...'' என்று தர்மலிங்கம் கூறி விட்டு, ''ஆமா, நீங்க ராத்திரி இங்கேயே தங்கப் போறீங்களா?'' என்று சட்டென்று ஒரு கேள்விச் குண்டைத் தூக்கிப் போட்டார். எனக்குத் தூக்கிவாரிப் போட்டது.

''ஏன் அப்படிக் கேட்கிறீங்க? ராத்திரி தங்கிப் பார்க்கணும்னுதான் முக்கியமா நாங்க வந்திருக்கோம். நீங்க திரும்பிடணும்னு நினேக்கிறீங்களா?'' என்று கேட்டேன் நான்.

''அதெல்லாம் இல்லீங்க. சும்மா கேட்டேன். நீங்க இருக்கணும்னு பிரியப்பட்டா நாங்களும் இருக்கோம். உங்களுக்காகத்தானே ஐயர் எங்களே அனுப்பிச்சிருக்காரு...''

''பின்னே ஏன் அப்படி கேட்டீங்க? கையிலே நீங்க சாப்பாடு கொண்டு வரவில்லேயா?''

''சாப்பாட்டுக்கு என்னங்க! இதோ நம்ம மனுஷாளு வந்திருக்காங்க. இவங்க நமக்கு இம்மா சோறு போடமாட்டாங்களா? நீங்க தங்கணும்னு தங்குங்க, அதைப்பத்தி என்ன...''

தர்மலிங்கம் பட்டதும் படாததுமாகப் பேசியது எங்களுக்கு ஆச்சரியமா யிருந்தது. என்ன காரணத்திற்காக அவர் பின்வாங்குகிருர் என்றே என்னுல் புரிந்து கொள்ள முடியவில்லே.

''நீங்களெல்லாம் போறதுன்னு போங்க, நாங்க ராத்திரி இருந்து விட்டு நாளேக்கு வருரும்'' என்றேன் நான், பெரிய வீரனேப் போல்.

''அவரு அதுக்காகச் சொல்லலீங்க. உங்களே உத்தேசித்துதான் சொல்ருரு... ராத்திரி தங்கறதுன்னு அதுக்கெல்லாம் ஏற்பாடா வந்திருக்கணும்'' என்று பாண்டு குறுக்கிட்டார்.

''இப்போ ஏற்பாட்டுக்கு என்ன குறைச்சல்?'' என்று கேட்டேன் நான்.

''கையில் இருக்கிறதை ராத்திரி சாப்பிட்டுடுறீங்க... காலேயில் என்ன செய்வீங்க...?''

''காலேயிலேதான் கீழே இறங்கிடப் போருமே.''

இதைக் கேட்டு பாண்டு சிரித்தார்.

''நாலு மணி நேரம் வெறும் வயத்திலே நடக்க முடியுங்களா? போகப் போக வெயில் வேறே கொளுத்தும். ஏர்றது சொலபங்க...... இறங்கறபோதுதான் தள்ளாடிப் போயிடும்... வயத்திலேயும் ஒண்ணும் இல்லாட்டி...''

காலையில் ஏறி வந்த அனுபவம் நினைவில் பசுமையாக இருந்ததால், அப்படியொரு பயங்கர நிலைமையைக் கற்பனை செய்து பார்த்த போது வயிற்றைக் கலக்கியது.

''அது மட்டுமில்லீங்க. நீங்க விடியற்காலையிலேயே இறங்க முடியாது. மேலே ஒரே மேகக் கூட்டமாயிருக்கும். வழியே தெரியாது. சறுக்குப்பாறையெல்லாம் ரொம்ப வழுக்கும். கடப்பாரையெல்லாம் பனியில் ஈரமாயிருக்கும். கை வெச்சால் வழுக்கும்.''

உடனே கை வழுக்கி, கீழே இடறி விழுந்து, மலையில் உருண்டு போவது போல் எனக்கு ஒரு பிரமை தட்டியது!

''நீங்க இறங்கணும்னு சூரியன் வந்தப்புறம்தான் புறப்பட முடியும். ஏழு எட்டு மணிக்கு இறங்க ஆரம்பிச்சீங்கன்னு கீழே போறபோது பகல் பன்னிரண்டு, ஒரு மணி ஆயிடும். அந்த வெயிலைத் தாங்க முடியுமா? வயத்திலே ஒண்ணும் இருக்காது. அதையும் நினைவிலே வச்சிக்குங்க...... நான் சொல்றதைச் சொல்லிடணும் பாருங்க... அப்புறம் உங்க இஷ்டம். நீங்க தங்கிட்டு வரணும்னு வாங்க'' என்றார் பாண்டு.



கடப்பாரையைப் பிடித்துக் கொண்டு . . .

''இப்போ நீங்க என்னதான் செய்யச் சொல்றீங்க?'' என்று கேட்டேன் நான்.

''ஒண்ணுலே ரெண்டு தீர்மானம் பண்ணிக்குங்கோ. கிளம்பறதுன்னு, உடனே கிளம்பணும். இப்போ மணி மூணு ஆவுது. ஏழு மணிக்குள்ளே கீழே போயிடலாம். இன்னும் லேட் பண்ணினு, ராத்திரிலே மலை இறங்க முடியாது. ரொம்ப ஆபத்து... சொல்றதைச் சொல்லிடணும் பாருங்க.''

நான் பாப்ஜியைப் பார்த்தேன்.

''என்ன சொல்றே?'' என்று கேட்டார் அவர்.

''மூட்டையைக் கட்ட வேண்டியதுதான்'' என்றேன் நான்.

பாப்ஜி, பழனியைப் பார்த்தார்.

''எல்லாம் ரெடி, புறப்பட வேண்டியதுதான்'' என்ருர் பழநி, சிரித்துக் கொண்டே. நான் பாண்டுவுடன் பேசிக் கொண்டிருந்த போதே என் முடிவை ஊகித்து விட்ட பாப்ஜி, பழநியிடம் கூறிப் புறப்படுவதற்கான ஏற்பாடுகளைத் தயார் செய்து வைத்திருந்தார்!

வெற்றிகரமான வாபஸ்! சற்றும் எதிர்பாராத வகையில் எங்கள் திட்டத்தில் திடீரென்று ஒரு திருப்பம் ஏற்பட்டு மலையை விட்டு நாங்கள் இறங்கத் தொடங்கினோம்.

வேகமாகவும் அவசரமாகவும் நான் இறங்கியதைக் கண்டு அத்தனை பேரும் அதிசயித்துப் போனூர்கள். தண்டவாளத்தில் தவழ்ந்த போதும், கடப்பாறையிருந்த வழுக்குப் பாறையில் இறங்கிய போதும், பலமுறை மலையேறி இறங்கிப் பழக்கப்பட்டவன் போல் நான் அநாயாசமாகச் சென்றதைப் பார்த்த என் தோழர்கள், எனக்குப் பேய் பிசாசு ஏதாவது பிடித்து விட்டதோ என்று கூட சந்தேகப்பட்டார்களாம்! ஏறிய போது எல்லாருக்கும் பின்னுல் வந்த நான், இறங்கும்போது எல்லாருக்கும் வழி காட்டிக் கொண்டு முன்னுல் சென்ற காட்சி எனக்கே ஆச்சரியத்தைத் தந்தது.

எல்லாம் ஒரு மணி நேரம்தான். யார் கண்ணோ பட்டு விட்டது. என் வேகம் மெள்ள மெள்ளக் குறையத் தொடங்கியது. எனக்குப் பின்னுல் வந்தவர்களெல்லாம் ஒவ்வொருவராக முன்னேறி, என்னைக் கடந்து, முன்னே செல்வதைப் பரிதாபமாகப் பார்த்துக் கொண்டிருந்தேன் நான். ''அவசரப்படாதிங்க'' என்று அவர்கள் என்னைப் பார்த்துச் சொல்லி விட்டுச் சென்றபோது என்னைக் கேலி செய்ததாகவே தோன்றியது. எனக்கு மூச்சுத் திணறுவதையும் என் கால்கள் தள்ளாடுவதையும் தர்மலிங்கம் கவனித்து விட்டார். கைத் தடியை மீண்டும் என்னிடம் தந்தார். அதை ஊன்றிக் கொண்டு நடக்கத் தொடங்கினேன். ஓர் அடி எடுத்து வைப்பது கூட பெரும்பாடாகி விட்டது. நேரம் ஆக ஆக, நான் நடப்பதாக நினைத்தேனே தவிர, இருந்த இடத்தைவிட்டு நகரவே யில்லை! எல்லோரும் என்னை விட்டுவிட்டுத் தொலைவில் போய்க் கொண்டிருந்தார்கள். எனக்கு ஆண்டவனும் தர்மலிங்கமும்தான் துணை இருந்தார்கள். என் இடக் கையை தர்மலிங்கம் பற்றிக் கொள்ள, வலக் கையிலிருக்கும் கைத்தடியின் ஆதரவோடு நான் ஆமை வேகத்தில் முன்னேறிக் கொண்டிருந்தேன்.

என் நிலையைக் கண்டு பரிதாபப்பட்டு ஒரு பாறையில் காத்திருந்த சுந்தரமும் பாப்ஜியும் எங்களுடன் சேர்ந்து கொண்டார்கள். நாங்கள் மெள்ள நடந்து கொண்டிருந்தோம். கண்ணுக்கெட்டிய தொலைவுவரை யாரையும் காணவில்லை.

''அவங்களெல்லாம் காணுேமே, எங்கே?'' என்று கேட்டேன் நான்.

''டேய், தொப்புளான்......பாண்டு'' என்று கூச்சலிட்டார் தர்மலிங்கம்.

''எங்கே யிருக்கிங்க?'' என்று குரல் கொடுத்த தொப்புளான், ஒரு சரிவில் ஏறி முகத்தைக் காட்டினூர்.

''என்னய்யா அந்த வழியிலே போயிட்டீங்க? அது மாதிமங்கலம் வழியாச்சே......'' என்று சிரித்துக் கொண்டே கேட்டார் தொப்புளான். எனக்கு என்ன சொல்வதென்றே புரியவில்லை. சுந்தரத்திற்கு ஆத்திரம் பற்றிக் கொண்டு வந்தது. அம் மாதிரி கோபம் வரும்போது அவர் மூக்கு கோவைப் பழமாகச் சிவந்து விடும். செக்கச் சிவந்த மூக்கோடு தர்மலிங் கத்தை சபித்துத் தீர்த்து விட்டார் நண்பர். ''வழி தெரியாமெ ஏன் பெரிய வழிகாட்டி மாதிரி வரணும்?'' என்று கடிந்து கொண்டார். ''எனக்கு வழி தெரியும் சார். நீங்க வழி தெரிஞ்ச மாதிரி முன்னலே போறீங்களேன்னு உங்க பின்னலேயே வந்தேன்'' என்றார் தர்மலிங்கம் நிதானமாக. இந்த விளக்கத்தைக் கேட்டு சுந்தரத்தின் கோபம் மேலும் அதிகமாயிற்று. அவர் மூக்கு அப்போது ரத்தச் சிவப்பாயிற்று.

இருந்த இடத்திலிருந்து, நாங்கள் தவற விட்ட வழிக்குச் செல்வ தென்றல் மீண்டும் அரை மைல் மலையேறிப் போயாக வேண்டும். என்னல் அது முடியவே முடியாது. எனக்கு அழுகையே வந்து விட்டது.

''சார், நீ ஏன் அதைரியப்படறே? நான் உன்னை தோள்ளே தூக்கிக் கிட்டுப் போயிடறேன். நீ ஏறிக் குந்து'' என்றார் தர்மலிங்கம்.

அதற்குள் தொப்புளான், ''நீங்க மறுபடியும் ஏறிப் போக வேணும். இப்படியே குறுக்கே நடந்து வந்துடுங்க'' என்று யோசனை கூறவே, தர்ம லிங்கம் எங்களை மிக ஆபத்தான குறுக்கு வழியில் அழைத்துச் சென்றார். புதர்களும் உலர்ந்த சருகுகளும் மண்டிக்கிடந்த அந்தப் பாதையில் எங்கே பள்ளம் இருக்கிறது, எங்கே பாறை இருக்கிறது என்று கண்டு பிடித்து, காலை மெள்ள ஊன்றி, நடுங்கிக் கொண்டே எப்படியோ நேரான பாதையில் போய்ச் சேர்ந்து விட்டோம்.

அங்கிருந்து பாண்டு எங்களை வேறு வழியாக அழைத்துச் சென்றார். காலையில் வந்தது சுற்று வழி யென்றும் இப்போது செல்லும் பாதை நடப்பதற்கு ரொம்ப சௌகரியமாக இருக்கும் என்றும் அவர் கூறவே, தர்மலிங்கத்தை விட்டு விட்டுப் பாண்டுவை எங்கள் தலைவராக ஏற்றுக் கொண்டோம்.

''அதோ பார்த்தீங்களா, தரைக் காடு தெரியுது......அதுதான் 'ஈக்லிபிட்டஸ்' தோட்டம்......அதைத் தாண்டி ஏரிக் கரை, அப்புறம் ரோடு, அப்புறம் வீடு'' என்று அடிக்கொரு தரம் சொல்லிக் கொண்டு, களைத்து உட்காரும்போதெல்லாம் எங்களைக் கை தூக்கி விட்டு, துவண்டு போகும்போதெல்லாம் தைரியமளித்து, ஏழு மணிக்குள் கீழே அழைத்துக் கொண்டு வந்து சேர்ந்து விட்டார் அவர்.

பர்வத மலையேறி விட்டு வந்ததிலிருந்து அங்கு இரவு தங்க முடியா மல் போய் விட்டதைக் குறித்து எனக்குச் சற்று வருத்தமாகத்தான் இருந் தது. ஏதோ ஒரு சக்தி என்னை அங்கே தங்க விடாமல் அழைத்து வந்து விட்டதை உணர்ந்தேன். 'ஆக்கமும் ஊக்கமும் இருந்தால் எல்லா காட்சி களும் காணலாம்' என்று மலையேறுவதற்கு முன் பூண்டி சாமியார் என்னி டம் கூறினர். எனக்கிருந்த ஆக்கமும் ஊக்கமும் போதவில்லையோ! பூண்டி

சாமியாரிடம் அதைப்பற்றிக் கூறினல் என் ஏக்கம் ஓரளவு தணியலாம் என்ற எண்ணத்துடன் ஒரு வாரம் கழித்து அவரிடம் சென்றேன். மலேயில் கண்ட காட்சிகளேக் கூறினேன். அங்கு எடுத்த படங்களேக் காட்டினேன்.

'சர்தான்' 'சர்தான்' என்றபடியே எல்லாவற்றையும் கவனமாகக் கேட்டார், பார்த்தார்.

''இரவு மலே மேலே தங்கலாம் என்ற எண்ணத்தில்தான் போனேன். ஆனல், தங்காமல் திரும்பி வந்து விட்டேன்.'பல அற்புதக் காட்சிகளேக் காணலாம் என்று கனவு கண்டேன். ஏனே, நான் நினேத்தபடி நடைபெற வில்லே. இன்னெரு முறை எனக்கு அந்த பாக்கியம் கிடைக்குமா?'' என்று அவரிடம் கேட்டேன்.

அதைக் கேட்டு அவர் புன்னகை,புரிந்தார்.

அந்தப் புன்னகையின் பொருள் அவருக்குத்தான் தெரியும்!

பர்வத மலே மீது ஏறி ஸ்ரீ மல்லிகார்ஜுன சுவாமியைத் தரிசித்து விட்டு வந்ததிலிருந்து என்னேயும் அறியாமல் அம்மலேயின் மீது நான் ஒரு பாசத்தை வளர்த்துக் கொண்டு விட்டேன். அம்மலேயைப் பற்றிய புராண, சரித்திர மகிமைகளே யெல்லாம் அறிந்து கொள்ள வேண்டும் எனத் துடித்தேன். என் எண்ணத்தைப் புரிந்து கொண்ட நாகேச்வர ஐயர், ''இதோ பாருங்கள், நீங்கள் வழியில் போகிறவர்களிடமெல்லாம் விசாரித்துப் பயனில்லே. மாதிமங்கலத்தில் வயதானவர்கள் ஒரிருவர் இருக்கின்றனர். அவர்களேக் கேட்டுப் பார்க்கலாம்'' என்று கூறி, எங்களேக் கடலாடியை அடுத்த தென் மகாதேவமங்கலம் என்ற மாதிமங்கலத்திற்கு அழைத்துச் சென்ருர்.

நாகேச்வர ஐயர் யாரையோ போய்ப் பார்க்க, அவர் வேருெருவருக்கு எங்களே அறிமுகப்படுத்த, அந்த நபர், எண்பது வயதைக் கடந்த ஒரு வயோதிகரை அழைத்து வந்தார். அவர் ஓர் ஓய்வு பெற்ற ஆசிரியர். பெயர் முத்துக்குமாரசாமிப் பிள்ளே. அவர் பர்வத மலேயைப் பற்றிய திரிசூல புராணத்திலிருந்து சில குறிப்புகளேக் கூறியதோடு தம்முடைய சொந்த அனுபவங்களேயும் விவரித்தார்.

பர்வத மலேக்கு முன்பாகம் மாதிமங்கலத்திலும், பின்பாகம் கடலாடியிலும் இருக்கிறது. ஏழு சடைப் பிரிவுகள் கொண்ட அந்தப் பிரும்மாண்ட மலே சுமார் 5500 ஏக்கர் நிலப் பரப்பில் பரந்திருக்கிறது.

பர்வத மலேக்கு திரிசூலம், தென் மல்லிகார்ஜுனம், ஸ்ரீசைலம், பருப்பதம், சித்தசைலம், தென் கைலாயம், நவிரம், பல்குன்ற கோட்டம் என்ற பல பெயர்கள் உண்டு. ஆந்திரத்திலுள்ள ஸ்ரீசைலத்தில் இருப்பது போலவே இங்கு சுவாமி, மல்லிகார்ஜுனர் என்ற திருநாமத்துடனும், அம்பிகை, பிரமராம்பிகை என்ற பெயருடனும் திகழ்கிருர்கள். அங்கு உள்ளதைப் போல இங்கும் லிங்காயத் வீர சைவரே பூஜை செய்கிருர்.

இந்தப் பகுதியை சங்க காலத்தைச் சேர்ந்த நன்னன் சேய் நன்னன் என்ற மன்னர் ஆண்டதாகவும், அவர் கட்டிய கோட்டையின் இடிந்த சின்னங்கள்தான் மலேயின் மீது காணப்படுவதாகவும் கூறினர்.

பர்வத மலையில் நூற்றெட்டு குகைகள் இருப்பதாகவும், அவற்றில் பல தேவ சித்தர்கள் வாழ்ந்து வருவதாகவும் கூறிய பிள்ளை, ''நீங்க மேலே போனீங்களே, சிங்கக் கிணறு பார்த்திங்களா'' என்று கேட்டார்.

''இல்லே. ஒரு பெரிய சுனையைத்தான் பார்த்தோம். நீர் ஜில்லென்று ஐஸ் மாதிரி இருந்தது. அந்த நீரைக் குடித்தோம். அதில் குளித்தோம்'' என்றேன் நான்.

''அதுக்குத்தான் சிங்கக் கிணறு என்று பெயர். அதிலே என்ன பார்த்தீங்க?''

''தண்ணீரைப் பார்த்தோம்.''

''அதைக் கேட்கலே. வேறே என்ன பார்த்தீங்க?''

''உங்க கிட்டே விஷயங்களைக் கேட்டுக்கிட்டுப் போகலாம்னு இங்கே வந்தா, எங்களையே நீங்க கேள்வி கேட்கிறீங்களே!......தயவு செய்து தங்களுக்குத் தெரிந்ததை யெல்லாம் சொல்லுங்களேன்'' என்று பொறுமை யிழந்து மன்றாடினேன் நான்.

''தப்பா நினைச்சுக்காதீங்க. அந்த இடத்தை நீங்க நல்லாக் கவனிச்சுப் பார்த்திருந்தா, நான் சொல்றதெல்லாம் உங்களுக்கு நல்லாப் புரியும். அங்கே குனிஞ்சு பார்த்தா, வளைவா ஒரு குகை மாதிரி உள்ளே போறது தெரியும். அதுக்குள்ளே போனால், தாமரைக் குளம், வாழைத் தோட்டம், பலாத் தோப்பு, நந்தவனம் எல்லாம் இருக்கு. அங்கேதான் சித்த புருஷருங்க பல ஆயிரம் வருடங்களாக வாசம் செய்து வராங்க. அவங்கதான் ராத்திரிலே வந்து சுவாமிக்குப் பூஜை செய்துட்டுப் போறாங்க. ஆனால், அவங்க நம்ப கண்ணுக்குத் தெரிய மாட்டாங்க'' என்றார் முத்துக் குமாரசாமிப் பிள்ளை.

**கார்வேட் நகர் திருக்குளக்கரையில் ஸ்ரீ காஞ்சி ஆச்சாரிய சுவாமிகள் ஆச்ரமம்**



''அந்த மலையில் அண்ணாமலையார் பாதங்கள் இருக்கிறதே, அதைப் பற்றி ஏதாவது புராண வரலாறு உண்டா?'' என்று கேட்டேன் நான்.

''அண்ணாமலையார் ஆகாய சஞ்சாரத்தின்போது ஒரு சமயம் இந்த மலையில் தங்கி இளைப்பாறினாராம். அதன் அடையாளமாகத்தான் அந்தப் பாதங்களைச் செதுக்கி வைத்திருப்பதாகச் சொல்லுவாங்க'' என்றார் பிள்ளை.

''மேலே கடப்பாரைக் கம்பிகளைப் புதைத்து வைத்திருக்காங்களே, அதுக்கு முன்னே அந்த மலை மேலே எப்படி ஏறிப் போயிருப்பாங்க?''

''கடப்பாரைங்க வச்சதெல்லாம் ஐம்பது அறுபது வருஷங்களுக் குள்ளேதான். அறுபது வருஷத்துக்கு முன்னே ஒரு பெரிய இடி விழுந்து மலைச் சிகரத்திலே பாறை பொளந்து கீழே விழுந்துடுச்சு. அதுக்கப்பறம் மேலே ஏர்றது ரொம்பக் கஷ்டமாய்ப் போய் கடப்பாரையும் தண்டவாள மும் வெச்சாங்க'' என்றார் அந்த முதியவர்.

''அந்த மலையில் பச்சிலை மூலிகைகள் இருப்பதாகச் சொல்றாங்களே, உங்களுக்கு அதைப்பற்றி ஏதாவது தெரியுமா?'' என்று அடுத்தபடி கேட்டேன் நான்.

''ஆமாம். இப்போ கூட சாதுக்கள் வந்து இந்தப் பச்சிலைகளைப் பறித் துக் கொண்டு போகிறார்கள். பல ஜில்லாக்களிலிருந்து நாட்டு வைத்தியர் கள் தேவ மூலிகைகளைத் தேடி இங்கே வருகிறார்கள். இங்கே மகாவில்வம் என்ற அபூர்வ மரம் இருக்கிறது. அதில் ஐந்து, ஏழு, ஒன்பது தளங்கள் இருக்கும். இந்த மலையிலே ஒரு செடி இருக்கிறது. அதன் இலையை மென்று தின்றால் மாங்காய் மாதிரி வாசனை வரும். அன்று முழுவதும் பசியோ தாகமோ இருக்காது. இதை நான் சாப்பிட்டிருக்கிறேன். சொந்த அனுப வத்தில்தான் சொல்கிறேன்'' என்றார் அவர்.

நான் சென்னைக்குத் திரும்பிய பிறகு பர்வதமலைப் பயண அனுபவங்களை என் நண்பர்களிடம் உணர்ச்சிப் பூரிப்புடன் பகிர்ந்து கொண்டேன். எல்லோரும் நான் இரவில் கோயிலில் தங்கினேனா, அங்கு சித்தர்களின் அற்புத லீலைகளைக் கண்டேனா என்பதைத் தெரிந்து கொள்வதில் பெரும் ஆர்வம் காட்டினார்கள். 'அதெல்லாம் உண்மை யாக இருக்குமா?' என்று சிலர் கேட்டார்கள். என் நம்பிக்கையை உறுதிப்படுத்தும் வகையில் அப்போது புது டில்லியிலிருந்து கே.சுப்பிர மணிய சாஸ்திரி என்பவரிடமிருந்து எனக்கொரு கடிதம் வந்தது:

திருவண்ணாமலை வேத பாடசாலையில் பயின்று கொண்டிருந்த சமயம் ஓர் ஐப்பசி பௌர்ணமி அன்று இவரும் இவரது நண்பரும் ஒரு சாதுவின் துணையுடன் சுவாமி தரிசனத்திற்காக பர்வத மலையில் ஏறி, பகல் மூன்று மணி சுமாருக்குக் கோயிலை அடைந்தார்கள். மேலேயுள்ள சுனையில் கைகால்களைக் கழுவிக் கொண்டு மல்லிகார்ஜுனரை வழிபட்டார்கள். அதற்குள் மேலும் சில பக்தர்களும் கோயிலுக்கு வந்து சேர்ந்தார்கள்.

இரவு பதினேரு மணிக்கு அசதியின் காரணமாக அனைவரும் சற்று கண்ணயர்ந்தார்கள். ஒரு மணி நேரம் கடந்திருக்கும். சுப்பிரமணிய னுக்கு விழிப்பு ஏற்பட்டது. அப்போது சுற்றுப்புற மெங்கும் ஒரு நறு மணம் கமழ்ந்து அவர் நாசியைத் துளைத்தது. தீபம் ஒன்று பிரகாசமாகக் காட்சி தந்தது. நண்பனை எழுப்பி அருகில் சென்று பார்த்தார். சிவலிங்கத் தின் மீது வகைவகையான வண்ண மலர்கள் அர்ச்சிக்கப்பட்டிருந்ததைக் கண்டு மெய்சிலிர்த்துப் போனர்.

இம்மாதிரி அரிய காட்சிகளைக் காணக் கொடுத்து வைத்திருந்த வேறு சிலரும் எனக்குக் கடிதங்கள் எழுதியிருந்தார்கள். அக் கடிதங்களைப் படிக் கும் போதெல்லாம் மலையின் மீது ஓர் இரவு தங்கியிருந்து இம்மாதிரி அனுபவங்களைப் பெற நமக்குக் கொடுத்து வைக்கவில்லையே என்ற வருத்தம் என்னை வாட்டும்.

திரும்பி வந்ததிலிருந்து பர்வத மலைக்கு மீண்டும் ஒரு முறை செல்ல வேண்டும் என்று என்னுள் ஏதோ ஒரு சக்தி உந்திக் கொண்டிருந்தது. அதற்குக் காரணமும் இருந்தது.

பர்வத மலைக்குச் சென்று திரும்பியதும் ஆந்திராவிலுள்ள கார்வேட் நகருக்குச்சென்று காஞ்சிப் பெரியவர்களைத் தரிசித்து என் பயணத்தைப் பற்றியும் என் அனுபவங்களைப் பற்றியும் கூறினேன்.

''பல ஆண்டுகளுக்கு முன்னே பெரியவா, பர்வத மலையேறியதாகக் கேள்விப்பட்டேன். அங்கிருக்கும் மகிமைகளை எனக்கு உணர்த்த வேண்டும். பெரியவாதான் எனக்கு எல்லாவற்றையும் தெரியப்படுத்த வேண்டும். நான் வேறு எங்கு போவேன்?'' என்று நெஞ்சார வேண்டினேன்.

சுவாமிகள் சற்று நேரம் மௌனமாக இருந்தார். பின்னர், ''நான் மலையேறவில்லை. கிரிப் பிரதட்சணம்தான் செய்தேன்'' என்ருர்.

நான் புனிதரின் பாதங்களில் விழுந்து நமஸ்கரித்து விடை பெற்றுக் கொண்டேன். மலையை வலம் வரும்படி மகான் கட்டளையிட்ட தாகவே எனக்குத் தோன்றியது. அன்று முதல் அதற்கான திட்டத்தை

மாதிமங்கலத்திலிருந்து பர்வத மலை தரிசனம்



மனத்தில் உருவாக்கத் தொடங்கினேன். சுவாமிகள் தரிசனத்திற்குப் பிறகுதான் எனக்குச் சிலரிடமிருந்து கடிதங்கள் வந்தன. அவற்றிலிருந்து புதுத் தகவல்களும் விளக்கங்களும் பெற்றேன்.

ஒரு நாள் காஞ்சி கிராமத்தைச் சேர்ந்த வாசகர் பாலசுப்பிரமணியனிடமிருந்து ஒரு கடிதம் வந்தது. அதில் பர்வதமலையைப் பற்றி வேலூர் அரசினர் கலைக் கல்லூரி தமிழ் உதவிப் பேராசிரியர் திரு மு. வை. அரவிந்தன் அவர்களிடமும், அண்ணுமலைப் பல்கலைக் கழகம் தமிழ் ஆராய்ச்சித்துறை விரிவுரையாளர் வித்வான் செ. வேங்கடராமச் செட்டியார் அவர்களிடமும் விசாரித்தால் விவரங்கள் கிடைக்கும் என்று குறிப்பிட்டிருந்தார் அன்பர். நான் உடனே அவர்களுடன் தொடர்பு கொண்டு பர்வத மலையைப்பற்றிய இலக்கியப் பின்னணியை அறிந்து கொண்டேன்.

சங்க கால நூலான பத்துப் பாட்டின் இறுதியில் 'மலைபடுகடாம்' என்ற பழைய பாடலில் இம் மலை, நவிரமலை என்று குறிக்கப்படுகின்றது. 'நவிரம்' என்ருலே மலை என்றுதான் பொருள். பாடல் ஆசிரியர் இம் மலையை 'மூங்கில்கள் செழித்து வளரும் மலை' என்று வர்ணித்துள்ளார். அப் பகுதியை ஆண்ட நன்னன் என்ற மன்னனைப் புகழ்ந்து பாடிய புலவர், 'நவிரமலை மீது சுரக்கும் மழை போல புலவர்கள் கை நிறையும்படி பரிசு கொடுக்கும் மன்னன்' என்று நன்னனைப் புகழ்ந்திருக்கிருர்.

நவிர மலையில் 'காரியுண்டிக் கடவுள்' வீற்றிருப்பதாகப் பத்துப் பாடலில் கூறப்பட்டுள்ளது. 'காரி' என்னும் சொல்லுக்குக் 'கருமை' என்பது பொருளாகும். கருமையானது நீல நிறமுடைய நஞ்சைக் குறிக்கிறது. 'காரி உண்டிக் கடவுள்' என்பது ஆலம் உண்ட நீலகண்டப் பெருமானைக் குறிப்பதாகும். இப் பெயர் பிற்காலத்தில் 'காரி கண்ட ஈச்வரன்' என்றும் பின் 'காரகண்ட ஈச்வரன்' என்றும், 'கரை கண்டேச்வரன்' என்றும் மருவியிருக்கிறது. எனவேதான் பர்வதமலையைச் சுற்றியுள்ள ஊர்களில் சிவத் தலங்கள் இப் பெயரில் விளங்குகின்றன. காரியாறு என்னும் சிற்ருறும், காரியந்தல், காரிமங்கலம் முதலிய ஊர்களும் காரிகண்ட ஈச்வரனுடன் தொடர்புடையவையாகும்.

சங்க காலத்தில் 'செங்கண்மா' என்று வழங்கப் பெற்ற செங்கம் என்ற ஊரைத் தலைநகரமாகக் கொண்டு ஆட்சி புரிந்து வந்த நன்னன், பர்வதமலையில் எழுந்தருளி யிருக்கும் திருநீலகண்டப் பெருமானைக் குலதெய்வமாக வழிபட்டு வந்தான். மலையின் உச்சியில் ஈச்வரனுக்குக் கோயில் கட்டியதோடு, பாதாளச் சுனையையும், தான் தங்கி வழிபடுவதற்காக ஒரு கோட்டையையும் அமைத்திருந்தான். நீலகண்டேச்வரரின் பேரருளால் இம் மன்னன் பேராற்றலும் பெருஞ் செல்வமும் பெற்றுத் தன் பகைவர்களை வென்று, வாகை சூடி, வல்லரசனுகவும் நல்லரசனுகவும் ஆட்சி புரிந்தான்.

சில கோணங்களிலிருந்து பார்க்கும் போது, இம் மலையின் மூன்று சிகரங்கள் சிவபெருமானின் திரிசூலம்போல் தோற்றமளிப்பதைக் கண்ட ஒரு புலவர், இதற்கு திரிசூலகிரி என்று பெயர் சூட்டி, அதன் பெருமைகளைப் பற்றி அப்பெயரில் ஒரு புராணமே பாடி யுள்ளார்.



ஸ்ரீ பாலமுருகனடிமை

சிவராத்திரியன்று இறைவனுக்கு நான்கு கால அபிடேக, ஆராதனைகள் நடக்கும். அக்கம் பக்கத்திலுள்ள கிராம மக்கள் பஜனை செய்துகொண்டு கூட்டம் கூட்டமாக மலையேறிச் சென்று தரிசனம் செய்வார்கள்.

முற்காலத்தில் இம்மலை மேல் ஏறி, தினமும் பூஜை செய்து வந்தார்கள். பின்பு மாதிமங்கலத்திலிருந்து ஒரு வீர சைவர் திங்கட்கிழமை தோறும் மல்லிகார்ஜுனருக்கு வழிபாடு செய்து, உச்சியில் விளக்கு ஏற்றி வைத்து விட்டு வருவார். தற்போது அண்ணமலையில் நடைபெறுவது போல் கார்த்திகை தீபத்தன்று மட்டும் விளக்கேற்றி வருகிறார்கள். பர்வத மலையில் அண்ணாமலையார் பாதம் பட்டிருக்கிறது; அருணாசல ஜோதியும் பிரகாசிக்கிறது.

ஒரு நாள் 'இந்தியன் ரெவ்யூ' பத்திரிகையின் ஆசிரியர் எம். சி. சுப்பிரமணியம் என்னைத் தொலைபேசியில் அழைத்து, இளமைப் பருவத்தில் பர்வத மலையைச் சுற்றிலுமுள்ள பகுதிகளில் சுற்றித் திரிந்த நினைவுகளெல்லாம் தன் நெஞ்சில் கிளர்ந்து எழுந்த உற்சாகத்தில் உணர்ச்சி மேலிடப் பேசினார்: ''அருணாசல மகிமையில் சற்றும் எதிர்பாராத திருப்பமாக பர்வத மலையின் மகிமையும் இணைந்து கொண்டது இறையருளின் சிறப்பே'' என்று கூறினார். மலைக்கு வடக்குப்புறம் உள்ள கேட்டவரம் பாளையத்திற்குச் சென்று அங்குள்ள முதியவர்களிடம் மேலும் தகவல்கள் சேகரித்து எழுதும்படி ஆலோசனை கூறினார்.

அதற்கு மறு நாள் எழுத்தாளர் ''மகரம்'' எழுதியிருந்த கடிதத்திலும் கேட்டவரம்பாளையத்திற்குச் சென்று பர்வத மலையின் கம்பீரத்தைக் காணும்படி என்னைத் தூண்டியிருந்தார்.

நான் நேசிக்கும் பர்வத மலை மீண்டும் தன்னைக் காண வரும்படி எனக்கு அவசர அழைப்பு விடுத்தது. நேரம் கடத்தாமல் நண்பர்களோடு புறப்பட்டு விட்டேன்.

போளூரைக் கடந்துதான் கேட்டவரம்பாளையத்துக்குச் செல்ல வேண்டும். வேலூரைக் கடந்துதான் போளூருக்குச் செல்ல வேண்டும். இரத்தினகிரியைக் கடந்துதான் வேலூருக்குச் செல்ல வேண்டும். எனவே, இரத்தினகிரி பாலமுருகன் சந்நிதியில் ஓரிரவு தங்கி விட்டு, மறு நாட் காலை பிரயாணத்தைத் தொடருவதென்று முடிவு செய்தோம்.

கடந்த இரண்டு வருடங்களாக இரத்தினகிரிக்குச் சென்று வரும் நான், பாலமுருகன் ஆலயத்தின் வளர்ச்சியைக் காணும் போதெல்லாம் பாரதத்தின் பண்டைய கலாசாரத்தின் சின்னமாகத் திகழ்ந்து வரும் பக்தி நெறியை எந்தச் சக்தியாலும் அழிக்க முடியாது என்ற நம்பிக்கை என்னுள் வலுத்து வருவதை உணர்கிறேன். கண்ணுக்குப் புலப்படாத தெய்வ அருள், மனிதனின் மிகச் சாதாரண பகுத்தறிவுக்கும் அப்பாற்பட்ட மாபெரும் சக்தி என்பதை சமுதாயத்திற்கு விளக்குவதற்காகவே, மின்வாரியத்தில் எளிய ஊழியராகப் பணியாற்றி வந்த சச்சிதானந் தத்தை அந்த சக்தி ஒரே கணத்தில் பாலமுருகனடிமையாக மாற்றி, பிரமிக்கத் தக்க வகையில் மாற்றங்களைச் செய்து காட்டுகிறதோ என்று நான் அடிக்கடி நினைப்பதுண்டு. பகுத்தறிவு இயக்கத்தில் ஈடுபாடு கொண்டிருந்த ஒருவரையே தெய்வ நெறி தழைக்கச் செய்யும் பணிக்குத் திருத்தொண்டனாக்கிக் கொண்டது ஆண்டவனின் திருவிளையாடலன்றி வேறென்ன? ''அறுபடை வீடுகளில் கோலோச்சும் ஆறுமுகனே, இங்கு ஒரு கட்டி கற்பூரத்திற்கும் வழியின்றி நீ தவிப்பதேன்? உனக்கு உண் மையாகவே சக்தியிருந்தால் கவனிப்பாரற்று, கேட்பாரற்று இப்படி கற்சிலையாக அமர்ந்திருப்பாயா?'' என்று மூன்று ஆண்டுகளுக்கு முன் பகுத்தறிவு வசனம் பேசியவரே, இன்று அம் முருகனுக்கு ஆயிரம் ஆயிர மாகப் பணம் வந்து குவிந்து கொண்டிருப்பதையும், வெள்ளி, தங்க, வைர நகைகளாக வந்து சேர்ந்து கொண்டிருப்பதையும் பார்த்து, ''என்னே உந்தன் சக்தி, என்னே உந்தன் மகிமை'' என்று பிரமித்துப் போய், பக்தி நெறியின் அவசியத்தையும், சமய வாழ்வின் சிறப்பையும் பறைசாற்றிக் கொண்டிருக்கிறார். அறியாமையால் அன்று பகுத்தறிவு வாதம் செய்தவர், இன்று பால முருகனின் அடிமையாகி, அவரது மலரடி களை இரு கரங்களால் பற்றி, கல்நெஞ்சு கரைய, கண்ணீர் விட்டுக் கதறி யழுகிறார். முருகனோ அப்பச்சிளம் குழந்தையைக் கண்டு புன்னகை புரிந்து கொண்டிருக்கிறார்.

இரண்டாண்டுகளுக்கு முன் முதன் முதலில் நான் இரத்தினகிரிக்குச் சென்றபோது அக் கோயில் எப்படியிருந்தது என்று கற்பனை செய்து கூட பார்க்க முடியாத அளவுக்கு அது மாறியிருந்தது. சுற்றிலும் கோட்டையைப்போல் மதிற்சுவர்கள் எழும்பி யிருந்தன. பெரிய கல்யாண மண்டபம் உருவாகியிருக்கிறது. அதில் அழகான வெள்ளி மயில் வாகனம் ஒன்று காட்சி தருகிறது. கிருத்திகையின்போதும் இதர திரு விழாக்களின் போதும் பக்தர் கூட்டம் அளவுக்கு மீறி வருவதால், நெரிச லைத் தவிர்க்க, பழைய படியை ஒட்டினாற்போல் புதுப் படிகள் கட்டப் பட்டிருக்கின்றன. மலை மீது விநாயகர் ஆலயம் எழும்பி, குடமுழுக்கு விழாவும் நடைபெற்றிருக்கிறது. மலையின் அடிவாரத்திலும் ஒரு விநாயகர் கோயில் தோன்றியிருக்கிறது. குன்றின் மீது தண்ணீர்த் தொட்டி ஒன்று கட்டப்பட்டிருக்கிறது. கீழேயுள்ள கிணற்றிலிருந்து அதற்குத் தண்ணீர் ஏறவும் ஏற்பாடுகள் செய்யப்பட்டு விட்டன. லட்ச ரூபாய் திட்டத்தில் ராஜகோபுரத் திருப்பணியும் தொடங்கப்பட்டிருக் கிறது.

வழக்கப்படி அன்றும் பாலமுருகனடிமை தமது எதிர்காலத் திட்டங்களை விவரித்தார். பக்தர்கள் வந்து தங்குவதற்காகக் கீழே விடுதிகள் கட்டப் போவதாகவும் மேலே உள்ள கல்யாண மண்டபத்தை உற்சவ மூர்த்தியின் தரிசன மண்டபமாக்கிவிட்டு, கீழே வேறொரு கல்யாண மண்டபம் கட்ட உத்தேசித்திருப்பதாகவும் கூறினார். பின்னர் கோயிலை அடுத்து, பாறையில் குகைபோல் கட்டப்பட்டு வரும் பாதாள அறைகளுக்கு அழைத்துச் சென்று காட்டினார். தமது ஏகாந்த தியானத்திற்காக இப்படி ஒரு செயற்கை குகை அமைக்கப்படுவதாகவும் தெரிவித்தார்.

கோயிலின் வளர்ச்சியோடு, அப் பகுதியில் சமூக வாழ்வும் செம்மையுற்று வருவதையும் காண முடிந்தது. சிற்றுண்டிச்சாலைகளும் தேங்காய் பழம், மலர் விற்கும் ஐந்தாறு கடைகளும் தோன்றியிருக்கின்றன. அவை மட்டுமல்ல. மூன்று நான்கு ஆண்டுகளாகக் கட்டட வேலைகள் நடைபெற்று வருவதால், அக்கம் பக்கத்தில் உள்ளவர்களுக்குத் தொடர்ந்து வேலை கிடைத்து வருகிறது. கோபுரம் எழும்பும் போது சிற்பிகளின் தொண்டும் தேவைப்படும்.

ஆன்மிக வளர்ச்சிக்காகவும் பக்தி நெறி தழைப்பதற்காகவும் ஆலயங்கள் தோன்றி யிருந்தாலும், அவை பெரும்பாலும் சமூக நலத் திட்டங்களாகவே உருவாகி யிருக்கின்றன. ஓர் ஆலயம் எழும்பும்போது கட்டடக் கலைஞர்களுக்கும் சிற்பிகளுக்கும் வேலை வாய்ப்புக் கிடைக்கிறது. பின்னர், அங்கு வழிபாடுகள் நடைபெறத் தொடங்கியதும் சமுதாயத்தின் பல்வேறு பிரிவினரும் அந்த ஆலயத்தை நம்பிப் பிழைக்கின்றனர். ஆண்டு முழுவதும் நடைபெறும் திருவிழாக்களைக் காணக் கூட்டம் வருகிறது. வியாபாரம் பெருகுகிறது. அந்தக் கிராமமோ, ஊரோ வளர்ச்சியடைகிறது.

அன்று இரவு இரத்தினகிரி சாமியாருடன் வெகு நேரம் 'பேசி'க் கொண்டிருந்தேன். ஆலயத்தின் வளர்ச்சியைப்பற்றிக் கூறிய பிறகு அவர் அருகிலுள்ள கிராமப் பள்ளிச் சிறுவர்களுக்கும் தம்மாலான உதவியைச் செய்து வருவதாகக் கூறினார். பிள்ளைகளுக்குப் பலகை புத்தகங்கள் வாங்கி நன்கொடையாக அளித்து வருவதோடு அருகிலுள்ள பள்ளியில் வகுப்பறை யொன்று கட்டுவதற்கும் ஒரு பெருந் தொகை ஒதுக்கியுள்ளார். விரைவிலேயே கிராம மக்களின் குடிநீருக்காகவும் மருத்துவ வசதிக்காகவும் அவர் தம்மாலான உதவியைச் செய்தாலும் ஆச்சரியப்படுவதற்கில்லை!

ஆலயத்திற்குச் செல்லும் படிக்கட்டு



பாலமுருகனைத் தரிசிக்க இந்துக்கள், முஸ்லிம் தோழர்கள், கிறிஸ்துவ அன்பர்கள் எல்லோரும் பக்தியுடன் வருவதாகக் கூறினார் சாமியார். வெளியுலகில் நாத்திகர்களாகக் கருதப்படுபவர்களும் தம்மிடம் வந்து, தங்கள் குறைகளைக் கூறி, விபூதிப் பிரசாதம் பெற்றுப் போவதாகவும், பின்னர் மனம் திருந்தி ஆத்திகர்களாக மாறி வருவதாகவும் கூறினார். சிலர், எல்லோர் கண்களிலும் படும்படி பகலில் கோயிலுக்கு வருவதற்கு வெட்கப்பட்டுக் கொண்டு, இரவில் வந்து தரிசித்து விட்டுப் போகிறார்களாம்! ஆலயங்களுக்குச் செல்வதைஅவமானமாகக் கருதும் சிலரின் மனைவிமார்களும், பெண், பிள்ளைகளும் அவ்வப்போது பாலமுருகனின் சந்நிதிக்கு வந்து போவதாகவும் அறிந்தேன்.

கந்தப் பெருமான் தம் கிறிஸ்துவ பக்தர் ஒருவருக்குத் துணை புரிந்த விந்தையை சாமியார் விவரித்தபோது அருட் சக்தியின் மகிமையைக் கண்டு உள்ளம் நெகிழ்ந்தது.

அவர் கிறிஸ்துவராக மதம் மாறிய குடும்பத்தைச் சார்ந்தவர். அவருக்கும் அவரது மனைவியாருக்கும் பால முருகனிடம் எல்லையற்ற பக்தி ஏற்பட்டது. தவறாமல் ஆலயத்திற்கு வந்து போய்க் கொண்டிருந்தார்கள். பாலமுருகனடிமையையும் சந்தித்துப் பேசிவிட்டுப்போவார்கள். ஏசுநாதரிடம் இருந்த பக்தியும் நம்பிக்கையும் அவர்களுக்கு முருகனிடமும் இருந்தன. ஆனால், உறவினர்களுக்கு இவர்களுடைய முருக பக்தி சிறிதும் பிடிக்கவில்லை. மதக் கட்டுப்பாடுகளை மீறி இந்துக் கடவுளிடம் பக்தி செலுத்துகிறார்களே என்று அவர்களுக்கு சற்று வருத்தம்.

எல்லா பக்தர்களுக்கும் வருவதுபோல் கிறிஸ்துவ தம்பதிக்கும் ஒரு நாள் சோதனை வந்தது. அவர்களுடைய பதினொரு வயதுப் பெண்ணுக்குத் திடீரென்று உடல்நலம் குன்றியது. வயிற்றுப் போக்கால் அவள் அவதிப் பட்டாள். அவளை வேலூர் சி.எம்.சி. மருத்துவ மனையில் சேர்த்தார்கள். மருத்துவ நிபுணர்களெல்லாம் சிகிச்சையளித்தார்கள். ஒரு பலனும் இல்லை. பெண்ணின் நிலைமை மோசமாகிக் கொண்டே போயிற்று. பெற்றோர் புழுவாய்த் துடித்துப் போனார்கள்.

ஆறுதல் அளிக்க வேண்டிய அவரது உறவினர் ஆத்திரம் கொண்டனர். ''என்னமோ பெரிசா முருகன் கிட்டே போனியே, இப்போ என்னாச்சு? உன் பெண்ணின் உயிர் ஊசலாடிக்கிட்டிருக்கே. இப்போ உன் முருகனைக் காப்பாற்றச் சொல்லேன், பார்க்கலாம். நம் கொள்கைகளை மீறி, நீ இந்து சாமிகிட்டே போய் வந்தது தப்பு. அந்தக் குற்றம்தான் உன் மகளுக்கு எமனா வந்திருக்கு. நீ நம்பின முருகன் உன்னைக் கை விட்டுட்டான் பார்'' என்று ஏசிக் காட்டினர். இக் கடுஞ் சொற்களைக் கேட்ட பக்தருக்கு முருகன் மீது கோபம் வரவில்லை. மாறாக, பக்தி அதிகமாயிற்று. 'முருகன் என்னைக் கை விட மாட்டான்' என்ற நம்பிக்கை வலுத்தது. அந்த நம்பிக்கையின் காரணமாகக் கலங்கிய அவர் உள்ளத்தில் ஒரு தெளிவு பிறந்தது.

அன்று பெண்ணின் நிலைமை மிகவும் கவலைக்கிடமாகி விட்டது. நினைவிழந்து விட்டாள். மருத்துவர்கள்கூட கைவிட்டு விட்டனர். தந்தை

நம்பிக்கை யிழக்கவில்லே. அவர், கட்டிலின் அருகே நின்று அழுது கொண்டிருக்கவில்லே. நேரே, இரத்தினகிரிக்குப் பறந்தார். சாமியாரின் கால்களில் விழுந்து, தன் நிலேமையைக் கூறி, கண்ணீர் விட்டு அழுதார். ''முருகனே நான் மலேயாக நம்பி விட்டேன். என் பெண் மரணப் படுக்கையில் கிடக்கிருள். என் உறவினர் என்னேக் குற்றவாளியாக்கி, சொல்லம்புகளால் என் இதயத்தைத் துளேக்கின்றனர். சாமீ, எனக்கு வேறு கதி கிடையாது. பாலமுருகனேயும் உங்களேயும்தான் இன்னமும் நான் நம்பியிருக்கிறேன். முருகன் கண் திறப்பாஞ? பெண் பிழைத்து எழுந்திருப்பாளா?'' என்று கண்ணிருக்கிடையே பரிதாபமாக மீண்டும் மீண்டும் கேட்டார்.

பாலமுருகனடிமை முதலில் பக்தருக்கு ஆறுதல் அளித்தார். சற்றைக்கெல்லாம் அவருக்கு உறுதியு மளித்தார்.

''நீங்கள் கவலேப்படாதீர்கள். நீங்கள் நம்பும் முருகன் உங்கள் பெண்ணேக் காப்பாற்றுவான். இரவு எட்டு மணி வரை பொறுத்திருங்கள். பிறகு அவள் நிலேமையில் மாறுதல் தோன்றும். சிறுகச் சிறுக குணமாகும். நீங்கள் மருத்துவமனேக்குப் போங்கள். நான் எட்டு மணிவரை முருகனிடம் பிரார்த்திக்கப் போகிறேன். என் நம்பிக்கை வீண் போகாது. தைரியமாகப் போங்கள்'' என்று விடை கொடுத்து அவரை அனுப்பிவிட்டு, நேரே சந்நிதிக்குச் சென்ருர். பக்தரின் பெண்ணுக்கு உயிர்ப் பிச்சையளிக்கும்படி பக்தருக்காகப் பாலமுருகனிடம் மன்ருடினுர்.

இரவு எட்டு மணிக்கு மேல் மருத்துவமனேயில் ஓர் அதிசயம் நிகழ்ந்தது. 'பிழைக்கமாட்டாள்' என்று மருத்துவர்களால் கைவிடப்பட்ட பெண், கண் திறந்தாள். கை, கால்களே அசைத்தாள். ஆகாரம் உட்கொண்டாள். மெள்ள மெள்ள உடல் நலம் தேறியது. ஓரிரு நாட்களில் வீட்டுக்கும் வந்து விட்டாள்.

நான் இரத்தினகிரிக்குச் சென்றிருந்த சமயம் அப் பெற்ருேரும் சிறுமியும் அங்கு வந்திருந்தனர். சந்நிதியில் நின்றிருந்த அவர்களேச் சுட்டிக் காட்டி மேற்கண்ட நிகழ்ச்சியை என்னிடம் கூறினுர் சாமியார். நான் போகும் போதெல்லாம், அச் சந்நிதியில் நடைபெற்று வரும் அற்புத நிகழ்ச்சிகளே என்னுடன் பகிர்ந்து கொள்வதில் அவர் எல்லேயற்ற மகிழ்ச்சியடைகிருர்.

இரத்தினகிரி ஆலயத்திலிருந்து சுற்றிலும் பார்த்தால் கண்ணுக்கும் உள்ளத்திற்கும் குளிர்ச்சியாக இருக்கிறது. பச்சை வயல்களும், பசுஞ் சோலேகளும், தென்னந் தோப்புக்களும், அருகில் தெரியும் குன்றுகளும், தொலேவில் தெரியும் மலேத் தொடர்ச்சிகளும் நம்மை அமைதி ஊஞ்சலில் அமர வைத்து, மதுரகீதம் பாடுகின்றன. ஓர் இரவு அங்கு படுத்து எழுந்ததும், புத்துணர்ச்சியும் புதுத் தென்பும் பெறுகிருேம்.

மறுநாட் காலே ஆறு மணிக்கெல்லாம் புறப்பட்டு, எட்டு மணிக்கெல்லாம் கேட்டவரம்பாளேயத்திற்குச் சென்று விட வேண்டும் என்று நாங்கள் திட்டியிருந்த திட்டம் நிறைவேறவில்லே. எங்கள் திட்டத்தை எப்படியாவது குலேத்து விடுவது என்று கங்கணம் கட்டிக் கொண்ட

எங்கள் கார், 'ஸ்டார்ட்' ஆகாமல் பிடிவாதம் பிடித்தது. தட்டிக் கொடுத்து, தள்ளிக் கொண்டு போய், 'தாஜா' பண்ணி விடலாம் என்று நினைத்த பழநியும், நண்பர்களும் கிட்டத்தட்ட மேல்விஷாரம் வரையில் போய் விட்டு நம்பிக்கை யிழந்து காருடன் திரும்பி வந்தார்கள். மணி ஒன்பதாகி விட்டது! வேறு வழியில்லாமல் பிடிவாதம் பிடித்த அந்தக் காரை, வேலூர் போகும் ஒரு லாரியில் இழுத்துக் கட்டிப் போட்டோம். அதுவும் வேறு வழியில்லாமல், வாயை மூடிக் கொண்டு, 'கப் சிப்' என்று வேலூர் வந்து சேர்ந்தது. அங்கு ஓர் 'ஓர்க் ஷாப்'பில் அதை 'அட்மிட்' செய்தோம்.

பதிஞேரு மணியாகி விட்டது. அப்போதும் காரின் வாயைத் திறந்து, நான்கு 'மெக்கானிக்' டாக்டர்கள் அதன் தொண்டையில் ஏதோ ஆபரேஷன் செய்துகொண்டிருந்தார்கள்! நான் பொறுமையை யிழந்தேன்.

எட்டு மணிக்குக் கேட்டவரம்பாளையத்தில் இருக்க வேண்டும் என்று நினைத்தேன். பதினென்றரை மணிக்கு வேலூர் 'ஓர்க் ஷாப்' வாயிலில் தவம் இருந்தேன். கார் எப்போது 'ஸ்டார்ட்' ஆகும் என்பது நிச்சயமாகத் தெரியவில்லை. பொறுமைக்கும் ஓர் எல்லை இல்லையா?

ஆனுல், எங்கள் திட்டம் குலைந்து, இரண்டு மணி நேரம் இரத்தின கிரியிலும், இரண்டு மணி நேரம் வேலூரிலும் காத்திருந்ததற்கு ஒரு காரணம் இருந்தது என்பது சற்றைக்கெல்லாம் எங்களுக்கு விளங்கியது. 'நடப்பதெல்லாம் நன்மைக்கே' என்பது வறட்டு வேதாந்தமாகத் தோன்றினுலும், சில சமயங்களில் உண்மை புலனுகும்போது, தெய்வ சக்தியின் மகிமையை நாம் உணருகிறோம்.

'ஓர்க் ஷாப்'பில் எத்தனை நேரம் காத்திருப்பது என்று, சி. எம். சி. மருத்துவ மனையில் பழக் கடை வைத்திருக்கும் அன்பர் கண்ணனைச் சந்திக்கலாம் என்று சென்றோம். பேச்சு வாக்கில், பர்வத மலையின் மீது இருக்கும் சமாதி நிலையத்தைப் பற்றியும், 'ராமகிரி யோகீச்வரர்' பற்றியும் குறிப்பிட்டு, கடலாடியிலும் மாதிமங்கலத்திலும் விசாரித்ததில் அவர் தற்போது எங்கிருக்கிறார் என்பது தெரியவில்லை என்று நண்பரிடம் கூறினேன். உடனே கண்ணன், ''அவரோடதான் நான் பதினறு வருஷங்களுக்கு முன்னே பர்வத மலைக்குப் போனேன். அவர் இப்போ வேலூர்லேதான் இருக்காரு. போளூர் போற வழிதான். ஐயாவுக்கு நேரம் இருந்தால் அவரைப் பார்த்துட்டுப் போகலாம்'' என்றார்.

எனக்குத் தூக்கி வாரிப் போட்டது! சற்றும் எதிர்பாராத வகையில், 'எங்கு இருக்கிறாரோ?' என்று நான் நினைத்துக் கொண்டிருந்த சாமியார்,' 'அங்குதான் இருக்கிறார்' என்று தெரிந்ததும், என் கார் மீது கோபம் ஏற்படுவதற்குப் பதில் எனக்கு நன்றி யுணர்ச்சியே மேலிட்டது. அது 'மக்கர்' செய்யாவிட்டால், நான் வேலூரில் தங்கி யிருக்கப் போவது மில்லை, கண்ணனை சந்தித்திருக்கவும் மாட்டேன், பர்வத மலையின் மீது சமாதி நிலையம் கட்டிய சாமியாரின் ஆச்ரமத்திற்குச் சென்றிருக்கவும் மாட்டேன்.



கேட்டவரம் ஸ்ரீ சிம்மேச்வரர் ஆலயமும், பர்வத மலைச் சிகரமும்

**வே**லூர் 'கன்ட்டோன்மெண்ட்' ரயில் நிலையத்தை அடுத்திருக்கும் ஸ்ரீ அங்காள பரமேச்வரி புற்றுக் கோயிலுக்கு நாங்கள் சென்றோம். அதன் முன்புறம் ஓர் ஆச்ரமமாக அமைந்திருக்கிறது. அங்கு ஓர் இருக்கையில் சடை முடியுடன், எலும்பும் தோலுமாக ஒரு சாது அமர்ந்திருந்தார். 'அவர்தான் புற்றுச்சாமி' என்கிற ராமகிரி யோகீச்வரர் என்று மெல்லக் கூறிய கண்ணன், என்னை அவருக்கு அறிமுகம் செய்து வைத்தார். அந்த சாது, கண் ஜாடையால் எங்களை வரவேற்று, கை ஜாடையால் அமரச் சொன்னார். அவர் பேசவில்லை. அவரால் பேச முடியவில்லை. அத்தனை பலவீனமாக இருந்தார்.

பர்வத மலைக்குச் சென்றதையும், உச்சியிலிருந்த சமாதி ஆலயத்தைப் பார்த்ததையும், சற்றும் எதிர்பாராத வகையில் வேலூரில் அவரைத் தரிசிக்க நேர்ந்ததைப் பற்றியும் நான் சாதுவிடம் கூறினேன். அதைக் கேட்டு அவர் மகிழ்ச்சி அடைந்தார். பின்னர், மெல்லிய குரலில் பேசத் தொடங்கினார்.

பூந்தமல்லியைச் சேர்ந்த அவர், தமது எட்டாவது வயதில் வீட்டை விட்டுக் கிளம்பி எங்கெல்லாமோ சுற்றித் திரிந்து விட்டு, போளூர் ஸ்ரீ விட்டோபா மடத்திற்கு வந்து சேர்ந்தார். ஸ்ரீ விட்டோபாவின் சீடர் ஸ்ரீ கணேசகிரி சுவாமிகளின் சீடரானுர். பின்னர், குருவுடன் ஹரித்வாரம் சென்ருர். அங்கு நாற்பது ஆண்டுகளுக்கு மேல் தங்கி யிருந்து விட்டு, பர்வத மலைக்குச் செல்லும்படி குரு கட்டளையிட்டதற்கு இணங்க, தென்னுட்டிற்கே திரும்பி வந்தார். பர்வத மலைக்கு இரண்டு மூன்று முறை சென்ருர். அம் மலையில் இருக்கும் பல மூலிகைகளைக் கண்டு பிடித்தார்.

''அம் மலை மீது சமாதி ஆலயம் எதற்காகக் கட்டிக் கொண்டீர்கள்?'' என்று கேட்டேன் நான்.

''யோக நிஷ்டையில் இருப்பதற்காகத்தான். எனது பக்தர் ஒருவரின் பெரு முயற்சியால் அது கட்டப்பட்டது. நான் ஒரு மண்டலம் அங்கு நிஷ்டையில் இருந்து விட்டுத் திரும்பி விட்டேன். இதோ பாருங்கள், இந்தப் பாதாள அறையும் நிஷ்டையில் இருப்பதற்காகக் கட்டப்பட்டது தான். பதினெட்டு அடி ஆழம்'' என்று எதிரில் இருந்த ஒரு சமாதிக் கட்டடத்தைக் காட்டினுர்.

அம்மனுக்கு நேரே, அவருக்கு இடப்புறத்தில் மூடப்பட்டிருந்த ஒரு பாதாள அறையைச் சுட்டிக் காட்டி, ''இது என்ன?'' என்று கேட்டேன்.

''இது என்னுடலின் நல்லடக்கத்திற்காகக் கட்டப்பட்டிருக்கிறது'' என்று கூறினுர் ராமகிரி யோகீச்வரர்.

பர்வத மலையில் கரிநெல்லி, கரி ஊமத்தை, கரும் துளசி, கரும் நொச்சிலி, சின்னு சுருங்கி, பேய் விரட்டி முதலிய மூலிகைகள் இருப்பதாகக் கூறினுர் அவர்.

மலை உச்சியில் கற்பக விருட்சம் இருப்பதாகவும், இரவு பன்னிரண்டு மணிக்கு அங்கு க்ண்ணைப் பறிக்கும் ஜோதியைத் தாம் தரிசித்திருப்பதாகவும் கூறினுர் அந்தச் சாது.

இரவு மலைமீது தங்க முடியாமல் போனதைக் குறித்து அவரிடமும் குறைப்பட்டுக் கொண்டேன் நான்.

''அதனுலென்ன, அம் மலையைப்பற்றிய குறிப்புக்களை யெல்லாம் ஒரு வாரத்தில் உங்களுக்கு எழுதியனுப்புகிறேன். பிறகு உங்களை நானே ஒரு நாள் அழைத்துச் சென்று, எல்லா அற்புதங்களையும் காட்டித் தருகிறேன்'' என்ருர் உற்சாகத்துடன். அவருக்கு எண்பது வயதிருக்கும். உடல் வலிமை இழந்து கானப்பட்டார். ஆனுல், அவரிடம் அடக்க முடியாத ஆர்வம் இருந்ததை உணர்ந்தேன்.

நாமொன்று நினைக்க தெய்வம் ஒன்று நினைத்து விடுகிறதே! ராமகிரி யோகீச்வரரிடமிருந்து எனக்குக் கடிதமே வரவில்லை. மாருக, பத்து

நாட்கள் கழித்து கண்ணனிடமிருந்து ஒரு கடிதம் வந்தது. அதில் ராமகிரி யோகீச்வரர் சமாதி அடைந்து விட்டதாக அவர் எழுதியிருந்ததைக் கண்டு நான் திடுக்கிட்டுப் போனேன். எனக்கு இரண்டாவது அதிர்ச்சி இது. முன்பு, தங்கால் மௌன சுவாமிகளைப் பற்றி எழுதிக் கொண்டிருந்தபோது திடீரென்று அவர் இறைவனோடு கலந்து விட்டார்.

அங்காள பரமேச்வரி ஆலயத்திலிருந்து கேட்டவரம்பாளையத்திற்குப் பயணமானோம். போளூரிலிருந்து அக் கிராமத்திற்குச் செல்லும் போது இருபுறமும் இயற்கைக் காட்சிகள் கண்ணுக்கு விருந்தளிக்கின்றன. 'கேட்டவரம்' என்ற நாவலில் 'அநுத்தமா' தீட்டிய சொல்லோவியங்களை வண்ண ஓவியங்களாக என் கண் முன்னால் கண்டேன். 'எள்ளுப்பாறை'யின் வனப்பு மிகு வயல்களையும், 'சிறுவள்ளூர்' ஏரியின் தெள்ளிய நீரையும் ரசித்துக் கொண்டே கேட்டவரம்பாளையத்திற்கு வந்து சேர்ந்தோம்.

ஊருக்குள் செல்வதற்கு முன், வயல்களுக்கு நடுவில் காட்சி தரும் சிம்மேச்வரர் ஆலயமும், பின்னால் வானுலகை எட்டிப் பிடிக்க முயல்வதே போல், முகில் கூட்டத்தை முட்டி நிற்கும் பர்வத மலையின் சொல்லில் அடங்கா சௌந்தர்யத் தோற்றமும் நெஞ்சை அள்ளுகின்றன. நம்மை ஒரு கணம் நிற்க வைத்து, 'வாழ்நாளெல்லாம் அழகையும் அமைதியையும் தேடி அலையும் மனிதனே, நேரம் கிடைத்தபோது இந்தப் பக்கம் வந்து போ. செயற்கையழகிலும், களியாட்டங்களிலும் நீ ஒருபோதும் காண முடியாத பேரின்பத்தை இங்கு பெறலாம். இதுவே தெய்வ தரிசனம்' என்று இயற்கையன்னை தாய்க்குரிய கருணை உள்ளத்தோடு நம்மை அழைப்பது காதில் விழுகிறது. அது தெய்வத்தின் குரலாகக் கேட்கிறது.

ஆலயத்தினுள் செல்கிறோம். கோபுர வாசல் அடைக்கப்பட்டிருப்பதால், வடப்புற வாயில் வழியாகப் போகிறோம். சிம்மேச்வரரையும் திரிபுரசுந்தரியையும் தரிசித்துவிட்டு வெளியே வருகிறோம். அருகிலிருக்கும் ஒரு சிறு மலையில் மக்களின் கோலாகல ஆரவாரம் கேட்கிறது.

''அது என்ன?'' என்று விசாரித்தேன்.

''அங்கே ஒரு முருகன் கோயில் கட்டப் போறாங்க. ரொம்ப வருஷங்களாக மலைமேலே அரைகுறையாகக் கட்டப்பட்ட மண்டபம் ஒன்று இருந்தது. நாலு நாளைக்கு முன்னே நம்ம ஊர்லே ஒருத்தருக்குக் கனவில் முருகர் வந்து தனக்கு அங்கு கோயில் கட்டும்படிக் கட்டளையிட்டாரு. அதனாலே ஊர் ஜனங்களெல்லாம் கூடி உற்சாக

ஸ்ரீ ராமகிரி யோகீச்வரர்



மாக வேலை செய்ய ஆரம்பிச்சுட்டாங்க. ரெண்டு நாளைக்கு முன்னே அங்கே ஒரு சுனை இருப்பது தெரிஞ்சுது. பாறைகளைப் புரட்டிப் போட்டு அதையும் பெரிசு செய்துகிட்டிருக்காங்க'' என்று உள்ளூர் அன்பர் ஒருவர் பதில் கூறினர்.

கேட்டவரம்பாளையம் ஊருக்குள் எங்கள் கார் நுழைந்தது.

கடை வீதியைக் கடந்து லட்சுமிநாராயணசாமி ஆலயத்திற்குச் சென்றோம். அங்கு விமானமெல்லாம் புதுப்பிக்கப்பட்டு, அண்மையில் குடமுழுக்கு விழாவும் நடைபெற்றுள்ளதாக அறிந்தோம். ஆலயத்தில் அமர்ந்தவாறே அங்கு அழைத்து வரப்பட்ட வயோதிகர்களான மாதிமங்கலம் சின்னசாமி உடையார், ராமநாத ஐயர் இருவரிடமும் பர்வதமலையைப் பற்றி நான் விசாரித்துக் கொண்டிருந்தபோது, அந்தணர் தெருவிலிருந்து ஒரு பள்ளி ஆசிரியர் வந்து என்னைப் பஜனை மடத்திற்கு வரும்படி அழைத்தார். அங்கு ஆண்டுதோறும் நடைபெறும் ஸ்ரீராமநவமி உற்சவத்தைப் பற்றி நான் நிறையக் கேள்விப்பட்டிருந்ததால், அந்த இடத்தைத் தரிசிக்க ஆவலுடன் சென்றேன்.

பஜனை மடத்தில் சிறியோரும், பெரியோருமாகப் பல அன்பர்கள் எங்களை வரவேற்று ஆராதனைக்குரிய படங்களையும், பஜனை நடக்கும் கூடத்தையும், சமையற்கட்டையும், சமாராதனை நடக்கும் தாழ்வாரத்தையும் உற்சாகத்துடன் காட்டினர்கள்.

அறுபது வருடங்களுக்கு முன் தொடங்கிய இந்த உற்சவத்திற்கு பாகவதர்களும், பக்தர்களும் பல ஊர்களிலிருந்து வந்து கூடுகிறார்கள் என்றும், ஒரு வாரத்திற்கு மேல் பஜனையும், உபந்நியாசங்களும், கச்சேரிகளும் இடைவிடாமல் நடைபெறும் என்றும், அந்த ஊர் மக்கள் இதைத் தங்கள் வீட்டு விழாவாகக் கருதி, உற்சாகத்துடன் ஒத்துழைப்பார்கள் என்றும் கூறினர்கள். ஒவ்வோர் ஊருக்கும் ஒவ்வொரு மகிமை. அதைச் சொல்லிக் கொள்வதில் அவ்வூர் வாசிகளுக்குத்தான் எத்தனை பெருமை!

கேட்டவரம்பாளையத்தில், அம்மூர் சுவாமிகள் என்ற அவலூர் சீனுவாச ஐயங்கார் தங்கியிருந்ததாகவும், அவர் பரம ராம பக்தர் என்றும், நின்று கொண்டேதான் பஜனையைக் கேட்பார் என்றும் கூறினர்கள். அவரைப் பின்பற்றி, ஸ்ரீராமநவமி உற்சவத்தில் இன்றும் நின்று கொண்டே நாமசங்கீர்த்தனம் செய்யும் சிறப்பைப் பற்றியும் அறிந்தேன். அதற்கு அம்மூர் சுவாமிகள் கொடுத்த விளக்கத்தை அறிந்த போது, ஆஞ்சநேயரின் ராமபக்தியை எண்ணி உள்ளம் சிலிர்த்தது.

நாம் படுத்துக் கொண்டு ராமன் புகழ் பாடினல், ஆஞ்சநேயர் உட்கார்ந்து கொண்டு கேட்பாராம். நாம் உட்கார்ந்து கொண்டு பாடினல், ஆஞ்சநேயர் நின்று கொண்டு கேட்பாராம். நாம் நின்று கொண்டு பாடினல், அனுமார் ஆனந்தக் கண்ணீருடன் நர்த்தனம் செய்து கொண்டே கேட்பாராம்.

கேட்டவரம்பாளையத்தைச் சேர்ந்த கிருஷ்ணமூர்த்தியும் சாம்பமூர்த்தியும், காமகோடிப் பெரியவர்கள் தங்கள் கிராமத்திற்கு எழுந்தருளிய நாட்களை நினைவு கூர்ந்தார்கள். ஸ்ரீ சந்திரமௌலீச்வரர்

பூஜைக்காக அவர்கள் பர்வத மலையிலுள்ள மகா வில்வத்தைப் பறித்துக் கொண்டு வந்து கொடுப்பார்களாம்.

கிடைத்தற்கரிய மகா வில்வ தளங்களைக் கண்டதும் பெரும் மகிழ்ச்சியடைந்த காமகோடிப் பெரியவர், மலையேறி அப் புனித மரத்தைத் தரிசிக்க வேண்டும் என்று விரும்பினாராம். ஆனால், ஏதோ ஒரு காரணத்தால் அது இயலாமல் போய் விட்டதாம்.

பேசிக் கொண்டே தெருக் கோடியில் இருக்கும் காசிவிசுவநாதர் கோயிலுக்குச் சென்றோம். கருவறையில் இருக்கும் பாண லிங்கத்தைத் தரிசித்தோம். கோஷ்ட கணபதி, நின்ற திருக்கோலத்தில் நம் சிந்தையைக் கவருகிறார்.

அந்தக் காலத்தில் ஊர்ச் சிறுவர்களெல்லாம் சேர்ந்து கருங்கற்களைப் புரட்டித் தூக்கி வந்து தளவரிசை போட்டு, மண்டபத்தைக் கட்டிய நிகழ்ச்சியைப் பெருமையுடன் விவரித்தார் கிருஷ்ணமூர்த்தி. பழுது அடைந்திருக்கும் பகுதிகளையும், மதிற் சுவர்களையும் சீர் செய்து குட முழுக்கு செய்வதற்கான முயற்சி நடைபெற்று வருவதாகவும் கூறினார் அவர்.

அந்த ஊருக்கு முதலில் 'கட்டரம்பாளையம்' என்றே பெயர் வழங்கப் பட்டிருக்கிறது. இன்றும் சுற்றுப்புறத்திலுள்ள கிராம மக்கள் 'கட்டரம் பாளையம்' என்றே குறிப்பிடுகிறார்கள். ஊரின் வடமேற்கு எல்லையில் ஒரு சிறு மலையில் எழுந்தருளி யிருக்கும் ஸ்ரீ வேங்கடேசப் பெருமாள்தான் அவ்வூருக்குப் புதுப் பெயர் ஏற்படக் காரணமா யிருந்திருக்கிறார் என்று அன்பர்கள் சொன்னார்கள்.

அவர் பிரசன்ன வேங்கடேசப் பெருமாள். கேட்ட வரத்தையெல்லாம் கொடுக்கும் எம்பெருமான். எனவே கட்டவரம்பாளையம், கேட்ட வரம்பாளையம் ஆயிற்று. அதையும் சுருக்கி 'கேட்டவரம்' என்று இப்போது அழைக்கிறார்கள்.

கேட்டவரம் மலையில் உறையும் பிரசன்ன வேங்கடேசப் பெருமாளைத் தரிசிக்கச் சென்றோம். கேட்டவரம் ஏரியின் கரையோரமாக அம் மலையை நோக்கிச் செல்லும்போது இயற்கை அன்னை எழிற் கோலாட்டம் போட்டு நமக்கு நடைபாதை விரிக்கிறாள். கரடு முரடான பாதையையும் பொருட்படுத்தாமல், பரவசத் துடிப்போடு நாம் செல்கிறோம். சற்றுத் தொலைவில் பசுமை பொழியும் பொலிவோடு நிமிர்ந்து நிற்கும் ஜவ்வாது மலைத் தொடர் வழித்துணையாக நம்முடனேயே வருகிறது.

மலையடிவாரத்தில் கார் வந்து நின்றதும், உச்சிப்பாறை யொன்றில் கொஞ்சி விளையாடிக் கொண்டிருந்த இரு குரங்குகள் தனிமை கலைந்து, 'இவர்கள் யார்? எதற்காக இப்போது இங்கே வந்தார்கள்?' என்பது போல் எங்களைப் பார்த்தன. அந்தக் காட்சி திருப்பதி மலையை நினைவு படுத்தியது.

''மலையடிவாரத்தில் வாழும் மக்களுக்கு இந்தக் கோயில்தான் திருப்பதி......'' என்றார் உடன் வந்த பட்டர். பின் பக்கம் வழியாக

மலையேறினோம். வழுக்குப் பாறைகளும், முட் செடிகளும், கற்களும் மண்டிக் கிடந்த அந்தக் கரடு முரடான பாதையில் ஏறும்போது, பர்வத மலைப் பயணம் நினைவுக்கு வந்தது. அடர்ந்த மரங்களினூடே அவ்வப் போது பர்வத மலைச் சிகரம் தெரிந்தது. அங்கிருந்து பார்க்கும்போது அதன் வடிவமும், வனப்பும் தனிச் சோபையுடன் விளங்கியது.

கேட்டவரம் மலையிலிருந்து பர்வத மலைச் சிகரம் இன்னும் உயரமாக, ஆலயகோபுரம் போல் தோற்றமளிக்கிறது.

கேட்டவரத்தை அளிக்கும் பிரசன்ன வேங்கடேசப் பெருமாளையும் அலர்மேலுமங்கைப் பெருமாட்டியையும் தரிசித்துவிட்டு நாங்கள் கீழே இறங்கி வந்தோம். குரங்குகள் நிம்மதிப் பெருமூச்சு விட்டன.

அன்று மகாளய அமாவாசைப் புண்ணிய தினம். மாலை ஆறு மணி இருக்கும். கேட்டவரம்பாளையத்திலுள்ள 'பம்ப்' செட் ஒன்றிலிருந்து பயிர்களுக்குப் பாய்ந்தோடிக் கொண்டிருக்கும் நீரில் ஆசை தீர நீராடி விட்டு, திருநீறு பூசி, பர்வதநாதரை நோக்கிக் கும்பிட்டோம். பூண்டிக் குச் சென்று திண்ணையில் அமர்ந்திருக்கும் மகானைத் தரிசிக்கலாம் என்று ஓர் எண்ணம் தோன்றியது. அன்றிரவு பூண்டியிலேயே கழித்து விட்டு, மறுநாட் காலை பர்வத மலையை வலம் வருவது என்று முடிவு செய்தோம். அடுத்த கணம் எங்கள் கார் பூண்டி கிராமத்தை நோக்கிப் பறந்தது.

கார்வேட் நகர் சென்று காஞ்சிப் பெரியவரைச் சந்தித்ததைப்பற்றி யும் அதற்குப் பிறகு பர்வத மலையைக் கிரிவலம் வர வேண்டும் என்று எனக்குத் தோன்றியதையும் சாமியாரிடம் கூறிவிட்டு, ''நாளைக்கு கிரிப் பிரதட்சிணம் போகலாம்னு இருக்கேன். உங்க ஆசீர்வாதத்திற்காகத் தான் வந்தேன்'' என்றேன் நான்.

''போய் வாங்க. எல்லாம் பார்த்துட்டு வாங்க'' என்றார் சாமியார்.

''ராத்திரி இங்கேயே தங்கிவிட்டுக் காலையிலே போகலாம்னு இருக் கோம்'' என்றேன்.

''அப்படியே செய்யுங்க'' என்று சாமியார் கூறியதும், ''உங்களைப் பற்றியும் பர்வத மலையைப்பற்றியும் ஜனங்க நிறைய தெரிஞ்சுக்க ஆசைப் படறாங்க...எல்லாத்தையும் மொத்தமா சொன்னீங்கன்னா, எழுதலாம்னு பார்க்கறேன்'' என்றேன் நான்.

சாமியார் மௌனமாக இருந்தார்.

''ஐயா கேட்கறாரே, நீங்க என்ன பதில் சொல்றீங்க சாமி?'' என்று குறுக்கிட்டார் மணியக்காரர்.

''போய் வரட்டும். கொஞ்சம் கொஞ்சமா சொல்றேன்'' என்று பதிலளித்தார் சாமியார்.

சாமியார் எந்த ஊர், அவருக்கு என்ன பெயர், எங்கிருந்து வந்தார், எங்கெல்லாம் போயிருக்கிறார் என்பதைப்பற்றி யெல்லாம் நான் பல முறை கேட்டிருந்தும், அவர் நேரடியாகப் பதில் கூறியதே யில்லை. முயற்சி திருவினையாக்கும் என்ற எண்ணத்தில் அன்று மீண்டும் அதே கேள்வியைக் கேட்டேன்.



பஜனை மடம் (கேட்டவரம்)



பிரசன்ன வேங்கடேசப் பெருமாள் ஆலயம்

''சாமீ எந்த ஊர்லேருந்து இங்கே வந்தது?''

''மாடர்ன் தியேட்டர்ஸ்லேருந்து கடலாடிக்கு வந்தேம்ப்பா...... அப்போ கார்த்திகேயன் பஸ் சர்வீஸ்......ஏத்திக்கிட்டாங்க......நான் என்னமோ பேசினேன். அவங்களுக்கு ஒண்ணுமே புரியலே. முழிச்சாங்க'' என்று பேசத் தொடங்கினார் சாமியார்.

''அவங்ககிட்டே சாமி என்ன பாஷை பேசிச்சு?''

அவர் எந்தப் பகுதியைச் சேர்ந்தவர் என்று தெரிந்து கொள்வதற் காக சாமர்த்தியமாக அப்படிக் கேட்டேன் நான்!

''அவங்களுக்குப் புரியாதை பாஷை பேசினேன்'' என்று கூறி மிக சாமர்த்தியமாக நழுவி விட்டார் சாமியார்.

பூண்டி சாமியார் மாடர்ன் தியேட்டர்ஸ் என்ற பெயரை அடிக்கடி பயன்படுத்துகிறார். சேலத்திலுள்ள மாடர்ன் தியேட்டர்ஸா என்று அறிந்து கொள்ளும் பொருட்டு ஒரு சமயம் ''சினிமாப் படம் பிடிக்கிறார் களே, அதையா சொல்றீங்க'' என்று நான் கேட்டதற்கு, ''ஆமாம்'' என்று அவர் பதிலளித்தார்.

''அங்கே போனா உங்களைப் பத்தி ஏதாவது தெரிஞ்சுக்கலாமா?''

''தெரிஞ்சுக்கலாம்.''

''அங்கே உங்களுக்குத் தெரிஞ்சவங்க இப்போ யாராவது இருக் காங்களா?''

''ஒருத்தரும் இல்லே.''

''அங்கே போய் விசாரிச்சுப் பார்க்கட்டுமா?''

''பாருங்க...''

''மாடர்ன் தியேட்டர்ஸிலிருந்து கடலாடிக்கு எதுக்கு வந்தீங்க?''

''சிங்காரவாடிக்கு நடந்து போய்க்கிட்டிருந்தேம்ப்பா......''

''சிங்காரவாடி எங்கே இருக்குங்க?''

''கடலாடிக்குப் பக்கத்திலேதான். நான் எங்கே போனாலும் நிராசையா போவேன், நிராசையா திரும்பிடுவேன்......அன்னிக்கு, 'என்னடா இப்படி ஊரும் இல்லாமெ பேரும் இல்லாமெ பொறந்துட்டோமேன்'னு மனசுலே விசனப்பட்டுக்கிட்டே நடந்துகிட்டிருந்தேம்பா. போலீஸ் ஸ்டேஷன் பக்கத்துலே வந்து படுத்தேன். சாயபு வந்து 'என்ன சாமி, எங்கே இந்தப் பக்கம் வந்தீங்க'ன்னு கேட்டாரு...''

''எந்த சாயபு?''

''அதாம்பா......காதர் பாட்சா ...... ரொம்ப நல்லவரு ...... அவரைப் பேச்சுலே மடக்கவே முடியாது......அதனாலே அவர் கேட்ட எதுக்குமே பதில் சொல்லாமெ நான் 'கம்'முனு இருந்துட்டேன்.

''பிள்ளையார் கோயில்லே பூஜையே யில்லாமெ இருக்கே சாமீ— ஒரு பூஜை, அபிஷேகம், கட்டளை இருந்தாத்தானே நல்லது சாமி. ஒரு ஆளைப் பார்த்துப் போட்டு பூஜை நடக்க ஏற்பாடு பண்ணுங்க சாமீ''ன்னு காதர் பாட்சா எங்கிட்டே சொன்னாரு. நான் அவர் கிட்டே பேச்சுக் கொடுக்கலே. பேச்சுலே அவரை ஒருத்தரும் மிஞ்ச முடியாது. நான் பேசாமெ படுத்துத் தூங்கிட்டேன். மறுநாள் கார்த்தாலே எழுந்து நடந்தேன். நாலஞ்சு பேர், கையிலே மம்மட்டியோட வயல் பக்கம் போய்க்கிட்டிருந்தாங்க. கேழ்வரகு நடவு போலேருக்கு......அப்போ ஒரு பத்து பேர் பஸ்டாண்டுகிட்டே வந்து நின்னாங்க. அவங்கள்ளாம் பிரார்த்தனைக்குத் திருப்பதிக்குப் போறாங்கன்னு நான் என் மனசுலேயே நெனச்சுக்கிட்டேன். நான் புளிய மரத்தடியிலே நின்னுகிட்டிருந்தேன்......காதர் பாட்சா அங்கே வந்தாரு......வந்து, பேனாகத்தியை எடுத்து மாம்பழத்தை நல்லா தோலு சீவி, 'சாப்பிடு சாமீ'ன்னு கொடுத்தார். அவரை பேச்சுலே மிஞ்ச முடியாது......அதனாலே நான் பேசாமெ வாங்கித் தின்னுட்டேன்......''

இப்படி மூச்சு விடாமல் பேசிக் கொண்டே போனார் சாமியார். கண் முன்னால் அந்தக் காட்சியைப் பார்ப்பது போலவே பேசினார். அவர் பேசும் போது கடந்த காலம், நிகழ்காலம், எதிர்காலம் என்ற வேற்றுமைகள் எல்லாம் மறைந்து விடுகின்றன. அவர் கூறும் விவரங்கள் உண்மையா பொய்யா என்ற சந்தேகமே தோன்றுவதில்லை. உள்ளத்தில் உறையும் சத்தியம் அவர் உதட்டில் பிரகாசிப்பதைக் காண முடிகிறது.

[''ஊர் பேர் தெரியாம பொறந்துட்டோமேன்னு ஒரு சமயம் விசனப்பட்டதா அன்னிக்குச் சொன்னீங்களே சாமீ, அப்படிக் கூட இருக்குமா?'' என்று பின்பு ஒரு முறை சாமியாரிடம் கேட்டேன்.

''இருக்கும்'' என்று சுருக்கமாகப் பதில் கூறி நிறுத்தி விட்டார் அவர்.]

சாமியாருக்குத் தீபாராதனை செய்து படுக்க வைத்து விட்டார்கள். அவரது தலைப் பக்கம் நின்றிருந்தேன் நான்.

''ஏதாவது கேட்கணும்னா கேளுங்க!'' என்று மணியக்காரர் கூறவே, ''சாமீ, நீங்க பர்வத மலைக்குப் போய் வந்ததைப் பத்தி ஏதாவது சொல்லுங்க'' என்று கேட்டேன் நான்.

''அங்கெல்லாம் தெருவுங்க......ஓட்டல் கடையெல்லாம் இருக்குது......நான் மாடி மேலே ஏறிப் போய் கதவைத் தட்டினேன். உள்ளே பன்னண்டு பேர் உட்கார்ந்து கிட்டிருந்தாங்க. ம்... காலம், நேரம், சூழ்நிலே சரியில்லேன்னு நான் இறங்கி வந்துட்டேன்'' என்ருர் சாமியார்.

சம்பந்தமில்லாத அந்தப் பேச்சில் ஆழ்ந்த பொருள் புதைந்திருப்பதாக எனக்கு அப்போது தோன்றியது.

பர்வத மலேயைப்பற்றிய வேறெந்தக் கேள்விக்கும் சாமியார் பின்னர் பதிலே கூறவில்லே.

''காஞ்சி காமகோடி சங்கராசாரியார் இந்தப் பக்கமெல்லாம் யாத்திரை செய்திருக்கிருரே, அப்போ நீங்க அவரைப் பார்த்திருக்கிங்களா?'' என்று அடுத்தபடி கேட்டேன்.

சாமியார் நேரிடையாகப் பதிலளிக்கவில்லே. அவர் வாய் முணுமுணுத்தது.

உரனென்னும் தோட்டியான் ஓரைந்தும் காப்பான்
வரனென்னும் வைப்பிற்கோர்வித்து

'நீத்தார் பெருமை'யில் வரும் திருக்குறளேக் கூறிவிட்டு, சாமியார் அதற்குப் பொருளும் கூறினுர். 'அறிவினுல் ஐம்புலன்களாகிய யானேகளே அடக்கியவர், முக்தியெனும் பெருநிலேக்கு விதை போன்றவர்' என்ற கருத்துள்ள குறளேக் கூறி, ஆசாரிய சுவாமிகளின் மகிமையை விளக்கியதாகவே எனக்குத் தோன்றியது. இதையடுத்து,

'அணுவைத் துளேத்து ஏழ்கடலேப் புகட்டிக்
குறுகத் தறித்த குறள்'

என்ற ஔவையாரின் பாடலேக் கூறி குறளின் பெருமையை விளக்கினுர்.

மலேயைச் சுற்றி வரப் புறப்பட்டோம்



என் கேள்விக்கு நேரடியாகப் பதில் வராததால் மீண்டும், ''சங்கரா சாரியாரை நேரிலே எப்போதாவது பார்த்திருக்கீங்களா சாமி?'' என்று கேட்டேன்.

''அவங்கள்ளாம் பூஜை, அபிஷேகம், ஆராதனை செய்யறவங்க ஆச்சே. அவங்ககிட்டே போகலாமா? தொலைவிலேருந்து, எட்டி கிட்டிப் பார்க்க வேண்டியதுதான்.''

''நீங்க எப்போதாவது அப்படிப் பார்த்திருக்கீங்களா?''

''பார்த்திருக்கேன்... நல்லாப் பார்த்திருக்கேன்.''

''எங்கே?''

''மேட்டுப்பாளையத்திலே'' என்றார் சாமியார். நான் புரியாமல் மணியக்காரர் பக்கம் திரும்பினேன்.

''ஆமாங்க, இருக்கும். இதோ பக்கத்திலே இருக்கிற மேட்டுப்பாளை யம் மடத்துலே நாற்பது வருஷத்துக்கு முன்னே காஞ்சி சங்கராசாரியார் வந்து தங்கிப் பூஜை செய்திருக்கிறாரு... அப்போ பார்த்ததைத்தான் சாமியார் சொல்றார் போலேருக்கு'' என்று மணியக்காரர் கூறினார்.

சேயாற்றின் வடகரையில் சப்த கரைகண்டத் தலங்கள் இருப்பது போலவே, அதன் தென்கரையில் 'சப்த கைலாச'ங்கள் என்று அழைக்கப் படும் சிவத்தலங்கள் இருப்பதாக, நார்த்தாம்பூண்டி என்ற கிராமத்தின் கோயில் அறங்காவலர் திரு. ஜி. கணேச நயினார் ஒரு கடிதம் எழுதியிருந் தார். அவற்றையும் நான் தரிசித்து, 'அருணாசல மகிமை'யில் இணைக்க வேண்டும் என்ற தமது விருப்பத்தையும் அவர் தெரிவித்திருந்தார். அதைப் பற்றியும் அன்று பூண்டி சாமியாரிடம் தெரிவித்தேன்.

''நல்லது. போய் வாங்க... பார்த்து எழுதுங்க...'' என்று கூறி ஆசீர்வதித்தார் சாமியார்.

சப்த கைலாசங்களாகக் கருதப்படும் வாசுதேவம்பட்டு, தாமரைப் பாக்கம், நார்த்தாம்பூண்டி, தென் பள்ளிப்பட்டு, பழங்கோயில், காரப் பூண்டி, மண்டகுளத்தூர் முதலிய கிராமங்களுக்கெல்லாம் தாம் போயி ருப்பதாகச் சாமியார் கூறினார். ''எல்லாக் கோயில்களையும் பார்த்திருக் கீங்களா?'' என்று கேட்டதற்கு, ''உள்ளே போறதில்லேய்யா, கட்டடங் களை யெல்லாம் பார்த்துக்கிட்டே போயிடுவேன்'' என்று பதிலளித்தார் சாமியார்.

மணி ஒன்பதுக்கு மேல் ஆகிவிட்டது. நாங்கள் சாமியாரிடம் விடை பெற்றுக் கொண்டு, எதிரிலுள்ள கொட்டகையில் போய்ப் படுத்துக் கொண்டோம். வெளியூர்களிலிருந்து வந்திருந்த ஐந்தாறு பக்தர்கள் அங்கு ஏற்கெனவே இடம் பிடித்து வைத்திருந்தார்கள்.

விடியற்காலை மணி மூன்று ஐம்பத்தெட்டிருக்கும். எனக்கு விழிப்பு வரவே, எழுந்து சாமியார் படுத்திருந்த திண்ணைக்கருகில் போய் நின்றேன். சாமியாரின் கால் அருகில் படுத்திருந்த பூனைக்குட்டி எழுந்து, முதுகை உயர்த்தி, சோம்பல் முறித்து, உடலைச் சிலிர்த்து விட்டு,



ஸ்ரீ பச்சையம்மன் கோயில் (கடலாடி)

முன்கால் நகத்தால் சாமியாரின் காலைப் பிராண்டிற்று. சாமியார் கண்களை லேசாகத் திறந்து பார்த்தார். அடுத்த கணம் எழுந்து உட்கார்ந்து விட்டார். கடிகாரத்தில் அலாரம் அலறியது. மணி சரியாக நான்கு !

பக்கத்திலிருக்கும் டீக்கடைக்காரர் டீ கொண்டு வந்து கொடுத்தார். அதை வாங்கிச் சாமியார் அவருக்கே உரிய பாணியில் அருந்தினார். சுப்பிர மணி பக்கெட்டில் நீர் எடுத்துவந்து, சாமியாரின் முகம், கை, கால்களைச் சுத்தம் செய்து, சட்டையை மாற்றி, மாலைகள் அணிவித்து, திருநீறு பூசி, கற்பூர தீபாராதனை காட்டினார்.

ஒரு பையனுடன் ஓர் அம்மாள் திண்ணையருகில் வந்தாள். அவர்கள் இருவரும் முன்னிரவே வந்து காத்திருந்தவர்கள்.

''சாமீ, பிரார்த்தனை செய்துகிட்டேங்க. இந்தாங்க'' என்று கையி லிருந்த இருபத்தைந்து ரூபாயைச் சாமியாரிடம் நீட்டினார். அவர் அதை வாங்கி வைத்துக் கொண்டார்.

''சாமீ, பையனுக்குப் பி.யு.சி. பெயிலாயிடுச்சு. உத்தியோகத்துக்கு அனுப்பலாமா? இல்லே, ஏதாவது வியாபாரத்திலே வுட்டுடலாமா?'' என்று கேட்டாள் அந்தத் தாய்.

''பதினைஞ்சு நாள் பொறுத்துக்கம்மா... பார்த்துச் செய்யலாம்'' என்று கருணையோடு பதில் கூறினார் சாமியார்.

''சரி, சாமீ! நாங்க போய் வரோம்.''

''நல்லதும்மா... போய் வா...''

விபூதிப் பிரசாதம் பெற்றுக்கொண்டு தாயும் மகனும் நகர்ந்தார்கள்.

மூன்று சிறு பிள்ளைகளுடன், ஓர் ஆசாமி அங்கு காத்திருந்தார். அவ ருக்கும் அவருடைய தகப்பனுக்கும் வீட்டில் ஏதோ தகராறு. அதற்காகக்

கோபித்துக் கொண்டு, மனைவியை அழைத்துக் கொண்டு போய் அவளுடைய பிறந்த வீட்டில் விட்டு விட்டு, குழந்தைகளை மட்டும் தூக்கிக் கொண்டு வெளியே கிளம்பி விட்டார். 'இரண்டு நாட்கள் எங்கெல்லாமோ சுற்றிவிட்டு, மனத்தில் சஞ்சலம் தீராமல் பூண்டி மகானைத் தரிசிக்கலாம் என்று வந்திருந்தார்.

சாமியாரை அணுகித் தனது நிலைமையை எடுத்துக் கூறி, ''இப்போ நான் என்ன செய்யறது, நீயே சொல்லு சாமி'' என்று உரிமையோடு கேட்டார் அவர்.

''வீட்டுக்கே திரும்பிப் போய்யா. மூணு குழந்தைகளை வெச்சுட்டு, நீ எப்படி வேலை செய்வே, எப்படி அதுங்களைக் காப்பாத்துவே? அப்பன் திட்டினு, மகன்தான் சமாதானமா போகணும்... சம்சாரத்தை இட்டுக்கிட்டு பேசாமெ வீட்டுக்குப் போய்யா, என்னு, நான் சொல்றது புரியுதா?''

''சரி சாமி, அப்படியே செய்யறேன்'' என்று விபூதிப் பிரசாதத்தைப் பெற்றுக் கொண்டு, 'திருணுமலை' கோயிலைப் பார்த்துட்டு, தன் கிராமத்திற்குச் செல்வதாகச் சொல்லிவிட்டுச் சென்றார் அவர்.

அன்று நவராத்திரி ஆரம்ப தினம். அம்பிகையின் தவத்திற்காக சேய் முருகப்பெருமான் வரவழைத்த சேயாற்றில் நீராடி விட்டு, சாமியாரிடம் விடை பெற்றுக் கொண்டு பர்வத மலையை வலம் வருவதற்காகப் புறப்பட்டோம்.

பூண்டியிலிருந்து கடலாடி செல்லும் வழியில் இடப்புறம் ஸ்ரீசக்ர மேருவாகத் திருவண்ணாமலை தோற்றம் அளிக்க, வலப்புறத்தில் பர்வத மலை சிவலிங்கமாகக் காட்சி தர, அந்த அற்புத தரிசனத்தை மாறி மாறிக் கண்டு உள்ளம் களி நடம் புரிய, உலக நினைவுகள் மெள்ள மெள்ள மறைய, பேரானந்தமே எங்களைச் சூழ, நாங்கள் மலையடிவாரத்தை நோக்கிப் பயணமானோம்.

மாதிமங்கலத்தில் சிவலிங்கம் போல் காட்சி தரும் மலைச் சிகரம், கடலாடி நோக்கிச் செல்லும் போது நந்திகேச்வரராகக் காட்சி தருகிறது. ஓடி ஒளிந்து, குறைந்து, மறைந்து, உயர்ந்து, ஓங்கி அந்தச் சிகரம் நம்முடன் கண்ணாமூச்சி விளையாடுகிறது. அதிலிருந்து கண்களை அகற்ற முடியாத வண்ணம் கண்கொள்ளாக் காட்சியாக அது நம்மைக் கவர்ந்து, கருத்தை அள்ளிக் கொண்டு போகிறது.

தாமரப்பாக்கம் திருப்பத்துக்கு அருகில், எதிர்ப்புறமாக சைக்கிளில் பூண்டி மணியம் நாகேச்வர ஐயர் எங்கோ வேகமாகப் போய்க் கொண்டிருந்தார். அவரை நிறுத்தி, நாங்கள் வந்த பணியைக் கூறினோம். அவருடைய மகிழ்ச்சிக்கு எல்லையே இல்லை.

''நீங்கள் வீட்டுக்குப் போங்கள். வசூலை முடித்துக் கொண்டு ஒரு நொடியில் வந்து விடுகிறேன்'' என்று கூறிவிட்டுச் சென்றார் அவர்.

வீட்டுக்குச் சென்றதும், திருமதி திரிபுரசுந்தரி நாகேச்வரன் அடக்க முடியாத ஆனந்தத்துடன் எங்களை வரவேற்றார்.

நாங்கள் தர்மலிங்கத்தைத் தேடினேம். அவர் எங்கோ போய்விட்டிருந்தார். கழனிக்குப் போயிருந்த பாண்டுவை வரவழைத்தோம். அவர், துணைக்கு 'குழந்தை' என்பவரை அழைத்து வந்தார். மலையேறும் போது ஒரு 'தாத்தா' வந்தார். மலை சுற்றுவதற்கு ஒரு 'குழந்தை' வந்தார்!

மலையைச் சுற்றுவதற்காக நாங்கள் ஐவரும் புறப்பட்டோம். திரௌபதி அம்மன் கோயிலருகில் வரும்போது மணி சரியாக ஒன்பது அடித்தது. அம்மனுக்குத் தீபாராதனை நடந்து கொண்டிருந்தது. தெருவிலிருந்தபடியே அம்பிகையைத் தரிசித்துக் கொண்டு பயணத்தைத் தொடர்ந்தோம். ஏரிக் கரையருகில் செல்லும்போது இரண்டு பெண்மணிகள் எங்களுடன் சேர்ந்து கொண்டார்கள். இருவரும் மூன்று மைலிலிருக்கும் பட்டியந்தல் என்ற கிராமத்திற்குப் போகிறார்கள்.

''என்ன, மலைக்குப் போறீங்களா?'' என்று கேட்டார் சின்னம்மா.

''இல்லேம்மா... மலையைச் சுற்றி வரப் போகிறோம்'' என்று பதில் அளித்தார் பாண்டு.

''ஐயே, அதுக்கு விடியக் காலையிலேயே புறப்பட்டிருக்கணும். இப்போ புறப்பட்டீங்களே? உச்சி வெய்யில் பேஜாராயிடுமே?''

''என்ன செய்யறது... விடியற்காலையிலேதான் புறப்படணும்னு நினைச்சோம். நேரம் ஆயிடுச்சு'' என்றேன் நான்.

''ஐயா, மலை மேலே ஏறிக் கோயிலெல்லாம் பார்க்கலையா?'' என்று கேட்டார் அம்மாக்கண்ணு.

''பார்த்துட்டேம்மா....''

''ஏஞ்சாமீ...அங்கே கடப்பாரையெல்லாம் தூர தூர இருக்குதாமே! பாவிங்க, சில கடப்பாரைங்களை ஒடைச்சுகிட்டுப் போயிட்டானுங்களாமே...'' என்று கேட்டார் சின்னம்மா.

''ஆமாம் அம்மா... அப்படித்தான் சொன்னாங்க...''



பச்சையம்மன்



மன்னார்சாமி

''நான் ஏர்ற போது சாணுக்குச் சாண் கடப்பாரை இருந்ததுங்க... நான் சின்ன வயசுலே மலேயேறியிருக்கேன். கோயில்லேயிருந்த கங்காளம், குடம் எல்லாத்தையும் திருடிக்கிட்டுப் போயிட்டாங்களாமே... கோபுரத்து மேலே இருந்த செப்புக் கலசத்தைக் கூட எடுத்துக்கிட்டுப் போயிட்டாங்களாம்... இது என்னடி அக்ரமம்... பாவிங்க!''

''என்ன பண்றதும்மா... உலகத்திலே எல்லாருக்குமா பக்தியிருக்கு? சாமி சொத்தைத் திருடியாவது வயத்தை நிரப்பறத்திலேதான் சுகம் இருக்குன்னு நினைக்கிறவங்களும் இருக்காங்களே...''

''நான் சொல்றேன் கேளுங்கய்யா, அவங்களை யெல்லாம் பர்வத ராஜன் சும்மா வுட மாட்டாரு. நீங்க மலேயேறிட்டு, மலையையும் சுத்த றீங்க... ரொம்பப் புண்ணியம். இது 'திருணாமலே' சுத்தறதோட ஒசத்தி தெரியுமா? அங்கே ஒரு அடிக்கு ஒரு லிங்கம். இங்கே ஒரு பிடிக்கு ஒரு லிங்கம்...'' என்றார் சின்னம்மா பெருமையுடன்.

திருவண்ணாமலேச் சுற்றுப் பாதை சுமார் ஒன்பது மைல். பர்வத மலேச் சுற்றுப் பாதை சுமார் பதினைந்து மைல். திருவண்ணாமலேயைச் சுற்றிலும் நல்ல பாதை இருக்கிறது. பர்வத மலேயைச் சுற்றிச் சரியான பாதையே கிடையாது. வயல், வரப்புக்களிலும், சுடுமணல் ஓடையிலும், கல்லிலும் முள்ளிலும் அவதிப்பட்டுக் கொண்டுதான் நடந்தாக வேண்டும். முன்பு நல்ல பாதை இருந்ததாம். அந்தப் பாதையில்தான் மார்கழி மாதம் முதல் நாளன்று மாதிமங்கலம் ஈச்வரன், மலே வலம் வருவது வழக்கமாம். இப்போது பாதை பெரும்பாலும் விளை நிலங்களாக மாறி விட்டன. அங்கே நிலக் கடலே பயிர் ஆகிறது. மார்கழி மாதத்திற்குள், கடலேயை அறுத்து, வேலிகளை அகற்றி, சுவாமி போவதற்கு வழி ஏற்படுத்தித் தந்து விடுவார்களாம்!

நல்ல வேளையாகச் சின்னம்மாவின் துணையும் ஆலோசனையும் கிடைக்காமலிருந்தால் நாங்கள் ஊரெல்லாம் சுற்றிக் கொண்டு போய்த் திண்டாடி யிருப்போம்.

''நீங்க ஏரியைச் சுத்திக்கிட்டுப் போனீங்கன்னு ரொம்ப நடக்க வேண்டி யிருக்கும்! அநாவசியச் சுத்துங்க! அதுவும் இந்த வெய்யில்லே வெந்து போயிடுவீங்க. எங்களோடேயே வாங்க. நாங்க பட்டீந்தல் வரைக்கும் போறோம். பேசிக்கிட்டே போவோம்'' என்று சின்னம்மா கூறவே, எல்லோரும் பேசிக் கொண்டே நடந்தோம்.

''அதோ தெரியுது பாருங்க, அதான் பச்சையம்மா கோயில்'' என்றார் பாண்டு.

''மாதிமங்கலத்திலே ஒரு பச்சையம்மன் கோயில் இருப்பதாகச் சொன்னீங்களே?''

''ஆமாங்க.... அது மலேக்குக் கிழக்குப் பக்கத்திலே இருக்குங்க. இது மேற்குப் பக்கம் இருக்குது. இந்த இடமும் கடலாடியைச் சேர்ந்ததுதான்'' என்றார் பாண்டு.

நாங்கள் பச்சையம்மன் கோயிலுக்குள் சென்றோம்.

பர்வத மலையைப் பற்றி நான் முதன் முதலில் பேசிய போது, பூண்டி மகான் 'பச்சையம்மன் கோயில்' என்று கூறியது அப்போது என் நினைவுக்கு வந்தது.

வெளியில் பிரம்மாண்ட அளவில் சப்த முனிகள் வீற்றிருக்கிறார்கள். உள்ளே பச்சையம்மன் சிலையும், வலப்புறம் சிவலிங்கமும், இடப்புறம் விநாயகரும் எழுந்தருளி யிருக்கிறார்கள். அங்கே திரிசூலம் இருக்கிறது.

மன்னார்சாமி — நந்திகேச்வரர் ஒருபுறமும், திருமால்—லட்சுமி மறுபுறமும் காட்சி தருகிறார்கள்.

வள்ளி தெய்வயானையுடன் ஆறுமுகரின் உருவச்சிலையும், பக்கத்தில் பராசக்தியின் திருவுருவமும் காணப்படுகின்றன.

கருவறையின் இடப்புறக் கோடியில் இருக்கும் முனிவர் சிலையைப் 'பிருங்கி ரிஷி' என்று கூறினார் பூசாரி. அக் கோயிலில் ஆடி மாதம் சிறப்பாக உற்சவம் நடைபெறுகிறதாம்.

பச்சையம்மன் கோயிலிலிருந்து புறப்பட்டு, ஓடை மணலில் இறங்கி நடந்தோம். சின்னம்மா பேச்சுக் கொடுத்தார்.

''சாமி, பர்வத மலைக்கு மொத்தம் ஏழு சடைங்க. அத்தனையும் சுத்திக்கிட்டு நீங்க போகணும். சாப்பாட்டுக்கு என்ன செய்யப் போறீங்க?''

''ஏதோ, பழம், ரொட்டி, பிஸ்கட் எல்லாம் வெச்சிருக்கேம்மா.''

''அதெல்லாம் போதுமாங்க...?நம்ம வூட்டுக்கு வந்துட்டுப் போங்க. சோறாக்கிப் போடறோம்.''

''பரவாயில்லே. இருக்கட்டும்மா!''

''சாமி, நாங்க அப்படி ஒண்ணும் திண்டப்படாதவங்க இல்லீங்க. அதுக்காக ரோசனை பண்ணாதீங்க.''

''அதுக்குச் சொல்லலேம்மா... நாங்களே நேரம் கழிச்சுக் கிளம்பி யிருக்கோம். வழியெல்லாம் தங்கித் தங்கிப் போனா ரொம்ப நேரமா யிடுமே... அதுக்காகத்தான் சொல்றேன்.''

''சாமி, நாங்க ஏழைப்பட்டவங்கதான் ... சின்ன வீடுதான். வந்துட்டுப் போனீங்கன்னா எங்க மனசுக்கு ரொம்பச் சந்தோஷமா யிருக்கும்.''

கிராம மக்களின் வெள்ளை உள்ளத்திற்கும், களங்கமில்லாப் பேச்சுக் கும் அடிமையாகாதவர்களும் உண்டோ?

''அம்மா, நீங்க சின்ன வீட்டிலே இருந்துகிட்டுப் பெரிய மனசோட இருக்கீங்க... சில பேர் பெரிய வீட்டுலே இருந்துகிட்டு சின்ன மனசோட இருக்காங்க. நீங்க எங்களை இவ்வளவு அன்பா அழைக்கிறீங்களே, அது லேயே எங்க வயிறு நிரம்பிப் போச்சம்மா...'' என்றேன் நான். தெய்வத் தின் கருணையை ஏழைகளின் மாசற்ற அன்பிலே காண முடிகிறது.

''சாமி! அதோ தெரியுது பாருங்க தென்னந் தோப்பு. அதுதான் எங்க கிராமம். அங்கே வந்து கொஞ்சம் இளநீராவது குடிச்சுட்டுப் போங்க. அப்போதான் எங்க மனசு குளிர்ந்து போகும். மறுக்காதீங்க

ஐயா, வெய்யில் நேரம். ரொம்பக் களைப்பா யிருக்கும். ஒரு நடையைப் பார்க்காம வந்துட்டுப் போங்க...''—பெற்ற தாயைப் போல் பரிவுடன் அழைத்தார் சின்னம்மா. அம்மாக்கண்ணும் சேர்ந்து கொண்டார். 'ஆமாங்க. நம்ம மரத்திலேருந்தும் நாலு காய் வெட்டிப் போடச் சொல்றேன். குடிச்சுட்டுப் போங்க.''

நாங்கள் யோசித்துப் பார்த்தோம். இந்தத் தூய்மையான விருந்தோம்பலை நிராகரிப்பது மகா பாவம் என்று தோன்றியது. அவர்கள் வழி காட்ட, வரப்பு மேல் மெல்ல நடந்து பட்டியந்தல் ருக்கிராமத்தை அடைந்தோம்.

போதும் போதும் என்று நாங்கள் கெஞ்சிக் கேட்டுக் கொள்ளும் வரையில் இளநீரை வெட்டிப் போட்டார்கள். அவர்களின் உள்ளத்தைப் போலவே அதுவும் கற்கண்டாக இனித்தது. எங்களிடமிருந்த புட்டியிலும் நிரப்பிக் கொடுத்தார்கள்.

எங்களுக்கு விடை கொடுத்து அனுப்பும் போது அவர்கள் கண்கள் கலங்கி விட்டன. விடை பெற்ற எங்கள் கண்களிலும் நீர் முட்டி நின்றது.

''சாமீ! எங்களை மறந்துடாதீங்க. இந்தப் பக்கம் மறுபடியும் வந்தா, வீட்டுக்கு வந்து போங்க.''

''ஆகட்டும் அம்மா... உங்களை எங்களாலே மறக்கவே முடியாது.''

பாண்டுவிடம் சின்னம்மா மெல்லிய குரலில் கூறினார்: ''இவங்களை சாக்கிரதையா அழைச்சுக்கிட்டுப் போப்பா. காட்டுலே நடந்து பழக்க மில்லாதவங்க, பாவம்! போற வழியிலே எங்கேயாவது நிழல் இருந்தா கொஞ்ச நேரம் ஒதுங்கிட்டுப் போங்க'' என்றார்.

அவர்கள் யாரோ, நாங்கள் யாரோ! வழிப் பயணிகளாக வந்தவர்கள், வாழ்க்கையில் மறக்க முடியாதவர்களாக ஒன்றிப் போய் விட்டார்கள். பயன் கருதாத இந்தப் பேரன்புக்குப் பெயர் என்ன? முன்பின் அறியாதவர்களின் உள்ளங்கள் தேடிக் கொண்ட இந்த உறவுக்குப் பொருள்தான் என்ன?

பர்வத மலைச் சிகரத்தைப் போன்று உயர்ந்துள்ள இவ்விரு பெண் மணிகளின் உள்ளங்களைப் பற்றிச் சிந்தித்துக் கொண்டே நடந்து சென்றோம். சுந்தரமும் பாபுவும், பர்வத மலைச் சிகரம் ஒரு மைலுக்கு ஒரு தோற்றமாக மாறிக் கொண்டு வந்த விந்தையை அதிசய உணர்வோடு ரசித்து, கலையுணர்வோடு போட்டி போட்டுக் கொண்டு படமாக்கினர்.

செல்லும் பாதையில் இங்கொன்றும் அங்கொன்றுமாக கருங்கல் மண்டபங்கள் தென்பட்டன. அவை பெரும்பாலும் பாழடைந்திருந்தன.

ஒரு காலத்தில் சுவாமி வலம் வரும் பாதையில் நூற்றுக்கு அதிகமான மண்டபங்கள் இருந்தனவாம். பக்தர்கள் தங்கி இளைப்பாறவும், சுவாமி எழுந்தருளவும் அக் காலத்தில் நல்லிதயம் படைத்தவர்கள் கட்டி வைத்திருந்த அம் மண்டபங்கள், காலவெள்ளத்தில் கரைந்து போயிருக்கின்றன. இடிந்து போய், சின்னாபின்னமாகியிருந்த ஒரு மண்டபத்தில் வீரபத்திரர் சிலை மட்டும் இருந்தது.



பர்வத மலையைச் சுற்றி வரும் போது ....

பர்வத மலைக்கு வட மேற்கில் வெள்ளந்தாங்கி என்ற ஓர் இடம் இருக்கிறது. அங்கிருக்கும் வெள்ளந்தாங்கீச்வரர் கோயில், தற்போது கீலமாய்ப் போயிருக்கிறது. அந்த இடத்தில் சலாவதி ஆறும் யோகவதி ஆறும் கலந்து மிருகண்டு நதியாக மாறி, எலத்தூர் என்ற இடத்தில் சேயாற்றில் கலக்கிறது.

படித்தறிந்திருந்த இந்த இடத்தைக் கண்ணால் காண வேண்டும் என்ற என் ஆவலைக் கேட்டவரம்பாளையத்தில் ஓர் அன்பரிடம் நான் வெளியிட்டபோது, மலையை வலம் வரும் வழியில்தான் வெள்ளந்தாங்கி இருப்பதாகவும், அப்போது அத்திருத்தலத்தைத் தரிசிக்கலாம் என்றும் கூறினார். எனவே, பட்டியந்தலை விட்டுக் கிளம்பியது முதல் வெள்ளந் தாங்கியைப் பற்றியே விசாரித்துக் கொண்டிருந்தேன் நான்.

மணி பன்னிரண்டுக்கு மேலாகிவிட்டது. நாங்கள் பாதி தூரம்தான் நடந்திருந்தோம். சூரியன் கடுமையாகத் தாக்கினான். மலையடிவாரத்தில் முட் புதர்க்கிடையில் நடந்து கொண்டிருந்த எங்களைத் தவிர அந்தக் காட்டுப் பகுதியில் வேறு ஒருவருமேயில்லை. இடப்புறமுள்ள ஐம்பு

மலையையும், அதற்குப் பின்னுல் இருக்கும் ஜவ்வாது மலையையும், வலப் புறமுள்ள பர்வத மலையையும், மாறி மாறிப் பார்த்துக் கொண்டு, வலம் வந்து கொண்டிருந்தோம்.

நாங்கள் சென்றது மிகக் குறுகிய காட்டுப் பாதை. வழியில் யாரோ முட்செடிகளை வெட்டிப் போட்டு வைத்திருந்தார்கள். முன்னுல் சென்ற 'குழந்தை' அதையெல்லாம் விலக்கி விட்டுக் கொண்டு போக, நாங்கள் மிக ஜாக்கிரதையாக, அடிமேல் அடிவைத்து, நிதானமாக நடந்து கொண்டிருந்தோம். எங்கள் வேகத்தை எத்தனைதான் குறைத்துக் கொண்டாலும், பாபு எங்களுடன் சேர்ந்து வருவதாகக் காணும். அடிக் கடி அவர் எங்கள் கண்களிலிருந்து மறைந்து விடுவதால், திரும்பித் திரும் பிப் பார்த்துக் கொண்டே நடக்க வேண்டியிருந்தது. சில சமயங்களில் நின்று 'பாபு'...என்று குரல் எழுப்புவோம். அவர் பதில் குரல் கொடுத்த பிறகுதான் மேலே நடப்போம்.

தாகம் எடுத்தபோதெல்லாம் ஒரு வாய் இளநீரைப் பருகினேம். வெம்மையால் உடலெல்லாம் எரிந்தது. வீசிய காற்றும் அனலாய்ச் சுட் டது. வெள்ளந்தாங்கீச்வரர் கோயில் வந்தாலும் சற்று இளைப்பாறலாம். இன்னும் எவ்வளவு தூரம் போக வேண்டும் என்ற 'ஐடியா'வும் ஒருவருக்குமில்லை.

ஒரு சிற்ருறு தென்பட்டது. எங்கோ பெய்த மழையால் அதில் கொஞ்சம் தண்ணீர் ஓடிக் கொண்டிருந்தது. கரையிலிருந்த ஒரு மரத்தடியில் ஓர் ஆசாமி படுத்துக் கொண்டிருந்தார்.

''ஐயா, இது என்ன நதி?'' என்று கேட்டேன்.

''வண்ணுத்தி ஆறு'' என்ருர் அவர், கண்களைத் திறக்காமலே.

''வெள்ளந்தாங்கீச்வரர் கோயில் எங்கிருக்கிறது?'' என்று அவரிடம் கேட்டேன்.

''அது இன்னும் போவணும்.''

''எத்தனை தூரம் இருக்கும்?''

''போய்க்கினே இருங்க...வரும்'' என்று கூறிவிட்டு, துணியை எடுத்துத் தலையை நன்ருக மூடிக் கொண்டு விட்டார் அந்த ஆசாமி. 'கேள்விகள் கேட்டு என்னைத் தொந்தரவு செய்யாதீர்கள்' என்று குறிப்பால் உணர்த்தி விட்டார்.

எங்களுக்கு ஆத்திரம் ஆத்திரமாக வந்தது. உடல் எரிச்சல் அதிக மாயிற்று. ஆற்றின் ஓரமாக, கொஞ்சம் நீர் ஓடிக் கொண்டிருந்தது. அது கங்கையின் பிரவாகம் போல் எங்களுக்குத் தோன்றியது. நானும் சுந்தர மும் ஓடிப் போய், அந்த நீரில் விழுந்தோம். உடல் பற்றி எரிந்தது. மணலின் மேற்பரப்பில் நிதானமாக ஓடிக் கொண்டிருந்த அந்த நீர் வெந்நீராகக் கொதித்துக் கொண்டிருந்தது!

அந்தச் சூட்டிலும் ஒரு சுகம் இருக்கவே, படுத்துக்கொண்டே சற்று நேரம் இளைப்பாறி விட்டு கிரிவலத்தைத் தொடர்ந்தோம். ஒரு மணி

நேரம் மீண்டும் கல்லிலும் முள்ளிலும் நடந்த பிறகு, பாலைவனத்தில் பசுஞ் சோலையைப் பார்ப்பது போல், எங்களுக்கு வெள்ளந்தாங்கீச்வரர் ஆலயம் தரிசனம் ஆயிற்று. எங்கள் பாதையைவிட்டுச் சற்று விலகி, வயல்களிலும் வரப்புகளிலும் நடந்து, ஆலயத்தை அடைந்தோம்.

அது புராணப் பெருமை மிக்க திருத்தலம். மார்க்கண்டேயரின் தந்தை மிருகண்டு ரிஷி அங்கு தவமிருந்ததாகக் கூறப்படுகிறது. எனவே தான், கோயிலை ஒட்டினாற்போல் இரண்டு சிற்றாறுகள் ஒன்று கலந்து அங்கிருந்து 'மிருகண்டு' என்ற பெயர் தாங்கி ஓடுகிறது.

தற்போது அது ஓர் ஆலயமாக இல்லை. அழிவுச் சின்னமாக இருக்கிறது. ஒரு காலத்தில் ஒளிபெற்று விளங்கிய கோயில், காலதேவனின் கொடுங்கோல் ஆட்சியில் சின்னாபின்னமாகி, கவனிப்பாரற்று, அநாதைக் கோலத்தில் இருப்பதைக் காணும்போது நெஞ்சு சுக்குநூறாக வெடிக்கிறது.

அங்கு சந்நிதி மண்டபங்கள் இருக்கின்றன. ஆனால், தெய்வச் சிலைகள் ஒன்றையுமே காணோம். உள்ளே சிவலிங்கமாவது இருக்கிறதா என்று பார்ப்பதற்காக இருட்டு மண்டபத்திற்குள் மெள்ள காலடி எடுத்து வைத்தோம். அங்கு பயங்கர இருள் சூழ்ந்திருந்தது. எங்களுடைய குரல்கள் கேட்டனவே தவிர, யார் எங்கிருக்கிறோம் என்பது கூட சரியாகத் தெரியவில்லை. கருவறை எந்தப் பக்கம் இருக்கிறது என்பதைக் கண்டு பிடிக்கவே சற்று நேரம் பிடித்தது.

எங்களுக்காகவே வைக்கப்பட்டிருந்ததுபோல ஒரு மூலையில் தென்னை ஓலைகள் கிடந்தன. அதை யெல்லாம் கருவறைக்கு நேரே எடுத்துப் போட்டுக் கொளுத்தினோம். அந்த வெளிச்சத்தில் வெள்ளந்தாங்கீச்வரர் காட்சி தந்தார். பெரிய சிவலிங்கம். ஒரு காலத்தில் அபிஷேக, அலங்கார, நைவேத்திய பூஜைகளை ஏற்றுக் கொண்ட முக்கண்ணன், எவ்வித ஆடம்பரமுமின்றி, முற்றும் துறந்த முனிவராக, தனிமையில் தவமியற்றிக் கொண்டிருந்தார்!

ஒருவர் கண்ணிலும் படாமல் ஒதுங்கியிருந்த ஈச்வரனைத் தரிசித்து விட்ட மகிழ்ச்சியுடன் வெளியே வந்தோம். அங்கு ஒரு சிறுவன் நின்று கொண்டிருந்தான்.

''சாமீ, உள்ளே ஒரு குகை இருக்குதுங்க. அது சுரங்கப் பாதை. இங்கேயிருந்து மலை மேலே இருக்கும் பாதாள சுனைக்குப் போகலாம்'' என்றான் அச் சிறுவன் உற்சாகத்துடன்.

''உனக்கு எப்படிடா தெரியும்? நீ பார்த்திருக்கிறாயா?''

ஸ்ரீ வெள்ளந்தாங்கீச்வரர் ஆலயம்



''நான் பார்த்தது இல்லீங்க. பெரியவங்க சொல்லுவாங்க ... ஆனு, சிவலிங்கத்துக்குப் பக்கத்திலே ஒரு பெரிய வண்டு இருந்ததுங்க. அங்கே யாராவது போனு அது துரத்தியடிச்சுடும், நான் பார்த்திருக்கேன்.''

''இப்பவும் அந்த வண்டு அங்கே இருக்குதா?''

''இப்போ இல்லீங்க. அது எங்கேயோ ஓடிப் போயிடுச்சு...''

ஒரே சிகரம் —

தங்கள் ஊர்க் கோயிலைப் பற்றித் தாங்கள் கேள்விப்பட்டதையும் தங்களுக்குத் தெரிந்ததையும் சொல்லி விட வேண்டும் என்று எல்லோருக்கும் ஓர் ஆசை.

வடக்கேயுள்ள நுழைவாயில் மண்டபத்தில் சற்று நேரம் அமர்ந்திருந்தோம். மாமுனிவர்கள் வாழ்ந்த புனித மண்ணை மிதிக்கவும் அங்கு சற்று நேரம் தங்கியிருக்கவும் கொடுத்து வைத்திருக்க வேண்டாமா?

அந்தக் கோயிலிலிருந்து பர்வத மலை தரிசனம் பிரமாதமாக இருக்கிறது. எதிரில் ஓடும் நதியையும், அதன் அழகிய படித் துறையையும், பச்சைப் பசேலென்ற வயல்களையும், நிமிர்ந்து நிற்கும் மலைச் சிகரத்தையும் பார்த்துக் கொண்டிருப்பதே பெரும் ஆன்மிக அனுபவமாக இருக்கிறது. தியானத்தில் அமர்ந்து, ஆழ்ந்த அமைதியில் நிலைப்பதற்கு எல்லாவகையிலும் ஏற்ற இடமாக இருக்கிறது அது.

உள்ளூர் அன்பர் ஒருவர் தந்த குளிர்ந்த நீரை அருந்தி விட்டு, அங்கிருந்து புறப்பட்டோம். மணி இரண்டரை ஆகி விட்டது.

இன்னும் நாலைந்து மைல்கள் போனல் மாதிமங்கலம் பச்சையம்மன் கோயில் வரும். அதுவரை தங்குவதற்கு நிழல்கூடக் கிடைக்கப் போவதில்லை; கண்ணுக்கெட்டியவரையில் ஒரு மரத்தைக்கூடக் காணேம்!

ஒரு மணி நேரம் நடந்திருப்போம். ஆகா! இதென்ன அதிசயம்! இது உண்மைதானு? அல்லது கண் ஏமாற்றுகிறதா? திடீரென்று ஒரு புளிய மரம் கண்ணுக்குத் தெரிந்தது! அதை அடுத்து ஒரு துரவுக் கிணறு. அதற்குப் பக்கத்தில் ஒரு குடிசை.

''இன்னும் அரை மணி நேரம் இங்கேதான் ரெஸ்ட். எல்லோரும் துண்டை விரித்துப் படுப்போம்'' என்று நான் கூறி முடிப்பதற்குள் எல்லோரும் படுத்து விட்டார்கள்!

சிறிது நேரம் தரையில் புரண்டு விட்டு மறுபடியும் புறப்பட்டோம். ஒரு மணி நடந்த பிறகு ஒரு குளம் கண்ணில் பட்டது. அதில் இறங்கி அமிழ்ந்து குளித்தோம். மேலேயிருந்த நீர் 'வெதவெத'வென்றிருந்தது. கீழே ஜில்லென்றிருந்தது. அதிக ஆழமில்லை. ஆசை தீரும் மட்டும் அந் நீரில் அமர்ந்திருந்துவிட்டு, துவட்டிக்கொண்டு, உடைகளை மாற்றிக் கொண்டு, நீறு பூசி, மாதிமங்கலம் பச்சையம்மன் கோயிலுக்குச் சென்று தரிசித்தோம்.



பலவிதத் தோற்றங்கள்



மலையேறி மல்லிகார்ஜுன சுவாமியைத் தரிசிக்கச் செல்லும் மக்கள்பச்சையம்மனைத் தரிசித்து விட்டே போகிறார்கள். சக்தியின் துணையோடு சென்றால் சிவதரிசனம் எளிதாகி விடுகிறது.

மலையடிவாரத்தில், காட்டுக்குள் வீரபத்திர சுவாமி கோயில் இருப்பதாகக் கூறினார்கள். நேரம் ஆகிவிட்டதாலும், கால்கள் கெஞ்சியதாலும், நாங்கள் அங்கு செல்லாமலே வீட்டுக்குத் திரும்பும்படியாகி விட்டது.



மறுநாட் காலை புறப்பட்டு, மாலைக்குள் சேயாற்றின் தென்கரையில் அமைந்திருக்கும் 'சப்த கைலாசங்கள்' என்ற ஏழு சிவத் தலங்களையும் தரிசிப்பது என்று முடிவு செய்தோம். எங்கள் எண்ணத்தை நாகேச்வர ஐயரிடம் தெரிவித்தோம். அவர் உடனே ஒரு காகிதத்தை எடுத்து அந்த ஏழு கிராமங்களும் எங்கெங்கே இருக்கின்றன என்பதை வரைபடமாகத் தீட்டி எங்களிடம் காட்டினார்.



காலை ஆறரை மணிக்கெல்லாம் நாங்கள் 'ஆலய தரிச'னத்திற்குத் தயாராகி விட்டோம். முதலில், கடலாடிக்கும் மாதிமங்கலத்திற்கும் இடையில் இரண்டாவது மைலில் சேயாற்றைக் கடந்து, அக்கரையில் இருக்கும் தாமரப்பாக்கத்திற்குச் சென்றோம். அது செங்கம் தாலுக்காவில் அடங்கியுள்ள ஒரு சிறு கிராமம்.

தாமரப்பாக்கம் ஆலயத்தின் பிராகார மதிற்சுவர்கள் இடிந்து போயிருக்கின்றன. கருங்கல் மண்டபத்திற்குள் அக்னீச்வரரும் திரிபுரசுந்தரியும் கிழக்கு நோக்கி எழுந்தருளியிருக்கிறார்கள். கோஷ்ட தேவதைகளான கணபதி, தட்சிணாமூர்த்தி, லிங்கோற்பவர், பிரும்மா, துர்க்கை முதலியோர் பின்னமாகாமல் கலையெழிலுடன் காட்சி



தருகிறார்கள். வெளிப் பிராகாரத்தில், தெய்வங்களின் உருவச் சிலைகள் பின்னமான நிலையில் அங்கங்கே காணப்படுகின்றன. அக் கோயிலில் தற்போது இரண்டு கால பூஜைகள் நடைபெற்று வருகின்றன.

அடுத்து, வாசுதேவம்பட்டு என்ற கிராமத்திற்குச் சென்றோம். கடலாடியில் இருந்து புறப்பட்டு, காஞ்சி கிராமத்தைக் கடந்து, 'பெரிய குளம்' கிராமத்தை அடுத்து வலப்புறமுள்ள குறுக்குப் பாதையில் திரும்பினோம். அந்தப் பாதை போகப் போக மிகவும் மோசமாகி விட்டது.

பழநி, வயலில் காரை இறக்கி, வரப்பில் ஏற்றி, எப்படியோ சாமர்த்தியமாக எங்களைத் தார் ரோட்டில் கொண்டு வந்து சேர்த்து விட்டார். அது திருவண்ணாமலையிலிருந்து செங்கம் செல்லும் பஸ் பாதை. அதில் மேற்கே சென்றால், செங்கத்திற்கு முன்பே, பத்தாவது மைலில் பாய்ச்சல் என்ற சிற்றூர் வருகிறது. பாய்ச்சலிலிருந்து வாசுதேவம்பட்டுக்குப் போக நாங்கள் வடக்கே திரும்பியாக வேண்டும். அந்தச் சந்திப்பில் ஓரிருவர் நின்று கொண்டிருந்தனர். அதில் ஒருவர் ''சாமீ, எங்கே போகணும்'' என்றார் நாகேச்வரனைப் பார்த்து.

''வாசுதேவம்பட்டுக்கு இந்த வழியாகத்தானே போகணும்?'' என்று கேட்டார் அவர்.

''ஆமா ... ஆனா, ப்ளஷர் போவாதுங்க. ஜீப்புதான் போகும் ...... பாதை ரொம்ப மோசம்...'' என்றார் அவர்.

''கொஞ்ச தூரம் கூடப் போக முடியாதா?''

''இரண்டு மைல் போகலாம். அப்புறம் இரண்டு மைல் நடந்துதான் போகணும்...''

'கைலாச நாதா, இதென்ன சோதனை?' என்று நினைத்துக் கொண்டேன் நான். நாகேச்வரன் வாயைத் திறக்கவில்லை. ''போய்த்தான் பார்ப்போமே'' என்றார் சுந்தரம். ''துணைக்கு பர்வதநாதர் இருக்கார், சும்மா காரை விடு, பார்க்கலாம்'' என்றார் பாபு. 'இப்போ நாம் வந்த பாதையை விடவா மோசமா இருக்கப் போவுது? பார்த்துடறேன் ஒரு கை' என்ற நம்பிக்கையோடு காரை ஸ்டார்ட் பண்ணினார் பழநி.

நாங்கள் சென்றது பாதையேயல்ல. வழி நெடுகிலும் முட்புதர்கள், பாறைகள், பள்ளங்கள். பாவம், வழியெல்லாம் பட்ட அடிகளைத் தாங்கிக் கொண்டு, கடமை தவறாத வீரனாக எங்கள் கார், எங்களை வாசுதேவம் பட்டில் கொண்டு போய்ச் சேர்த்துவிட்டு, பெருமூச்சு விட்டுக் கொண்டே ஓய்வெடுத்துக் கொள்ள ஒரு மரத்தடியில் நின்றது. நாங்கள் ஆலயத்தினுள் சென்றோம்.

தாமரப்பாக்கத்திலிருப்பது போல் அன்றி, இந்தக் கோயிலில் மதிற் சுவர்கள் பழுதடையாமல் இருக்கின்றன. மண்டபங்களும் விமானங்களும் நேர்த்தியாக இருக்கின்றன. சுவாமியின் திருநாமம் பக்தவத்சலேச்வரர். ஆட்கொண்டேச்வரர் என்றும் அழைக்கிறார்கள். அம்பிகையின் திருநாமம் சௌந்தரநாயகி என்ற அழகம்மை. இருவரும் கிழக்கு நோக்கி சந்நிதி கொண்டிருக்கின்றனர்.

மகா மண்டபத்தில் சப்த கன்னிகைகளும், அந்த்ராளத்தில் நால்வரும் எழுந்தருளி யிருக்கின்றனர்.

கருவறை மண்டபத்தின் வெளிப் புறச் சுவரிலிருக்கும் கோஷ்ட தட்சிணுமூர்த்திக்குத் தனிச் சந்நிதி அமைத்திருக்கிருர்கள்.

வெளிப் பிராகாரத்தில் கிழக்கு நோக்கி விநாயகருக்கும், ஆறுமுகருக்கும் தனித்தனி சந்நிதிகள் இருக்கின்றன. இக் கோயிலில் பங்குனி உத்திரமும், ஆனித் திருமஞ்சனமும் விசேஷமாகக் கொண்டாடப் படுவதாக அறிந்தேன்.

அந்த ஊரை ஒரு காலத்தில் வாசுதேவராஜா என்பவர் ஆண்டிருக்கிருர். அதன் அடையாளமாகத் தற்போது அங்கு ஓர் இடிந்த கோட்டை இருக்கிறது. அருகில் எட்டடி உயரத்தில் ஸ்ரீ வீராஞ்சநேயரின் உருவச் சிலேயும் இருக்கிறது.

அந்த ஊரின் பெருமையைப் பற்றிக் கூறிய ஓர் அன்பர், 'காசியை விட வீசம் ஒசத்தி வாசநகர்' என்ற முதுமொழியை எங்களுக்கு நினைவு படுத்தினுர்.

கலசபாக்கம் பூண்டியிலிருந்து சேயாற்றைக் கடந்து வந்தால் மூன்ருவது மைலில்' இருக்கிறது நார்த்தாம்பூண்டி கிராமம். ஆனுல், பஸ் ரோடு வழியாகச் சுற்றிக் கொண்டு வந்தால் எட்டு மைல்கள் ஆகும். நாங்கள் திருவண்ணுமலேயிலிருந்து போளூர் செல்லும் பாதை வழியாக வந்து நாயுடுமங்கலம் கிளை வழியில் மேற்கே திரும்பி, மூன்று மைலில் உள்ள நார்த்தாம்பூண்டியை அடைந்தோம்.

தட்சனுல் சபிக்கப்பட்ட நாரத முனிவர், கைலாசத்திற்குச் சென்று சிவபெருமானிடம் முறையிட, ஈச்வரன் அவரைப் பூலோகத்திற்குச் சென்று, திருவண்ணுமலேக்கு வடப்புறத்திலும், சேயாற்றின் தென் கரையிலும் உள்ள ஓர் இலந்தை மரத்தடியில் தம்மைக் குறித்துத் தவம் இருக்கும்படிக் கூறியதாகவும், பின்னர் அங்கு சுவாமி லிங்க உருவில் அவருக்குக் காட்சியளித்ததாகவும், நாரதரே கைலாசநாதருக்கு அங்கு ஓர் ஆலயம் எழுப்பிப் பூஜித்ததாகவும் தலபுராண வரலாறு கூறுகிறது.

நாரதர் தவம் இயற்றியதால், அது நாரதர் பூண்டியென அழைக்கப் பட்டு, நாளடைவில் அது நாரதபூண்டியாகி பின்னர் நார்த்தாம்பூண்டி என்று மருவியிருக்கலாம். அல்லது நாரதர் நற்றவம் இயற்றியதால், அத் தலம் 'நற்றவம்பூண்டி'யாகி, நார்த்தாம்பூண்டியாகவும் பெயர் மாறி யிருக்கக் கூடும்.

சப்த கைலாசத் தலங்களில் நார்த்தாம்பூண்டி ஆலயம்தான் மிகவும் பெரியதாக இருக்கிறது. அங்குதான் சுவாமிக்குக் கைலாசநாதர் என்ற திருநாமமும் விளங்குகிறது. அம்பிகை பிரஹந்நாயகியாகத் திகழ்கிருள்.

கோஷ்ட கணபதிக்கும் தட்சிணுமூர்த்திக்கும் தனிச் சந்நிதிகள் இருக்கின்றன. வெளிப் பிராகாரத்தில் கிழக்கு நோக்கி விநாயகர், ஸ்ரீ வேணு கோபாலன், ஆறுமுகர் மூவரும் எழுந்தருளியிருக்கிருர்கள்.

வடமேற்கு மூலையில் ஓர் இலந்தை மரம் இருக்கிறது. அதனடியில் ஒரு சிவலிங்கமும், அதனருகில் ஒரு முனிவரின் உருவச் சிலையும் காணப் படுகின்றன. ''இதுதான் நாரதர். இந்த இலந்தை மரத்தினடியில் தான் அவர் சிவபெருமானைக் குறித்துத் தவம் இருந்தார்'' என்று கூறினர் ஆலய அறங்காவலர் திரு கணேச நயினர்.

மகா மண்டபத்தின் தென் மேற்கே ஐந்தடி உயரமுள்ள ஒரு பெரிய லிங்கம் இருக்கிறது. அதைக் காசிலிங்கம் என்கிறார்கள்.

அம்மன் சந்நிதி மண்டபத்தில் நவக்கிரகங்கள் இருக்கின்றன.

இக் கோயிலில் கிருத்திகைத் திருவிழாவும் மாசி மக தீர்த்தவாரியும் சிறப்பாக நடைபெற்று வருவதாகவும், பிரம்மோற்சவம் நடை பெறுவ தில்லை என்றும் அறிந்தேன். அன்றாட பூஜைகள் ஒழுங்காக நடைபெறு கின்றன.

நார்த்தாம்பூண்டியிலிருந்து மீண்டும் திருவண்ணாமலை—போளூர் சாலைக்கு வந்து, மோட்டுப்பாளையம் கிளை வழியில் திரும்பி தென்பள்ளிப் பட்டு கிராமத்தை அடைந்தோம். அங்குள்ள கோயில் சிலமடைந்து, பூஜையற்றுக் கிடக்கிறது. மதிற்சுவர்கள் எல்லாம் இடிந்து தரைமட்ட மாகி யிருக்கின்றன. பிராகாரத்தில் குடிசைகளும், வைக்கற் போரும், சாணிக் குன்றும் காணப்படுகின்றன. மண்டபத்தினுள் நுழைய முடியாமல் 'கன்னா பின்னா' சாமான்களை யெல்லாம் போட்டு அடைத்து வைத்திருக்கிறார்கள். மிகப் பிரயாசைப்பட்டு, தடைகளை நீக்கி, உள்ளே சென்று, டார்ச் விளக்கைப் போட்டு சிவலிங்கத்தைத் தரிசித்து விட்டு வந்தோம்.

அந்தக் கோயில் எப்போது இக் கதிக்கு உள்ளாயிற்று என்று அங்கு ஒருவருக்கும் தெரியவில்லை. ''நவாப் காலத்திலிருந்தே இப்படித்தான் இது இருக்குதுன்னு பெரியவங்க சொல்லுவாங்க'' என்று உள்ளூர்வாசி ஒருவர் கூறினர்.

அங்கிருந்து மூன்று மைல் மேற்கே சென்றால் 'பழங்கோயில்' இருக் கிறது. பலக்ராதீச்வரரும் விமலாம்பிகையும் அங்கு எழுந்தருளியிருக் கிறார்கள்.

அங்குள்ள நடராஜர் உருவச் சிலை கண்களைக் கவருகிறது. உற்சவ மூர்த்திகள் எழிற் கோலத்துடன் கொலுவீற்றிருக்கின்றனர். அவற்றில் சில பூமிக்கடியில் கிடைத்தனவாம்.

இதற்கு முன்பு 1933-ம் ஆண்டு அக்கோயிலுக்கு குடமுழுக்கு நடை பெற்றிருக்கிறது. சுவாமி சந்நிதிக்குப் பின்னால் திருவண்ணாமலை ஆலயத் தில் இருப்பதுபோல் வேணுகோபால சுவாமி சந்நிதி யிருக்கிறது.

இங்கு கந்த சஷ்டி விழா சிறப்பாகக் கொண்டாடப்படுகிறது. இரண்டு கால பூஜைகள் நடைபெறுகின்றன.

அங்கிருந்து காரிலேயே சேயாற்றின் படுகையைக் கடந்து பூண்டிக்கு வந்து, திண்ணையில் அமர்ந்திருக்கும் ஆற்றுச் சுவாமிகளைத் தரிசித்தோம்.

பர்வத மலையை வலம் வந்ததைப் பற்றியும், சப்த கைலாச ஆலயங்களில் ஐந்தைப் பார்த்ததையும், வாசுதேவம்பட்டு போவதற்கு நாங்கள் பட்ட சிரமத்தையும் அவரிடம் விவரித்தோம்.

''நான்தான் அன்னிக்கே சொன்னேனே, அது காட்டுப் பாதைன்னு. ஒரே முள்ளும் கல்லுமா இருக்கும். கல்லுங்க கார்லே அடிபட்டு இருக்குமேய்யா'' என்று கேட்டார்.

''ஆமாம்'' என்றேன் நான். எனக்கு ஆச்சரியம் தாங்கவில்லை. அது அவருக்கு எப்படித் தெரியும்?

எதையோ நினைத்துச் சிரித்துக் கொண்ட சாமியார், ''எங்களுக்கெல்லாம் நேர் பாதை, உங்களுக்கு கஷ்டமான பாதை'' என்றார்.

மணி நான்குக்கு மேலாகி விட்டது. இன்னும் கரப்பூண்டியும் மண்டகுளத்தூரும் பார்த்தாக வேண்டும். சாமியாரிடம் உத்தரவு பெற்றுக் கொண்டு புறப்பட்டோம்.

போளூரில் நாகேச்வரன் விடைபெற்றுக் கொண்டு கடலாடிக்குப் பஸ் ஏறினார். நாங்கள், சேத்துப்பட்டு செல்லும் பாதையில் திரும்பி, மூன்றாவது மைலில் உள்ள கரப்பூண்டிக்குச் சென்றோம்.

சிறிய கோயில்தான் என்றாலும், அது தெய்விகக் களையோடு விளங்குகிறது. ஸ்ரீ கரகண்டேச்வரரும் பாலசுந்தரியும் அங்கு எழுந்தருளி யிருக்கிறார்கள். சிவாலயத்திற்கு அங்கமான எல்லா தேவதைகளும் தெய்வங்களும் அங்கு காட்சி அளிக்கிறார்கள். வள்ளி தெய்வானையுடன் கூடிய ஆறுமுகரின் திருவடிவம் அற்புத எழிலோடு காட்சி தருகிறது.

மீண்டும் சேத்துப்பட்டு சாலைக்குத் திரும்பி வந்து, இரண்டு மைல்கள் சென்று கிழக்கே திரும்பி, மண்டகுளத்தூரை அடைந்தோம். ''சுப்ரீம்

மாதிமங்கலம் பச்சையம்மன் ஆலயம்



பச்சையம்மன்



கோர்ட் பிரதம நீதிபதியாயிருந்த ஜஸ்டிஸ் பதஞ்சலி சாஸ்திரியார் ஊர் இது'' என்று பெருமிதத்துடன் கூறினர் ஒருவர்.

ஸ்ரீ தர்மேச்வரரும் ஸ்ரீ தர்மசம்வர்த்தினியும் உறையும் கோயிலின் மதிற்சுவரெல்லாம் இடிந்து போய், கோயில் கவனிப்பாரற்றுக் கிடக்கிறது.

ஒரே நாளில் சப்த கைலாசங்களைத் தரிசித்த புண்ணியத்தோடு நாங்கள் சென்னையை நோக்கிப் பயணமானோம்.

அருணாசலத்தின் செஞ்சுடர் பரஞ்சோதியின் துணையால் பர்வத மலையின் தரிசனம் கிடைத்தது. சேயாற்றின் இரு கரைகளிலுமுள்ள சப்தகரைகண்ட தலங்களையும், சப்த கைலாசத் தலங்களையும் தரிசித்தோம். திடீரென்று கிடைத்த புதையலைக் கண்டு ஆனந்திப்பவர்களைப் போல், எதிர்பாராமல் கிடைத்த அற்புத தரிசனங்களை நினைத்து நம் உள்ளங்கள் பேருவகையில் மூழ்கித் திளைக்கின்றன. பர்வத மலையின் காந்த சக்தி நம்மைப் பற்றி யிழுக்க, அதன் மகிமைகளிலேயே மனம் சுழன்றாட, எத்தனையோ நினைவுகள் அலையலையாய்த் தாக்க, உயிருக்குயிரான நண்பனைப் பிரிந்து செல்வது போன்ற பாச உணர்ச்சியில் சிக்குண்டு சென்னைக்குத் திரும்புகிறோம்.

அலுவலகத்தின் மேஜையின் மீது அன்புள்ளம் கொண்ட வாசகர்களின் பாராட்டுக் கடிதங்கள் குவிந்திருந்தன. ஒவ்வொன்றாகப் படித்துக் கொண்டு வந்த போது, கோயம்புத்தூரிலிருந்து எஸ். சீதாராமன் என்பவர் எழுதியிருந்த கடிதம் என் கவனத்தை மிகவும் கவர்ந்தது.

அவர் நாற்பது வருடங்களுக்கு முன் திருவண்ணாமலை தாலூகாவில் உதவிப் பதிவாளராகப் பணியாற்றியவர். 1928-ம் ஆண்டு கலசபாக்கத்தில் பணியாற்றிக் கொண்டிருந்த போது தபால் தலைகள் விற்பவரான ராமு நாயினர் என்பவருடனும், பிற ஊழியர்களுடனும் சிவராத்திரி தரிசனத்திற்காகப் பர்வத மலைக்குச் சென்றார். கோயிலிலுள்ள ஒரு வயோதிகரை ராமு நாயினர் அவருக்கு அறிமுகப்படுத்தி வைத்தார்.

அந்த வயோதிகருக்கு எழுபது வயதுக்கு மேலிருக்கும். அவர்தான் கோயிலுக்கு முன்புள்ள தாழ்வார மண்டபத்தைக் கட்டியவர். அந்தக் காலத்தில் இரு பாறைகளையும் இணைக்கும் இரும்புத் தண்டவாளங்கள் கிடையாது. அங்குள்ள ஓர் ஆலமரத்தின் விழுதைப் பற்றிக் கொண்டு, ஊஞ்சலாடிதான் அடுத்த பாறைக்குப் போக வேண்டும். கோயிலில் ஏதாவது கட்டட வேலை செய்ய வேண்டுமானால், கூலியாட்கள் இரண்டு படி சுண்ணாம்பையும், இரண்டு மூன்று கற்களையும் மடியில் கட்டிக் கொண்டு ஆல விழுதைப் பற்றிக் கொண்டு, அவற்றை மேலே கொண்டு போய்ச் சேர்ப்பார்கள். கட்டடத்திற்குத் தேவையான பொருட்களையெல்லாம் இம்மாதிரி, கொஞ்சம் கொஞ்சமாகக் கொண்டு போய்ச் சேர்த்து, ஒரு மாத காலம் மலை மேலேயே இருந்து அவர் அந்த மண்டபத்தைக் கட்டி முடித்திருக்கிறார்.

ஒரு மாத காலம் அவர் மலைமீது தங்கியிருந்த போது, இரவு படுக்கப் போகும்முன் கோயிலைச் சுத்தமாகப் பெருக்கிவைப்பது வழக்கம். ஆனால்,

காலையில் எழுந்து பார்த்தால், சூடம் கட்டியிருந்த காகிதங்கள், மிட்டாய் வைத்திருந்த காகிதங்கள், சுவாமிக்கு அர்ச்சனை செய்த மலர்கள் முதலியவை தரையில் கிடப்பதைக் கண்டு அதிசயிப்பார்.

ஒருநாள் அவருக்கு இரண்டு மணிக்கே விழிப்பு வந்து விட்டது. அப்போது எதிர்ப்புறமுள்ள பாறையில் நான்கு ஐந்து பேர் உட்கார்ந்து பேசிக் கொண்டிருப்பதைக் கண்டு, ''யாரது?'' என்று அவர் கேட்டார். உடனே அவர்கள், ''நீ யாரய்யா?'' என்று திருப்பிக் கேட்டார்கள். ''நான் இங்கே கட்டடம் கட்ட வந்தேன்'' என்று இவர் சொன்னதும் அவர்கள், ''நீ வந்த காரியத்தைக் கவனிய்யா'' என்று கூறி விட்டு உடனே மறைந்து விட்டார்கள்.

அவர்கள் சித்த புருஷர்களாகத்தான் இருக்க வேண்டும் என்று அந்த வயோதிகர் சீதாராமனிடம் கூறிவிட்டு, ''இவர்களுக்கு இங்கிருக்கும் ரகசிய மூலிகைகளெல்லாம் தெரியும். மணி என்ற மூலிகையை உருட்டி வாயில் போட்டுக் கொண்டால் இவர்கள் நினைத்த இடத்திற்குப் பறந்து செல்வார்கள். சென்னையில் இரவு பத்து மணிக்கு லாலா கடையில் மிட்டாய் வாங்கிக் கொண்டு, இங்கு பறந்து வந்து பூஜை செய்து விட்டுப் போவார்கள்?'' என்றும் தெரிவித்தார்.

அவர்கள் போகும்போது நாம் உற்றுக் கவனிக்கா விட்டால் சாதாரண மனிதர்கள் போல்தான் இருப்பார்களாம். அவர்களைச் சந்தேகக் கண்ணுடன் பார்த்தால் உடனே மறைந்து விடுவார்களாம்.

பர்வத மலைக் காடுகளில் இருக்கும் பலவகையான மூலிகைகளைப் பற்றியும் வயோதிகர், சீதாராமனிடம் விவரித்திருக்கிறார். ஆள் மிரட்டி, பேய் மிரட்டி என்ற இருவகை மூலிகைகள் இருக்கின்றன. உடல் வலுவில்லாத ஒருவர் 'ஆள்மிரட்டி'யைக் கையில் எடுத்துக் கொண்டால் பயில்வான்கள் கூட அவரைக் கண்டு நடுங்குவார்கள். பேய் மிரட்டியைக் கையில் வைத்துக் கொண்டால், எந்த விதமான பேயும் நம்மைக் கண்டு பயந்து ஓடி விடும்.

தாம் கேள்வியுற்ற மற்றொரு நிகழ்ச்சியைப் பற்றியும் சீதாராமன் கடிதத்தில் எழுதியிருந்தார்.

நார்த்தாம்பூண்டி



வாசுதேவம்பட்டு





பழங்கோயில்



மண்டகுளத்தூர்

பர்வத மலை அடிவாரத்தில் உள்ள கிராமத்தைச் சேர்ந்த ஒருவர், மலையேறிச் செல்லும் பாதையில் நின்று கொண்டு, 'சித்த புருஷர்கள் தரிசனம் கிடைக்காதா?' என்று அநேக நாட்கள் காத்துக் கிடந்தார்.

ஒருநாள் மூன்று நான்கு ஆசாமிகள் அவ்வழியே வந்தார்கள். அங்கு நின்றிருக்கும் கிராமவாசியைப் பார்த்து அவர்களில் ஒருவர், ''தினமும் இங்கே ஏன் நின்று கொண்டிருக்கிறாய்?'' என்று கேட்டார். அதற்கு கிராமவாசி, ''சித்த புருஷர்கள் மனது வைத்தால் எதை வேண்டுமானாலும் தங்கமாக்கி விடுவார்களாம். இங்கே சித்த புருஷர்கள் வந்து போவதாகச் சொல்கிறார்கள். எனக்கு ஏதாவது தங்கம் கிடைக்குமா என்று நான் காத்திருக்கிறேன். ஒரு வாரமாக ஒருவரையும் காணோம். என் வயிற்றெரிச்சலை ஏன் கிளப்புகிறாய்? நீங்க உங்க வேலையைப் பார்த்துக் கிட்டுப் போங்க'' என்றார். உடனே, வந்த ஆசாமிகளில் ஒருவர், ''உன் கையில் இருக்கும் அரிவாளைக் கொஞ்சம் கொடு'' என்று சிரித்துக் கொண்டே கேட்கவும், கிராமவாசி அதைக் கொடுத்தார். அரிவாளை உற்றுப் பார்த்து விட்டு, கிராமவாசியிடமே திருப்பிக் கொடுத்தார் அவர். சற்றைக்கெல்லாம் வந்தவர்கள் மறைந்து விட்டார்கள். அவர்கள் மறைந்தவுடன் கையிலிருந்த அரிவாளைப் பார்த்தார் கிராமவாசி. அது சூரிய ஒளியில் பளபளத்தது. அவர் கையில் தங்க அரிவாள் இருந்தது!

இந்த நிகழ்ச்சிகளை யெல்லாம் படித்துவிட்டுப் பேராச்சரியத்தில் மூழ்கி யிருந்த எனக்கு, பர்வத மலையில் தேவ சித்தர் ஒருவரைத் தரிசித்த ஒரு நபரைக் காணும் வாய்ப்பும் சில நாட்களுக்குள்ளேயே கிட்டியது.

மாதிமங்கலத்தை அடுத்துள்ள அருணகிரிமங்கலத்தைச் சேர்ந்தவர் ஏ. விசுவநாதப் பிள்ளை என்பவர். அவர் சாலை ஆய்வாளராக இருந்து வருகிறார். அவரது குடும்பத்தார் முப்பது வருடங்களுக்கு மேலாக சிவராத்திரி யன்று பர்வத மலைக்குச் சென்று மல்லிகார்ஜுன சுவாமிக்கு அபிஷேக ஆராதனைகள் செய்து, வந்தவர்களுக்கெல்லாம் பிரசாதம் அளித்து வருகிறார்கள். பர்வத மலைப் பயணக் கட்டுரைகளைப் படித்து விட்டு, அவர் எனக்கொரு கடிதம் எழுதியிருந்தார். நான் கடலாடி வழியாக மலையேறி யிருக்கக் கூடாது என்றும், மாதிமங்கலம் வழியாகச்

செல்வதுதான் எளிதானது என்றும், செல்லும் வழியில் பல அற்புதங்களைக் காணலாம் என்றும் அவர் அதில் குறிப்பிட்டிருந்தார். என்னை மாதிமங்கலம் வழியாக ஒருமுறை மலைக்கு அழைத்துச் சென்று, இரண்டு நாட்களாவது கோயிலில் தங்கியிருக்கச் செய்ய வேண்டும் என்ற தமது பேராவலையும் அக் கடிதத்தில் அவர் தெரிவித்திருந்தார்.



கரப்பூண்டி

'அண்ணுமலையார் பாதம்' என்பது அண்மையில் ஏற்பட்டது என்றும், ஒரு பக்தை அதைப் பாறையில் அடித்து வைத்ததாகவும் கூறிய பிள்ளை, புராணத்தில் கூறப்பட்டுள்ள 'அண்ணுமலையார் பாதம்' மாதிமங்கலத்திலிருந்து செல்லும் வழியில் ஒரு பாறையில் காணப்படுவதாகவும் கூறியிருந்தார். செல்லும் வழியில் 'திட்டுகாரி மண்டபம்' என்று ஒரு மண்டபம் இருக்கிறதாம். மலையேறிச் செல்லும் பெண்கள் திடீரென்று வீட்டுக்கு விலக்காகி விட்டால், அந்த மண்டபத்திலேயே தங்கி விட வேண்டுமாம். அப்படிச் செய்யாமல், திட்டுடன் மலையேறிச் சென்றுல் எங்கிருந்தோ வரும் செங்குளவிகள் அவர்களைத் தாக்கித் துன்புறுத்துமாம்.

ஒரு வாரத்திற்கெல்லாம் விசுவநாதப் பிள்ளை, அலுவலகத்திற்கு வந்தார். பர்வதமலைக்குத் தம்முடன் நான் ஒருமுறை வரவேண்டும் என்று மீண்டும் எனக்கு அழைப்பு விடுத்தார். ''உங்களுடன் சென்றுல் எனக்கு அற்புதக் காட்சிகள் கிடைக்கும் என்ற நம்பிக்கையிருக்கிறது'' என்றுர் அவர்.

நான் லேசாகச் சிரித்தேன்.

''என்னவோ, என் மனசுக்கு அப்படித் தோன்றுகிறது. நீங்கள் ஒருமுறை வந்துதான் ஆகவேண்டும். நவம்பர் இரண்டாம் தேதி அன்று பிஷேகம் நடைபெறப் போகிறது. அப்போது பெருங் கூட்டமாகப் போவோம். நீங்களும் வந்தால் நான் மகிழ்ச்சி யடைவேன்'' என்றுர் பிள்ளை.

தென்பள்ளிப்பட்டு



நாமரப்பாக்கம்





அருணசலம் எனும் திருவண்ணமலை

''ஜனக் கூட்டம் இருந்தால் சித்த புருஷர்கள் கண்ணுக்குத் தெரிய மாட்டார்கள் என்கிருர்களே, அது உண்மையா?'' என்றேன் நான்.

''அப்படிச் சொல்ல முடியாது. கொடுப்பினை இருப்பவர்களுக்குத் தரிசனம் கிடைக்கும்.''

''அதெப்படி அத்தனை நிச்சயமாகச் சொல்லுகிறீர்கள்?''

''சொந்த அனுபவத்தில்தான் சொல்கிறேன். அடியேனுக்கு ஒரு அற்புத தரிசனம் கிடைத்தது. அதைத் தங்களுக்குச் சொல்வதில் தவறில்லை என்று நினைக்கிறேன்'' என்று கூறிவிட்டு, தமது அனுபவத்தை விவரித்தார் பிள்ளை.

சுமார் இருபத்தைந்து வருடங்களுக்கு முன் சிவராத்திரி யன்று, தந்தை, தாய், சகோதரர் முதலியவர்களுடன் விசுவநாதப் பிள்ளை பர்வத மலைக்குச் சென்ருர். வழக்கம் போல் வந்திருந்த அடியார்களுக்கு அன்னம் வழங்கி விட்டு, மிகுதியான சாதம், சாம்பார், ரசம் அனைத்தை யும் ஒன்ருகக் கலந்து பாதாள சுனையின் அருகே வைக்கச் சென்ற சமயம் அங்கு ஒரு மனிதர் உட்கார்ந்திருந்ததைக் கண்டார். பார்ப்பதற்கு அவர் விறகு வெட்டும் இருளனைப் போலிருந்தார். அவரைப் பார்த்து, ''சாப்பிடுகிருயா?'' என்று கேட்டார் பிள்ளை.

அதற்கு அவர், ''நாங்கள் மொத்தம் பன்னிரண்டு பேர். அவர்களில் நான் மட்டும்தான் வந்தேன். இன்னெரு சமயம் நாங்கள் பன்னிரண்டு பேரும் வந்து சாப்பிடுகிருேம்'' என்று பதில் கூறினுர்.

மறுபடியும், 'சாப்பிடுகிருயா, இல்லையா?' என்று பிள்ளை கேட்ட தற்கு 'சரி போடு' என்ருர் அவர்.

இலையைப் போட்டுப் பரிமாறியதும் அந்த ஆசாமி திருப்தியாகச் சாப்பிட்டு விட்டு, பாதாள சுனையில்இறங்கிக் கையைக் கழுவிக் கொண்டு, நீர் அருந்தி விட்டு வந்தார். பிறகு விசுவநாதப் பிள்ளை, அங்கிருந்த ஒரு கட்டையைக் காண்பித்து, ''அதை மேலே கோயிலுக்குக் கொண்டு வா. சாமிக்கு வடை, பாயசம், சர்க்கரைப் பொங்கல் எல்லாம் செய்ய வேண்டும்'' என்றதும், அவர் பதில் பேசாமல் கட்டையைத் தூக்கிக் கொண்டு வந்து மேலே போட்டு விட்டுப் புறப்பட்டார்.



திரிசூலகிரி எனும் பர்வதமலை

''அபிஷேகமெல்லாம் பார்த்துவிட்டு, பிரசாதம் சாப்பிட்டுவிட்டுக் காலையில் போகலாம்'' என்று பிள்ளை கூறியதைக் காதில் போட்டுக் கொள்ளாமல் அவர், பாதாள சுனைப் பக்கம் இறங்கிப் போய் விட்டார்.

விடியற்காலை பூஜை முடிந்ததும், சாமிக்குப் படைத்த வடை, சுண்டல், பொங்கல் எல்லாவற்றையும் அங்கிருந்த பக்தர்களுக்கு விநியோகித்தார்கள். ஆனால், கொடுக்கக் கொடுக்கக் குறையாமல் பிரசாதங்கள் அப்படியே யிருந்தன. அந்த அதிசயத்தைத் தந்தையாரிடம் கூறினார் பிள்ளை. அதற்கு அவர், ''நேற்று விறகு சுமந்து வந்தவர் சாதாரண ஆசாமியாகத் தோன்ற வில்லை. அவருக்கு ஒரு பங்கு எடுத்து வைத்து விட்டு,பஜனை செய்கிறவர்களுக்குக் கொடு'' என்றார். அப்படியே செய்தார் பிள்ளை. பிறகுதான் பிரசாதம் தீர்ந்தது. இதில் இன்னோர் அதிசயம் என்னவென்றால் அந்த ஆசாமி கொண்டு வந்த ஒரே விறகுக் கட்டையிலேயே எல்லா பிரசாதங்களும் தயார் ஆகிவிட்டன!

மறுநாட் காலை எல்லோரும் கீழே இறங்கத் தயாரான போது அந்த ஆசாமி எதிரில் வந்தார். விசுவநாதப் பிள்ளை கொடுத்த பிரசாதத்தை வாங்கிச் சாப்பிட்டுவிட்டு, ''வாருங்கள், போகலாம்'' என்றார்.

பிறகு எல்லாரும் ஏதேதோ பேசிக் கொண்டு மலையை விட்டு இறங்கி வந்தார்கள். அவர் ஒரு சித்த புருஷராக இருக்குமோ என்று சிலர் சந்தேகப்பட்டார்கள். இன்னும் சிலரோ, 'அதெல்லாம் இருக்காது. வீண் பிரமை' என்று நினைத்தார்கள். அப்போது, வழியிலிருந்த ஒரு முட்புதரை நோக்கி அந்த ஆசாமி, ''இவர்கள் என்னை நம்பவில்லை'' என்று கூறிவிட்டு ''இப்போதாவது நம்புவீர்களா'' என்று கேட்டார். அடுத்த கணம் முட்செடி இரண்டாகப் பிரிந்தது. உடனே அந்த ஆசாமி அதனுள் போய்ப் பதுங்கிக் கொண்டார். முட் புதர் மீண்டும் மூடிக் கொண்டது!

அவர் சாதாரண மனிதர் அல்ல என்பது எல்லோருக்கும் தெரிந்து விட்டது. உடனே விசுவநாதப் பிள்ளையின் தந்தையார், மலைச் சிகரத்தை பார்த்து ஓர் அருட்பா பாடி ''சாமீ, இது சித்து. எனக்குத் தேவையானது

முக்தி'' என்ருர். அடுத்த கணம் புதர் விரிந்தது. சித்தர் சிரித்துக் கொண்டே வெளியே வந்தார். கடுகளவு திருநீறை எடுத்து எல்லோருக்கும் கொடுத்தார்.

பின்னர் அவர் சாதாரணமாக எல்லோருடனும் சிரித்துப் பேசிக் கொண்டு கிழிறங்கி வந்தார். பச்சையம்மன் கோயிலில் தரிசனம் செய்து விட்டு சமைத்துச் சாப்பிட்டார்கள். விசுவநாதப் பிள்ளேயின் பக்கத்தில் அமர்ந்து அந்த சித்தரும் சாப்பிட்டார். எல்லோரும் மூன்று மணிக்குக் கிளம்பினுர்கள்.

முன்னுல் மூவர் போக, நடுவில் சித்தர் நடக்க, பின்னுல் விசுவநாதப் பிள்ளேயும் அவரது பெற்ருேரும் சென்ருர்கள். வழியிலிருந்த ஓர் ஓடையில் இறங்கிய சித்தர், திடீரென்று எப்படியோ மறைந்து விட்டார். முன்னுல் இருந்தவர்கள், ''அவரைப் பார்த்தாயா?'' என்று பின்னுல் இருந்தவர்களேக் கேட்டார்கள். ''இல்லேயே. நீங்கள் பார்த்தீர்களா?'' என்று பதிலுக்கு இவர்கள் கேட்டார்கள். ஒரிருவர் ஓடையிலேயே அழுது புலம்பினுர்கள். ஆனுல், சித்தர் மறைந்தது மறைந்ததுதான்.

சித்தர் சொன்ன பன்னிரண்டு பேரையும் ஒன்ருகத் தரிசிக்கும் பாக்கியம் தமக்கு எப்போது கிடைக்குமோ என்று ஏங்கிக் கொண்டிருக்கிருர் விசுவநாதப் பிள்ளே.

பூண்டி சாமியாரிடம் ''நீங்கள் பர்வத மலேக்குப் போயிருக்கிறீர்களா?'' என்று நான் கேட்டபோது அவர், ''மாடி மேலே ஏறிப் போய்க் கதவைத் தட்டினேன். உள்ளே பன்னிரண்டு பேர் உட்கார்ந்திருந்தாங்க. சரி, காலம், நேரம், சூழ்நிலே சரியில்லேன்னு நான் இறங்கி வந்துட்டேன்'' என்று அவர் கூறினுர் அல்லவா?

சம்பந்தமில்லாத அந்தப் பேச்சில் ஆழ்ந்த பொருள் புதைந்திருப்பதாக அப்போது எனக்குத் தோன்றியது. விசுவநாதப் பிள்ளே கூறியதைக் கேட்டதும் அது சற்று உறுதியாயிற்று.

விசுவநாதப் பிள்ளேயிடம் சித்த புருஷர் குறிப்பிட்ட பன்னிரண்டு பேர், பூண்டி சாமியார் பார்த்த அதே பன்னிரண்டு பேர்தானு?

என் சந்தேக இருளே, உள்ளத்தில் இலங்கும் அருணுசல ஒளிதான் போக்க வேண்டும்.



பகவான் ரமணரின் கடைசிப் புகைப்படம்

பர்வத மலையைப் போலவே திருவண்ணாமலையிலும் சித்த புருஷர்களும் யோகீச்வரர்களும் இன்றும் வாசம் செய்து கொண்டிருக்கிறார்கள். மலையின் வடப்புறத்தில் ஒரு பெரிய ஆலமரத்தடியில் ஐந்து ஞானிகளுடன் அருணகிரி யோகீச்வரராக மகேச்வரனே தவம் இயற்றிக் கொண்டிருப்பதாக அருணாசல புராணத்தில் கூறப்பட்டிருக்கிறது.

ஸ்ரீரமண மகரிஷிகளுக்கு அந்தப் புனித மரம் ஒருநாள் தரிசனம் ஆயிற்று. ஆனால், அதை நெருங்க முடியாமலே அவர் திரும்ப வேண்டியதாயிற்று. அந்த நிகழ்ச்சியைப் பகவானே விவரிக்கக் கேட்போம்:

''ஒருநாள் விரூபாட்ச தேவர் குகையிலிருந்து கீழிறங்கி வந்து மலையை வலம் வருவதற்காகப் புறப்பட்டேன். சுற்றி முடிந்ததும் பச்சையம்மன் கோயிலுக்கு அருகிலுள்ள குறுக்குப் பாதை வழியாக மலை ஏற வேண்டும் என்று எனக்குத் தோன்றவே, அவ்வழியே சென்றேன். அது ஓர் அடர்ந்த காட்டுப் பாதை. எங்கும் இருள் மண்டிக் கிடந்தது. அப்போது என் எதிரில் ஒரு பெரிய ஆல இலை காற்றில் அடித்துக் கொண்டு

வந்தது. அதைக் கவனித்தேன். பல ஆல இலைகளை ஒன்றாகச் சேர்த்துத் தைக்கப்பட்ட சாப்பாட்டு இலையைப் போல் அந்த இலை அத்தனை பெரியதாக இருந்தது. எனக்கு உடனே அருணாசல புராணத்தில் கூறப்பட்டிருக்கும் பெரிய ஆலமரம் நினைவுக்கு வந்தது.

நான் பார்த்த இலை அந்த மரத்திலிருந்துதான் விழுந்திருக்க வேண்டும் என்று எனக்குத் தோன்றியது. அந்த இலை வந்த திசையிலேயே சென்றால் அந்த மரத்தைக் காணலாம் என்று நினைத்து அவ்வழியில் ஏறிச் சென்றேன். உச்சியில் ஒரு பிருமாண்டமான மரம் இருப்பது கண்ணுக்குத் தெரிந்தது. அதை நோக்கி நான் நடந்து கொண்டிருந்த போது, என் தொடை அங்கிருந்த ஒரு புதரில் இடித்தது. உடனே அதிலிருந்த குளவிகள், கூட்டமாக வந்து என்னைத் தாக்க ஆரம்பித்தன. அவற்றின் கூட்டை கலைத்ததற்காக எனக்குக் கிடைத்த தண்டனையாகவே அதைக் கருதி, நான் பயணத்தைத் தொடராமல் அங்கேயே நின்று விட்டேன். குளவிகள் என்னை வேறு எங்கும் கொட்டவில்லை. என் தொடை புதரை இடித்த அதே பாகத்தில் ஓயாமல் கொட்டின. ஆசை தீரும் மட்டும் கொட்டின. குளவிகள் பறந்து சென்ற பிறகு, நான் மீண்டும் நடக்கத்தொடங்கினேன். ஆச்சரியமென்னவென்றால் அப்போது என் மனத்தில் ஆலமரத்தைப் பற்றிய எண்ணமே மறைந்து விட்டது. ஏழு சுனை இருக்குமிடத்திற்குப் போக வேண்டும் என்றே அப்போது தோன்றியது. ஆனால், போகும் வழியில் மூன்று ஆழமான நீரோடைகள் இருந்தன. என் தொடையோ வீங்கி யிருந்தது. தாங்க முடியாத வலியுடன் எப்படியோ ஓடைகளைக் கடந்து, ஏழு சுனையை அடைந்தேன்.

அங்கிருந்து மெல்ல இறங்கி வந்து, மாலையில் சடைச்சாமி குகைக்கு வந்து சேர்ந்தேன். அதுவரை நான் ஒன்றும் சாப்பிடவில்லை. ஒரே பட்டினி. அங்கே கொடுத்த பழங்களையும் பாலையும் சாப்பிட்டு விட்டு, அங்கிருந்து விருபாட்ச குகைக்கு வந்து அன்று இரவு அங்கேயே தங்கினேன். என் கால் ரொம்ப வீங்கி விட்டிருந்தது. சடைச்சாமியும் மற்றவர்களும் அதைக் கவனிக்கவே இல்லை. ஆனால், பழநிச்சாமி என் காலைப் பார்த்து விட்டு என்னவென்று கேட்டார். நான் நடந்ததை யெல்லாம் கூறினேன். மறுநாள் என் காலிலும் தொடையிலும் அவர் நல்லெண்ணெய் தடவி விட்டார். குளவிகள் கொட்டிய இடங்களிலெல்லாம் கம்பி ஆணிகள் போல் முட்கள் தைத்திருந்ததைக் கண்டு, சிரமப்பட்டு ஒவ்வொன்றாக எடுத்து ஏதோ சிகிச்சை செய்தார் அவர். இரண்டு மூன்று நாட்களில் வீக்கம் வடிந்து விட்டது.

அதற்குப் பிறகு அந்த ஆலமரத்தைப் பார்க்க வேண்டும் என்று நான் முயலவே இல்லை. அப்படி ஓர் எண்ணமே எனக்குத் தோன்றவில்லை.''

ஒரு சமயம் ரமணாச்ரமத்திற்குச் சென்றிருந்தபோது பகவானுக்கு ஏற்பட்ட இந்த அதிசய அனுபவத்தைப் பற்றி குஞ்சு சுவாமிகளிடம் நான் பேசிக் கொண்டிருந்தேன். அப்போது அவர், அந்த ஆலமரத்தைத் தேடி தாமும் வேறு சிலரும் சென்ற வேடிக்கையான நிகழ்ச்சியை என்னிடம் விவரித்தார்.

ஆலமரத்தைத் தரிசிப்பதற்காகக் காலே ஆறு மணிக்குப் புறப்பட்டவர்கள் மலேயில் பன்னிரண்டு மணி வரை சுற்றித் திரிந்தும் ஒன்றுமே தென்படவில்லே. எங்கோ வழி தவறிப் போய்விட்டார்களாம். அது மட்டுமல்ல, சித்தபிரமை பிடித்தவர்கள் போலாகி, வாயில் வந்தபடி உளறத் தொடங்கினர்கள். கையில் எடுத்துச் சென்ற ஆகாரத்தைப் புசிக்க வேண்டும் என்றுகூடத் தோன்றவில்லே. பட்டினியால் வாடி, எங்கே யிருக்கிறோம், எந்த வழியாக ஆச்ரமத்திற்குச் செல்ல வேண்டும் என்று தெரியாமல் திக்குத் தெரியாத காட்டில் திண்டாடி, திணறித் தவித்தார்கள். கடைசியில் குஞ்சு சுவாமிகள், ''பகவானே, எங்களே எப்படியாவது காப்பாற்றித் தங்களேத் தரிசிக்கும்படிச் செய்யுங்கள்'' என்று பிரார்த்தித்துக் கொண்டார். அப்போது, சற்றுத் தொலேவில் ஒருவன் விறகு வெட்டிக் கொண்டிருந்தது தெரிந்தது. அவனே அழைத்து, அவன் உதவியுடன், மூன்று ஓடைகளேக் கடந்து, ஏழு சுனேக்குச் சென்று, மாலேயில் ஆச்ரமத்திற்குத் திரும்பினர்களாம்.

அப்போது ஆச்ரமத்தில் பாராயணம் நடைபெற்றுக் கொண்டிருந்தது. எனவே, தாழ்வாரத்திலிருந்தபடியே, பகவானுக்கு ஒவ்வொருவராக நமஸ்காரம் செய்து விட்டுப் போய் விட்டார்கள். இதைப் பகவான் கவனித்தது அவர்களுக்குத் தெரியாது. கடைசியாகச் சென்ற குஞ்சு சுவாமிகளிடம் பகவான், ''இதென்ன வேலே? என்னிடம் சொல்லாமல் ஏன் ஆலமரத்தைத் தேடிக் கொண்டு போனீர்கள்? இரண்டு பேர் நமஸ்காரம் பண்ணிவிட்டு ஓடி விட்டார்கள்; நீயோ ஒன்றுமே தெரியாதவன் போல் வந்து நிற்கிருய். என்னிடம் சொல்லி யிருந்தால் அங்கே போக வேண்டாம் என்று சொல்லி யிருப்பேனே, இதென்ன விஷமம்?'' என்று அன்புடன் கடிந்து கொண்டாராம்!

ஸ்ரீரமண மகரிஷிக்கு அருணுசலத்தில் நேர்ந்த மற்ருேர் அற்புத அனுபவத்தையும் மறக்க முடியாது.

அறுபது வருடங்களுக்கு முன் விருபாட்ச குகையிலிருந்து பகவானும் ஓரிருவரும் பச்சையம்மன் கோயிலுக்கு அடுத்துள்ள குளத்தில் நீராடுவதற்காக எண்ணெய் சீயக்காயுடன் புறப்பட்டார்கள். நீராடி முடித்தபோது மணி பத்தாகி விட்டது. கடுமையான வெயில் காய்ந்து கொண்டிருந்ததால், திரும்பி மலேயேறுவது சற்றுக் கடினமாக இருந்தது. உடன் வந்த பழநிச்சாமியும் வாசுதேவ சாஸ்திரியும் முன்னுல் சென்று விட்டனர். பகவான் மெள்ள நடந்து வந்தார். 'ஆமைப்பாறை'யின் அருகில் வந்ததும் அவருக்குத் தலேயைச் சுற்றியது. பின்னர் என்ன நடந்தது என்பதை பகவானே சொல்லக் கேட்போம்:

''திடீரென்று இயற்கைக் காட்சிகள் கண்களிலிருந்து மறைந்து, பிரகாசமிக்க ஓர் வெண்மையான திரை தோன்றியது. இயற்கைத் தோற்றம் மெள்ள மெள்ள மறைந்ததையும், வெள்ளித் திரை கண் முன்னுல் தோன்றியதையும் மிக நன்ருக உணர முடிந்தது. இதே நிலேயில் மேலும் நடந்தால் கீழே விழுந்து விடுவேனே என்று அஞ்சி, அப்படியே நின்று விட்டேன். பின்னர், திரை விலகி, பார்வை தெளிவடைந்தது.

நான் நடக்கத் தொடங்கினேன். இரண்டாவது முறையாக மயக்கத்தில் தலை சுழன்றது. உடனே அருகிலிருந்த பாறையில் சாய்ந்து கொண்டேன். தெளிவான பார்வை மீண்டது. ஆனால், சற்றைக்கெல்லாம், பழையபடி தலையைச் சுற்றத் தொடங்கவே, நான் அப்படியே கீழே உட்கார்ந்து விட்டேன்.

அப்போது வெண்திரை என் பார்வையை முழுமையாக மறைத்து விட்டது. என் தலை, நீரில் மிதப்பது போல் ஓர் உணர்ச்சி மேலிட்டது. ரத்த ஓட்டமும், சுவாசமும் நின்று விட்டன. உடலில் நீலம் பாய்ந்து விட்டது. மரணத்திற்கே உரிய மாற்றம் அது. கணத்திற்குக் கணம் அங்கங்களில் கருமை நிறம் ஏறிக் கொண்டிருந்தது.

என் நிலையைக் கண்ட வாசுதேவ சாஸ்திரி நடுங்கியே விட்டார். நான் இறந்து விட்டதாக முடிவு செய்து, என்னை மார்போடு அணைத்துக் கொண்டு 'ஓ'வென்று ஓலமிடத் தொடங்கி விட்டார்.

அவருடைய உடல் நடுங்கிக் கொண்டிருந்ததையும் அவர் என்னை இறுகப் பற்றிக் கொண்டிருந்ததையும் என்னால் உணர முடிந்தது. அவர் அழுதது என் காதில் விழுந்தது. அவர் கூறிய வார்த்தைகளின் பொருளும் எனக்குப் புரிந்தது.

என் உடலின் நிறம் படிப்படியாக மாறியதை நான் கண்டேன். என் இதயத் துடிப்பு நின்று போனதை அறிந்தேன். கை கால்கள் சில்லிட்டுப் போனதையும் உணர்ந்தேன்.

ஆனால் அந்த 'மரண' நிலையிலும் என் எண்ண ஓட்டங்கள் அப்படியேயிருந்தன. எனக்குப் பயம் என்பதே தோன்றவில்லை. என் உடலுக்கு நேர்ந்த கதியைப்பற்றி எனக்குச் சிறிதும் வருத்தம் ஏற்படவில்லை.

பாறைக்கருகில் அமர்ந்த உடனேயே நான் கண்களை மூடிக் கொண்டு விட்டேன். நான் பாறையின் மீது சாய்ந்து கொள்ளவில்லை. ரத்த ஓட்டமும், சுவாசமும் நின்ற போதும் கூட நான் அசையாமல் அமர்ந்திருந்தேன் இதே நிலையில் அப்படியே பத்துப் பதினைந்து நிமிடங்கள் இருந்தேன்.

சட்டென்று என்னுள்ளே மின் அதிர்ச்சி பாய்ந்தது போல் உணர்ந்தேன். அடுத்து, ரத்த ஓட்டமும் சுவாசமும் மீண்டன. உடலெங்கும் 'குப்'பென்று வியர்த்துக் கொட்டியது. பழைய நிறம் திரும்பியது. கண்ணைத் திறந்து பார்த்தேன். நான் சாதாரணமாகத்தான் இருந்தேன். எல்லோரும் விருபாட்ச குகைக்குப் போய்ச் சேர்ந்தோம்.

என் இதயத் துடிப்பும் மூச்சுக் காற்றும் நின்று போன அனுபவம் இது ஒன்றுதான்.''

பதினாறுவது வயதில், தமது மரணத்தை ஒத்திகை பார்த்துக் கொண்டார் பகவான். உடல் அழிந்தாலும், ஆன்மா சாகாமல் விழித்திருக்கிறது; அழியாத, நிலையான அந்த வஸ்துதான் உண்மையான 'நான்' என்று அப்போது உணர்ந்து கொண்டார்.



பகவான் இந்த அறையில்தான் உடலைத் துறந்தார்

முப்பத்திரண்டாவது வயதில், மேலே விவரிக்கப்பட்ட அதிசய அனுபவத்தின் போது தம் மரணத்தையே நேருக்கு நேர் சந்தித்தார் பகவான். பேச்சு, மூச்சு அடைத்துப் போய், இதயத் துடிப்பு நின்று போய், தம் உடல் விகாரம் அடைந்த காட்சியை, 'அவர்' ஒரு சாட்சியாக இருந்து கொண்டு பார்த்தார். நம் சட்டை முள்ளில் சிக்கிக் கிழிந்து போவதை நாம் காண்பது போல் அத்தனை சாதாரணமாகத் தம் உடல் மடிவதைப் பார்த்தார் ஜீவன் முக்தரான பகவான்.

முப்பத்தெட்டு வருடங்களுக்குப் பிறகு அவர் தமது உடலை, சட்டையைப் போலக் கழற்றி எறிந்த அதிசயத்தையும் உலகம் கண்டது. சுமையைத் தூக்கும் கூலியாள், குறிப்பிட்ட இடம் வந்ததும் எத்தனை நிம்மதியுடன் அந்த பாரத்தை எடுத்துக் கீழே வைப்பானோ, அத்தனை நிம்மதியுடன் தன் உடற் சுமையைக் கீழே இறக்கி வைத்து விட்டு, ரமண ஜோதி, அருணாசல ஜோதியுடன் கலந்து விட்டது.

ரமணர் என்பது ஒரு தத்துவம், ஒரு சத்தியம். உலக மக்களுக்காக அது மனித உருவம் தாங்கி, அதனுள் தன்னை அடக்கிக் கொண்டு, அதன் கட்டுப்பாடுகளுக்குத் தன்னை ஆட்படுத்திக் கொண்டு, எழுபதாண்டுகள் மாயா லீலைகள் புரிந்து விட்டு, மீண்டும் அருவமாகி விட்டது. நம்மைப் போலவே, அந்த உடலுக்கு நோய் வந்தது. வலியும் வந்தது. இறுதியில் மரணமும் வந்தது. ஆனால், ரமணரைப் பொறுத்த வரையில், நோயும், வலியும், மரணமும் அவரது உடலுக்குத்தான். உடலிலிருந்து என்றோ பிரிந்துவிட்டு, தன்னிச்சையாக, சச்சிதானந்த ஒளியாக விளங்கிக் கொண்டிருந்த ரமணர், அந்த நோயை, வலியை, மரணத்தை தனக்கொரு சம்பந்தமுமின்றி ஒரு சாட்சியைப் போலப் பார்த்துக் கொண்டிருந்தார்.

இடக்கை முழங்கையில் பெரிய கட்டுடன் படுத்திருக்கிறார் பகவான்.

''பகவானே, உங்களுக்குமா இப்படி ஒரு கதி? தாங்கள் மனது வைத்தால் இதைக் குணப்படுத்திக் கொள்ள முடியாதா?''—அஞ்ஞானத்தில் மூழ்கிய பக்தர்கள் ஆசையால், பாசத்துடிப்பால் கெஞ்சுகிறார்கள்.

பகவான் தமக்குள் சிரித்துக் கொள்கிறார்:

''நான் மனது வைப்பதா? எனக்குச் சொந்தமாக மனம் என்று ஒன்று இருக்கிறதா? அதையும் 'அதில்' கரைத்தாகி விட்டதே. சங்கற்பம் செய்வதற்கு நான் யார்?''

''பகவானே, எத்தனையோ அற்புதங்களை நிகழ்த்திக் காட்டி யிருக்கிறீர்களே! எத்தனையோ பேருடைய திராத நோய்களைக் கடைக்கண் பார்வையாலே குணப்படுத்தி யிருக்கிறீர்களே! தங்களுடைய நோயைக் குணப்படுத்திக் கொள்ள முடியாதா?''—பக்தர்கள் நெஞ்சம் குமுறக் கேட்கிறார்கள்.

பகவான் சிரித்துக் கொள்கிறார்.

''நோயா? எந்த நோயைச் சொல்கிறீர்கள்? இந்த உடலே ஒரு பெரிய நோய் ஆயிற்றே. இது போனால் எல்லாம் சரியாகி விடும்.''—காலனுக்குரிய வேளை நெருங்கும் போதும் வேதாந்தப் பேச்சுதான்.

நான்காவது முறையாக அறுவை சிகிச்சை முடிந்து, வலுவிழந்து படுத்துக் கொண்டிருக்கிறார் மகரிஷி. அமைதியான முகத்தில் சட்டென்று சலனக் குறி தோன்றுகிறது. அருகில் நின்றிருந்த அன்பருக்கு இதயத்தை கசக்கிப் பிழிகிறது.

''பகவானே, வலிக்கிறதா?''

புன்னகைக் கீற்று உதட்டின் விளிம்பில் நெளிய, மெல்லிய குரலில், நிதானமாகப் பேசுகிறார் பகவான்:

''வலியிருக்கு.''

அப்போதும், 'உடலுக்கு வலி இருக்கிறது' என்றுதான் கூறுகிறார் சத்தியஞானி. 'எனக்கு வலிக்கிறது' என்று கூறவில்லை.

இறுதி நாட்கள். எல்லா மருத்துவ முறைகளையும் முயன்று பார்த்தாகி விட்டது. குணப்படுத்த முடியாத அளவுக்கு நோய் உடல் முழுவதும் புரையோடி விட்டது. இரத்தம் வற்றிப் போய், உடல் வெளிறிப் போயிருந்தது. பகவானின் உடல் மறையப் போவது நிச்சய மாகி விட்டது. சுற்றி நிற்பவர்களின் முகங்களில் படரும் வேதனைக் கோடுகளைப் பார்த்த பகவான் சிரித்துக் கொள்கிறார்:

'''நான்' இறந்துவிடப் போவதாக எல்லோரும் நினைத்துக் கொண் டிருக்கிறார்கள். ஆனால், 'நான்' போக மாட்டேன். 'நான்' எங்கே போக முடியும்? இங்கேதான் இருக்கப் போகிறேன்.

''எங்கிருந்தோ வந்தாலல்லவோ, வேறெங்கோ போவதற்கு? எங்கும் இருப்பது வேறு எங்கு போக முடியும்? இருப்பது அது ஒன்றுதானே! அதைத் தவிர வேறு ஒன்று இருக்கிறது என்று நினைப்பவர்களுக்குத் தானே, பிரிவும் மரணமும்?

''நான் எங்கே போவது? இங்கேதான் இருக்கப் போகிறேன்.''

எத்தனை சத்தியமான வாக்கு! பகவான் எங்கும் இருக்கிறார், என்றும் இருக்கிறார். ரமணாச்ரமத்திலுள்ள சலவைக் கல் சமாதியில் மட்டுமா அவர் இருக்கிறார்? தர்சன அறையில் மட்டுமா இருக்கிறார்? அங்கிருக்கும் படங்களிலும், சிலைகளிலும் மட்டுமா அவரைக் காண்கிறோம்?

ரமணரைக் காணத் துடிப்பவர்கள், ஒவ்வோர் உயிரினத்தின் ஜீவத் துடிப்பிலும் அவரைக் காணலாம். நம்மை எல்லாவற்றிலும், எல்லா வற்றையும், நம்மிலும் காண்பவர்கள் ரமணரை எந்நேரமும் தரிசித்துக் கொண்டிருக்கலாம். உள்ளங்கள் தோறும், இல்லங்கள் தோறும் ரமண ரைக் காணப் பழகியவர்கள் ரமணாச்ரமம் சென்றுதான் அவரைத் தரிசிக்க வேண்டும் என்பதில்லை.

ஆனால், அந்த மனப் பக்குவம் ஏற்படுவதற்கு இம்மாதிரியான புனித ஆத்மாக்கள் உடலுருவில் உலவிவந்த புண்ணிய மண்ணை மிதித்து, அந்தச் சூழ்நிலையில் தங்கி, அப்பேரமைதியைப் பருகி, சிந்தனைகளைச் செம்மையாக்கி, நம் உள்ளத்தைத் தூய்மைப் படுத்திக் கொள்ள வேண்டியது மிகமிக அவசியமாகிறது.

ரமணாச்ரமத்தில் காலடி எடுத்து வைத் ததும், ஸ்ரீமாத்ருபூதேச்வரர் ஆலயம் நம்மை வரவேற்கிறது. உள்ளே நுழைந்த தும் முன் மண்டபத்திலுள்ள அலுவலக அறையில் அமர்ந்திருக்கும் 'தலைவர்' வெங்கடராமன், நம்மைச் சிரித்த முகத் துடன் வரவேற்கிறார். அவருடன் சிறிது நேரம் பேசிக் கொண்டிருந்தால், ஆச்ரமத் தின் வளர்ச்சிக்காக அவர் எவ்வளவு பாடு பட்டுக் கொண்டிருக்கிறார் என்பது நமக்கு

சாது சத்யானந்தா



விளங்கிவிடும். 'சர்வாதிகாரி' நிரஞ்சனானந்த சுவாமிகள் விட்டுச் சென்ற பணியை அவருடைய பூர்வாசிரம மகன் திறம்பட நிறைவேற்றி வருகிறார்.

சிறு வயதில் தாயை இழந்து, அத்தை அலமேலுவிடம் வளர்ந்தவர், அடிக்கடி ஆச்ரமத்திற்கு வந்து போனதால், 'பெரிய தந்தை'யான பகவானுடன் உரிமையோடு பழகும் வாய்ப்பைப் பெற்றிருந்தார். கந்தாச்ரமத்தில் பகவான் இருந்த போது அங்கு ஒரு நொண்டிக் குரங்கு அடிக்கடி வந்து போகுமாம். பக்தர்கள் கொண்டு வரும் பண்டங்களின் ஒரு பகுதியைப் பகவான் தம் செல்லப்பிள்ளையான 'நொண்டி'க்கு எடுத்து வைத்து விடுவது வழக்கமாம். ஒருசமயம் நொண்டிக்கு வைத்திருந்த பழத்தை, சிறுவன் வெங்கடராமன் எடுத்துத் தின்னத் தொடங்கி விட்டான். அப்போது அங்கு வந்த 'நொண்டி' தன் பங்கைத் திருடிய வெங்கடராமனுடன் சண்டைக்கு வந்து விட்டது. சிறுவனின் உடல் முழுவதும் பிராண்டி விட்டது. வெளியே சென்றிருந்த பகவான் அச்சமயத்தில் உள்ளே நுழைந்தார். என்ன நடந்தது என்று ஒரு கணத்தில் புரிந்து கொண்டு விட்டார். வெங்கடராமனைப் பார்த்து, ''டேய், நீ ஏண்டா 'நொண்டி'க்கு வைத்திருந்த பழத்தை எடுத்தே? உனக்கு நன்னா வேணும்'' என்று கடிந்து கொண்டாராம். 'தம்பி'யின் மகனையும் 'நொண்டி'க் குரங்கையும் ஒன்றாகவே நினைத்த பகவானின் உள்ளத்தை நினைவு கூர்ந்த வெங்கடராமனின் கண்கள் பனித்தன.

வெங்கடராமனின் மகன் கணேசனின் அமைதி தவழும் முகமும், அமுதமான பேச்சும், அழகிய புன்னகையும், அருளுக்காக ஏங்கித் ததும்பும் பார்வையும் நம்மை வசீகரிக்காமல் இருக்காது. நற்பண்புகள் கொண்ட அந்த நல்ல இளைஞர், 'மலைப் பாதை' என்ற ஆச்ரமத்தின் சஞ்சிகையின் நிர்வாக ஆசிரியராகப் பணியாற்றி வருகிறார். வயதான ஆச்ரமவாசிகளின் அருகில் அமர்ந்து, பகவானைப் பற்றிய நிகழ்ச்சிகளை மீண்டும் மீண்டும் சொல்லக் கேட்டு ஆனந்தத்தில் திளைப்பதையே பயனுள்ள பொழுதுபோக்காகக் கருதுகிறார் அவர். ஆச்ரமத்தைப் பற்றியோ, பகவானைப் பற்றியோ எந்த விவரங்கள் தேவையானாலும் அவரிடம் கேட்டு விட்டால் போதும், ஓடோடிச் சென்று உள்ளன்புடன் உதவி செய்கிறார்.

ஆச்ரமத்தை யெல்லாம் சுற்றிப் பார்த்துவிட்டு, கடைசியாகப் பகவானின் இறுதி மூச்சு பிரிந்த அறைக்கு வந்தோம். அப்போது மரத்தடியில் மேய்ந்து கொண்டிருந்த மயில் கத்திற்று. எனக்குப் பழைய நிகழ்ச்சி ஒன்று நினைவுக்கு வந்தது.

பகவானின் உயிர் உடலை விட்டுப் பிரியப் போகிறது. இன்னும் இரண்டு மணி நேரம்தான் இருக்கிறது. துயரத்தில் ஆழ்ந்த ஆச்ரமவாசிகளும், இதர பக்தர்களும் செய்வதறியாமல் ஆங்காங்கே மௌனமாக நின்று கொண்டிருக்கிறார்கள்.

அப்போது மயில் ஒன்று தொலைவிலுள்ள மரத்தில் அமர்ந்து, 'கோ' வென்று கதறுகிறது. அது பகவானின் காதுகளில் விழுகிறது. அருகிலிருந்தவரிடம் கருணைக் கடல் கேட்கிறது:

''மயில் ரொம்ப நேரமா கத்துகிறதே? அதற்கு ஆகாரம் போட மறந்து விட்டீர்களா?''

மயிலுக்கு வாய் இருந்தால் அலறி யிருக்கும்: ''பகவானே, எனக்குப் பசியும் இல்லே, தாகமும் இல்லே. வ்ரப்போகும் உங்கள் பிரிவை நினைத்து தான் கதறுகிறேன்......''

அஞ்ஞான இருளில் மூழ்கி, நம் இயற்கையான அமைதியையும் ஆனந்தத்தையும் இழந்து விட்டதாக நினைத்துத் திண்டாடும் உலக மக்களின்மீது பெருங் கருணை கொண்டு, எங்கும் நிறைந்திருக்கும் ஒளி, ஓர் உருவம் தாங்கி, எழுபதாண்டு காலம் நம்மிடையே நடமாடி வந்தது. ஒருநாள் அத் திருமேனியை மண்ணிலே போட்டுவிட்டு, அது மீண்டும் அகண்டாகாரத்தில் சுயஞ்சோதியாகப் பிரகாசிக்கத் திருவுளம் கொண்டது.

பகவான் பொன்னுடலைத் துறந்து விட்டுச் சென்ற அச் சிறு அறைக்குள் நுழையும்போது எத்தனையோ உணர்ச்சிகள் எண்ணவெழுச்சிகளாகப் பொங்கிப் பெருக, சோக வெள்ளத்தில் மிதக்கிறோம்.

அங்கு எல்லாம் அப்படியே இருக்கின்றன. படுக்கை யிருக்கிறது. திண்டுகள் இருக்கின்றன. மருந்து புட்டிகள் இருக்கின்றன. கைத் தடி யிருக்கிறது. குடை யிருக்கிறது. காலண்டர் 1950-ம் ஆண்டு ஏப்ரல் 14-ந் தேதி—வெள்ளிக்கிழமை என்பதைக் காட்டுகிறது. அங்குள்ள கடிகாரம் கடைசி மூச்சு பிரிந்த நேரம் 8-47 என்பதைக் காட்டுகிறது.

அங்கு ஒளி யிருக்கிறது; உருவம் இல்லே. புனிதம் இருக்கிறது; பொன் மேனி இல்லே. படங்கள் இருக்கின்றன; அன்பு மொழி பேச பகவான் இல்லே. புத்தக அலமாரி யிருக்கிறது; புத்தகத்தை எடுத்துப் புரட்டி, பாட்டைப் படித்து அதில் பொதிந்துள்ள தத்துவப் பொருளை விளக்கிச் சொல்ல மகரிஷி இல்லே.

''இதோ பார்த்தீர்களா, இது பகவானே 'பைண்டு' செய்தது. அட்டையும் அவர்தான் போட்டார். அதன் மேல் எழுதி யிருக்கு பாருங்கள், அதுவும் அவர் கை யெழுத்துதான்.''—சாது சத்யானந்தா கூறுகிறார். பகவானுக்குத் தூய தொண்டு செய்யக் கொடுத்து வைத்தவர்களில் அவரும் ஒருவர். அண்ணலின் ஆவி பிரியும்போது அருகிலேயே இருந்தவர்.

புத்தகத்தை வாங்கிப் பார்த்தேன். அது பகவானின் கரம் பட்டது என்று நினைத்தபோது கை நடுங்கிற்று.

''இது மலேயாள எழுத்துக்கள் போலல்லவா இருக்கிறது. பகவானுக்கு மலேயாளம் கூடத் தெரியுமா?''

''நன்றாகத் தெரியும். இதோ பாருங்கள். தெலுங்கு எழுத்துக்கள். கிழிந்திருந்த இந்தப் புத்தகத்தையும் தைத்து 'பைண்டு' செய்தது பகவான்தான்.''

ஆகா! எத்தனை பெரிய சக்தி, எத்தனை எளிமையான மனிதனாக வாழ்ந்து காட்டி யிருக்கிறது!

''இதைப் பார்த்தீர்களா? இந்த அகராதியில் முதல் பக்கம் கிழிந்து விட்டது. அதனுல் தனிப் பேப்பரில் அந்தப் பக்கத்தைப் பார்த்து அப்படியே தம் கையாலேயே எழுதி வெச்சிருக்கார்...''—புத்தகத்தை எடுத்துக் காட்டுகிருர் சத்யானந்தா.

பொடி எழுத்துக்கள். கண்ணில் ஒத்திக்கொள்ளத் தகுந்த முத்து முத்தான எழுத்துக்கள். பகவானின் ஆங்கில எழுத்துக்கள் கூட மணி மணியாய் இருக்கின்றன.

அறை முழுவதும் அவர் கரம்பட்டுப் புனிதம் அடைந்த பொருள்கள் குவிந்திருப்பதைக் கண்டபோது, சிரடி சாயி மந்திரில் கண்ணுடி அறைக் குள் பாபா பயன்படுத்திய பொருள்களைப் பார்த்தது என் நினைவுக்கு வந்தது.

மகாத்மாக்கள் ஒருநாள் மறைந்து விடுகிருர்கள். அவர்களுடைய வரலாறுகளைக் கேட்டு, அவர்கள் விட்டுச் சென்ற பொருள்களைக் கண்டு ஓரளவு ஆறுதல் பெறுகிருேம். அவர்களுடைய வாழ்க்கையோடு சம்பந் தப்பட்ட பொருள்களைப் பார்த்துவிட்டு மகிழ்வது மனித இயல்பு. ஆனுல், அவர்களுடைய வாழ்க்கையின் பொருளைப் புரிந்து கொள்ள முயல்வது மனிதனின் லட்சியமாக இருக்க வேண்டும்.

ரமணுச்ரமத்திற்குச் சென்ருல் மகரிஷியின் வாழ்க்கையோடு பின்னிப் பிணைக்கப்பட்ட பல நிகழ்ச்சிகள் நம் நினைவுக்கு வருகின்றன. கணக்கற்ற ரமண பக்தர்கள் எழுதியுள்ள நூல்களின் பக்கங்களெல்லாம் உயிர் பெற்று எழுந்து நம் முன் திரை ஓவியங்களாகக் காட்சி தருகின்றன. அங்கிருக்கும் ஆச்ரமவாசிகள் அந்தக் காட்சிகளை நேரில் விவரிக்கும்போது கடந்த காலம், நிகழ் காலத்தில் கரைந்து, நாமும் பகவானை நேரில் தரிசிக்கிருேம். அவருக்கு நமஸ்காரம் செய்கிருேம். அவரது அருள் பார்வை நம் மீது படிகிறது. ஏதேதோ கேட்க வேண்டும் என்று வந்து விட்டு, தெய்வ தரிசனம் கிடைத்ததும் வாயடைத்துப் போய், கண்ணீர் ஆருகப் பெருக, தேம்பித் தேம்பி அழுது கொண்டு அவரது மலரடிகளில் அமருகிருேம். பத்திரிகையைப் படித்துக் கொண்டிருக்கும் மகரிஷி, ஒருகணம் — ஒரேகணம், நம் பக்கம் திரும்பிப் புன்னகை புரிகிருர். அவ்வளவுதான். நம் துயரமெல்லாம் பறந்து விடுகிறது. அதுவரை அனுபவித்தறியாத ஆழ்ந்த அமைதி, நெஞ்சில் தேங்குகிறது. உலகம், உற்ருர், உறவினர், உடல், உணர்வு எல்லாம் எங்கோ மறைய, 'அவர்' மட்டும் இருக்கிருர். மெள்ள மெள்ள அந்த உடலும் மறைந்து, கண்கள் மட்டும் மின்னுகின்றன. இறுதியில் கண்களும் மறைந்து அவற்றின் ஒளி மட்டுமே மிஞ்சி நிற்கிறது. அருணுசல ஒளியாக அது உலகிற்கொரு கலங்கரை விளக்கமாக விளங்குகிறது.

''அந்த சிறிய அறைக்குச் செல்லும் வரையில் பகவான் இந்த மண்டபத்தில்தான் தரிசனம் கொடுத்துக் கொண்டிருந்தார். மகா நிர்வாணத்திற்குப் பிறகு அவருடைய புனிதத் திருமேனியை இங்குதான் வைத்திருந்தோம். ஆயிரக்கணக்கான மக்கள் க்யூவில் நின்று இறுதியாகத்



மலைச் சிகரமும் ஆலய கோபுரமும்

தரிசித்து விட்டுப் போனார்கள். அந்த இடத்திலேயே அவரது உருவச் சிலையைத் தற்போது வைத்திருக்கிறோம்'' என்று கூறுகிறார் வெங்கடராமன்.

மீண்டும் நிகழ்காலத்திற்கு வருகிறோம். பகவானின் உருவச்சிலையை தரிசிக்கிறோம்.

ஸ்ரீ தட்சிணாமூர்த்தி அஷ்டகத்தை எப்போதும் வாயில் முணு முணுத்துக் கொண்டே வீட்டுக் காரியங்களைச் செய்து வந்த அழகம்மை, உலக மாயை அகல, மௌனத்தாலேயே ஞானம் புகட்டிய மகனைப் பெற்றாள். அந்த மகன், தட்சிணாமூர்த்தியாய் வெளி மண்டபத்தில் தெற்கு நோக்கி அமர்ந்திருக்க, மாத்ருபூதேச்வரராக அன்னை திருவாலயம் கொண்டிருக்கிறாள். வெளியில் காண்பது உடல். உள்ளே யிருப்பது சக்தி. அந்த ஆன்ம சக்தியை முதலும் முடிவுமில்லாமல் எங்கும் நிறைந்திருக் கிறது என்ற அருணாசல தத்துவத்தை அந்த ஆலயமும் பகவானின் கற்சிலையும் நமக்கு நினைவுபடுத்துகின்றன.

வீட்டை விட்டு ஓடிவந்த மகனை ஊருக்கு அழைத்துப் போக அருணாசலம் ஏறி வந்த தாயை, பாச வலையிலிருந்து மீட்டு, அருணாசலத் தின் ஒளியில் ஞான தரிசனம் செய்து வைத்து, மீள முடியாத பேரின்ப 'வீட்டு'க்கு அனுப்பி வைத்தார் ரமண மகரிஷி. அப் 'புனிதப் பணி'யை நிறைவேற்றுவதற்கே விருபாட்ச குகையிலும், கந்தாச்ரமத்திலும் தங்கி யிருந்தவர் போல், பாலி தீர்த்தத்தின் அருகில் அன்னையின் உடல் அடக்கமானதைத் தொடர்ந்து தாமும் கீழே இறங்கி வந்து விட்டார். அங்கு அன்னைக்கு ஓர் ஆலயம் எழுப்பி, குடமுழுக்கு நடந்தேறும் வரை காத்திருப்பவர் போல் ஆச்ரமத்தில் இருந்து விட்டு, தம் சரீரத்தைத் துறந்தார். அன்னைக்கு அருகிலேயே அருமை மகன், திருக்கோயிலும் கொண்டார்.

ரமண பகவான் ஒரு ஜீவன் முக்தராக இருப்பினும், அதை ஒருகணம் மறந்து, அவரை ஒரு சாதாரண மனிதராக நினைத்துப் பார்ப்போம். மகனாய்ப் பிறந்தவன், தன்னைப் பெற்று வளர்த்த தாய்க்குக் காட்ட வேண்டிய நன்றியையும் ஆற்ற வேண்டிய கடமையையும் மிகத் தெளிவாகக் காட்டிச் சென்றிருக்கிறார் ரமண பகவான். தாயின் புலம்பலைச் சற்றும் பொருட்படுத்தாமல், முதலில் பிடிவாதமாக இருந்த பகவான், பின்னர் விட்டுக் கொடுத்து, தாயைத் தம்முடன் தங்கச் செய்தது ஏன் என்று சிந்திக்காமல் இருக்க முடியுமா?

முற்றும் துறந்த முனிவர்களானாலும், ஜீவன் முக்தர்களானாலும், ஆன்ம ஞானிகளானாலும் அன்பும், கருணையுமே உருவான தாயின் பாசத்திற்கு முன், தன் கடமைகளைத் தட்டிக் கழிக்க முடியாது என்று, பந்த பாசங்களைக் கடந்து கர்மாக்களைத் துறந்து வாழ்ந்த மகரிஷி, உலகிற்கு எடுத்துக் காட்டினார் என்றே கருத வேண்டி யிருக்கிறது.

கந்தாச்ரமத்திலிருக்கும் போது அழகம்மை ஒருகணம் கூட மகனை விட்டுப் பிரிந்திருக்க மாட்டேன் என்று கூறி விட்டார். வேறு எங்காவது போனால் அங்கு இறந்து போய் விடுவோமோ என்ற பயம் அவருக்கு. மானாமதுரைக்கு வந்து தன் புதிய வீட்டில் காலடி எடுத்து வைத்து விட்டுப் போகும்படி மகள் அலமேலு கெஞ்சியபோது கூட அவர் மறுத்து விட்டார். ''என்ன ஆனாலும் சரி, உன் மடியில்தான் சாவேன். நீ என் பிணத்தை புதர்லே தூக்கிப் போட்டாலும் சரி, நான் இங்கேதான் சாவேன்'' என்று மகனிடம் அடிக்கடி கூறுவார் அந்த அன்னை. அதை 'பிள்ளைப் பாசம்' என்று வைத்துக் கொண்டாலும் சரி, 'அடைக்கலம்' என்று கருதினாலும் சரி, தனக்கு நற்கதியருள வேண்டிய பொறுப்பை மகனின் மீது சுமத்தி விட்டார் அழகம்மை. பகவானால்கூட அந்தக் கடமையைத் தட்டிக் கழிக்க முடியவில்லை.

விருபாட்ச குகையில் இருக்கும் போது சமையல் என்பதே கிடையாது. எச்சம்மாள் ஏதோ ஆகாரம் கொண்டு வருவார். அதைத் தாயும் மகனும் சாப்பிடுவார்கள். பாத்திரங்களைக் கழுவி வைத்து விட்டு அழகம்மை படுத்து விடுவார்.

ஒருநாள் அந்தத் தாய்க்கு அஞ்ஞானம் அதிகமாகிவிட்டது: 'மகன் எதை எதையோ சாப்பிடுகிறானே. வாய்க்குப் பிடித்ததாக ஒன்றுமே இல்லையே. அவனுக்கு அப்பளம் என்றால் உயிர் ஆயிற்றே. நம் கையாலே இட்டு, பொரித்துப் போட்டால் என்ன'வென்று அழகம்மைக்குத் தோன்றியது. ஆனால், 'மகனிடம் சொன்னால் ஒப்புக் கொள்ள மாட்டான். அவனுக்குத் தெரியாமல் செய்ய வேண்டுமே' என்று எண்ணிச் செயல்பட்த் தொடங்கினாள்.

அந்த நிகழ்ச்சியை மகனின் சொற்களிலேயே கேட்டால் தான் சுவையாக இருக்கும்:

''எனக்குத் தெரியாமல் முதலியார் பாட்டியிடமும் எச்சம்மாளிடமும் அப்பளத்திற்குத் தேவையானவற்றை தயார் செய்து வைக்கும்படி ரகசியமாகச் சொல்லி விட்டு, ஒருநாள் கீழே யிறங்கிப் போனாள் அம்மா.

அவள் உண்மையாகவே எங்கே போகிருள் என்பதைப் பார்ப்பதற்காக நான் வெளியே வந்து மரத்தடியில் நின்று கொண்டிருந்தேன். அவள் யார் யாரிடமோ போய் எல்லா சாமான்களேயும் சேகரித்துக் கொண்டு ஒரு பெரிய பாத்திரத்தோடு திரும்பி வந்தாள். எனக்கு ஒன்றுமே தெரியாது என்றுஅவளுக்கு நினைப்பு, பாவம்! நான் எதுவுமே தெரியாது போல் கண் களே மூடிக் கொண்டு உட்கார்ந்திருந்தேன். எல்லாவற்றையும் பத்திர மாக ஒரு இடத்தில் வைத்தாள். தரிசனத்திற்கு வந்தவர்களெல்லாம் போய் விட்டார்கள். ராத்திரி, எதையோ சாப்பிட்டுவிட்டு நான் படுத்துக் கொண்டேன். ஆனுல், தூங்கவில்லே. கண்களே மூடித் தூங்குவது போல் பாசாங்கு செய்தேன்.

அம்மா, மெதுவாக, சப்தம் போடாமல், மணே, அப்பளக் குழவி, அரிசி மாவு, அப்பள உருண்டைகள் எல்லாவற்றையும் எடுத்து வைத்துக் கொண்டு, அப்பளம் இடத் தொடங்கினுள்.

இருநூறு முந்நூறு அப்பளத்திற்கு உருண்டைகள் இருந்தன. அவ்வளவையும் தனியாக அவளால் இட முடியுமா? சாமர்த்தியமாக மெள்ளப் பேச்சைத் தொடங்கினுள்: 'இதோ பாருப்பா, எனக்குக் கொஞ்சம் ஒத்தாசை பண்ணேன்' என்ருள்.

அவள் இப்படிக் கேட்க வேண்டும் என்றுதான் நான் காத்துக் கொண்டிருந்தேன். அந்த விஷயத்தில் நான் விட்டுக் கொடுத்தால், பிறகு இன்னென்றை ஆரம்பித்து விடுவாள். அந்த வழக்கத்தை உடனே நிறுத்தி விட வேண்டும் என்று நினேத்தேன்.

'ஏம்மா, நீதான் எல்லாத்தையும் விட்டுட்டு இங்கே வந்துட்டியே, இன்னும் ஏன் இந்த அஞ்ஞானமெல்லாம்? வாய்க்கு ருசியா சாப்பிட வேணுமா? இங்கே என்ன கிடைக்கிறதோ அதைச் சாப்பிட்டால் போதாதா? உனக்கு ஒரு ஒத்தாசையும் செய்ய மாட்டேன். நீ பண்ணினு நான் ஒண்ணு கூட தின்னமாட்டேன். நீயே பண்ணி நீயே தின்னுக்கோ' என்றேன்.

அவள் கொஞ்ச நேரம் பேசாமல் இருந்தாள். மறுபடியும், 'அப்பனே, கொஞ்சம் ஒத்தாசை பண்ணுப்பா' என்று கெஞ்சினுள். நான் பிடிவாதமாக மறுத்து விட்டேன். அவளோ விடவில்லே. என்னேக் கூப்பிட்டுக் கொண்டே யிருந்தாள்.

பார்த்தேன். அவளுடன் வாதம் செய்து பயனில்லே என்று புரிந்தது. 'சரி. நீ அந்த அப்பளத்தை இடு. நான் வேறே ஒரு அப்பளம் இடுகிறேன், என்று சொல்லிவிட்டு பகவான், புதுமையானதோர் 'அப்பளப் பாட்டை'ப் புனேந்தார்.

அன்னே அப்பளங்களே இட்டு முடிப்பதற்குள் மகன் அப்பளப் பாட்டைப் பாடி முடித்து விட்டார். ''நீ அந்த அப்பளத்தைச் சாப்பிடு. நான் இந்த அப்பளத்தைச் சாப்பிடுகிறேன்'' என்ருர் பகவான் சிரித்துக் கொண்டே.

பகவானின் ஒவ்வொரு பாட்டும் எதையோ ஒன்றைக் காரணமாக வைத்து இயற்றப்பட்டதுதான். 'அருணுசல அட்சரமண மாலே', 'அருணுசல அஷ்டகம்', 'அருணுசல பஞ்சரத்னம்', 'அருணுசல நவமணி மாலே', 'உபதேசவுந்தியார்', 'ஆன்ம வித்தை', 'உள்ளது நாற்பது', 'உள்ளது நாற்பது—அனுபந்தம்' என்று எத்தனேயோ பாடல்களே மகரிஷி இயற்றியுள்ளார். வேதாந்தங்களின் சாரமான, ஆன்ம வித்தையைப் பற்றியும் ஆன்ம விசாரத்தைப்பற்றியும் தத்துவ விளக்கம் தரும் அப் பாடல்களேக் கங்கைப் பிரவாகத்திற்கு ஒப்பிட்டால், அதில் ஒரு கரண்டி நீரை எடுத்துப் பாமர மக்களுக்கு அளிப்பது போல் இந்த அப்பளப் பாட்டை இயற்றித் தந்திருக்கிருர் பகவான்.

அன்னேக்கு ஞான உபதேசம் செய்வதைச் சாக்காக வைத்துக் கொண்டு, உலக விவகாரங்களில் ஈடுபட்டிருக்கும் மக்கள், தங்கள் பணி களேச் செய்து கொண்டே, 'நான் யார்' என்ற ஆன்ம விசாரம் செய்து, ஞானம் பெற்று முக்தியடையும் முறையைச் சுட்டிக் காட்டி யிருக்கிருர்.

**பல்லவி**

அப்பள மிட்டுப் பாரு—அத்தைச்
சாப்பிட்டுன் ருசையைத் தீரு

**அனுபல்லவி**

இப்புவி தன்னி லேங்கித் திரியாமற்
சற்போ தசுக சற்குரு வானவர்
செப்பாது சொன்ன தத்துவமாகிற
வொப்புயர் வில்லா வோர் மொழியின்படி—(அப்)

**சரணங்கள்**

தானல்லா வைங்கோச க்ஷேத்ர மிதில்வளர்
தானென்று மானமாந் தான்ய வுளுந்தை
நானுரென் ஞான விசாரத்திரிகையி
னுனல்ல வென்றே யுடைத்துப் பொடித்து—(அப்)

கார்த்திகை தீபத் திருநாள் அன்று



சத்சங்க மாகும் பிரண்டை ரசத்தோடு
சமதம மாகின்ற ஜீரக மிளகுட
னுபரதி யாகுமவ் வுப்போ டுள்ள நல்
வாசனை யாம்பெருங் காயமுஞ்சேர்த்து—(அப்)
கன்னெஞ்சி னுறு னென்று கலங்காம
லுண்முக வுலக்கையா லோயாதிடித்து
சாந்தாமாங் குழவியாற் சமமான பலகையிற்
சந்ததஞ் சலிப்பற சந்தோஷமாகவே—(அப்)
மோனமுத் ரையாகு முடிவில்லாப் பாத்ரத்தில்
ஞானுக்னி யாற்பாயு நற்பிரம்ம நெய்யதி
னுனது வாகவே நாளும் பொரித்துத்
தானே தானுக புஜிக்கத் தன்மய—(அப்)

ஆன்ம விசாரணையை அப்பளமிடுவதற்கு ஒப்பிட்டு, அதனுல் ஏற்படும் ஆன்மானுபவமே அதைச் சாப்பிடுவதாகும் என்றும், அந்த அனுபவத்திற்குப் பிறகு மேற்கொண்டு ஆசை ஏற்படாத பரிபூரண ஆனந்தம் கிட்டுகிறது என்றும் பகவான் இப்பாட்டில் கூறுகிருர்.

உலகத்தில் துயரப்பட்டு அலையாமல் ஞான குருவான தட்சிணு மூர்த்தி மௌனத்தாலேயே கூறும் 'அதுவே நான்' என்ற தத்துவத்தின் படி ஆன்ம விசாரம் செய்வோம்.

ஐந்து கோசங்களால் ஆன இந்த உடலில் உற்பத்தியாகும் 'நான்' என்னும் அபிமானமான அகந்தைதான் உளுந்து. 'நான் யார்?' என்ற விசாரணைதான் ஏந்திரம். அதில் போட்டு 'உடல் நானல்ல' என்று உடைத்துப் பொடி செய்ய வேண்டும்.

இந்த மாவில், நல்ல சேர்க்கை என்ற பிரண்டைச் சாற்றை யூற்றிக் கலந்து, மனவடக்கம், புலனடக்கம் என்ற ஜீரக மிளகுத் தூளையும், உலக விவகாரங்களில் நாட்டமில்லாத உப்பையும், நல்வாசனை என்ற பெருங் காயத்தையும் சேர்க்க வேண்டும்.

அண்ணுமலையார் ஆலயத்தில் ஆத்திகப் பெருமக்கள் கூட்டம்



பின்னர், கல்நெஞ்சு என்ற உரலில் போட்டு, சற்றும் கலக்கமின்றி, 'நான் யார்?' என்ற உள் விசாரம் என்னும் உலக்கையால் ஓயாமல் இடித்து, சமத்துவம் என்ற பலகையில் சாந்தம் என்னும் குழவியினுல் அப்பளம் இட வேண்டும்.

மோன முத்திரையாகிய எல்லையற்ற பாத்திரத்தில், ஞானுக்கினியால் கொதிக்கும் நற்பிரம்மம் என்ற நெய்யில் 'அதுவே நான்' என்ற அப்பளத்தைப் பொரித்துத் தின்று, தன்மயமாகி ஆனந்தத்தில் திளைத்து அகமகிழ வேண்டும்.

**உ**டல் தந்த அன்னைக்கு ஞானத் துறவு தந்தார் தெய்வ மகனுன ரமணர். ஆனுல், உலக நியதிப்படி, சாத்திர முறைப்படி அவர் துறவறம் பூண்டவரல்ல.

'மதுரையிலிருந்த மகனை 'ஓடி வா' என்று தம்மிடம் அழைத்துக் கொண்ட அருணுசலத் தந்தையே அவருக்குக் குருவாக இருந்து, ஞானத் துறவு தந்தார். திருவருணையில் காலடி எடுத்து வைத்த அன்றே, வேங்கடராமன், உடை உடைமைகளோடு உடலையும் மனத்தையும் சிந்தனையையும் தமக்குச் சொந்தமில்லாதவை என்று உதறியெறிந்து, உண்மை நிலையில் வாழும் ஞானத் தபோதனராய்த் திகழ்ந்தார்.

எல்லா ஆச்ரமங்களையும் கடந்து ஒப்புயர்வற்ற நிலையில் வாழ்ந்து கொண்டிருந்த அவரைக் காவியுடுத்தும் ஒரு சந்நியாசியாக்கி விட வேண்டும் என்று, முறைப்படி சந்நியாசம் ஏற்றிருந்த ஒரு சாது நினைத்தார். அவர் மெத்தப் படித்த வித்தகர். சாத்திரங்களுக்குப் புறம்பாக வாழ விரும்பாதவர். ஒரு மடாதிபதியின் முக்கிய சீடரும் கூட.

விருபாட்ச தேவர் குகையில் பகவான் 'பிராம்மணசுவாமி'யாக இருந்த சமயம் அது. அவர் நிலையையும் புகழையும் அறிந்து அந்தச் சந்நியாசி மலையேறி வந்தார். பகவான் தனிமையில் இருக்கும் நேரமாகப் பார்த்து, சாத்திர முறைப்படி சந்நியாச ஆச்ரமம் மேற்கொள்ளும்படி அவரிடம் கேட்டுக் கொண்டார். பகவான் அதற்கு ஒப்புக் கொள்ளவில்லை. அந்தச் சந்நியாசி விடுவதாக இல்லை. சாத்திரங்களிலிருந்து எத்தனையோ மேற்கோள்களை எடுத்துக் காட்டி மூன்று மணிநேரம் வாதாடினுர். அதற்காகப் பகவான் வேறு எங்கும் வரவேண்டாம் என்றும், குகையிலேயே ஆச்ரமம் தருவதற்கான ஏற்பாடுகள் செய்யப் படும் என்றும் உறுதியளித்தார். அவர் காவி யுடை உடுத்திக் கொள்ள விரும்பாவிட்டால் கோவணத்தையாவது காவித் துணியில் அணிந்து கொண்டால் போதும் என்று மன்ருடினுர். ஆனுல், பகவானே எதற்கும் அசையவேயில்லை. மனித வேடத்தையே களைந்து, தன்னையே சுயம் பிரகாசமாய்த் தரிசித்து விட்டவருக்கு இந்த ஒப்பனை யெல்லாம் எதற்கு?

சந்நியாசி நம்பிக்கை யிழக்கத் தயாராயில்லை. தாம் கூறியவற்றைப் பற்றி நன்ருகச் சிந்தித்துப் பார்க்கும்படி பகவானிடம் கேட்டுக் கொண்டார். மறுபடியும் மாலையில் வந்து பார்ப்பதாகவும், அப்போது பகவான் தமது இறுதியான முடிவைத் தெரிவிக்கலாம் என்றும் சொல்லி விட்டுச் சென்ருர்.

அவர் சென்றதும் குகைக்கு ஒரு வயோதிகர் வந்தார். அவர் தாம் கொண்டு வந்த புத்தக மூட்டை யொன்றைப் பகவானின் அருகில் வைத்து விட்டு, ''இதைக் கொஞ்சம் பார்த்துக் கொள்ளுங்கள். நான் சற்று வெளியே போய் விட்டு வந்து, இதை எடுத்துக் கொண்டு போகிறேன்'' என்று கூறினர். பகவானும் தலையசைக் கவே அந்த வயோதிகர் மூட்டையை அங்கேயே வைத்து விட்டு வெளியே சென்ருர்.



ஸ்ரீ ஈச்வர சுவாமிகள்

அவர் சென்ற பிறகு, அந்த மூட் டையில் என்னென்ன புத்தகங்கள் இருக் கின்றன என்று பார்க்கும் ஆவலில் மேலே இருந்த புத்தகத்தைக் கையில் எடுத்தார் பகவான். அது வட மொழியி லிருந்த அருணுசல புராணம். புத்தகத் தைப் பிரித்துப் பார்த்தார். முதலில் கண்ணில் பட்ட சுலோகத்தைப் படித்தார். அதில் பரமேச்வரன் கூறுகிருர்:

> அருணுசலத்தைச் சுற்றி முப்பது மைல்களுக்குள் வாழ்பவர் களுக்கு நானே குருவாக இருக்கிறேன். அவர்களுக்குப் பந்தங்களி லிருந்து விடுதலே பெற ஞானமுக்தி அளிக்கிறேன்.

இந்த சுலோகத்தை ஒரு துண்டுக் காகிதத்தில் எழுதி வைத்துக் கொண்டார் பகவான். பின்னர், அந்தப் புத்தகத்தை மூட்டையில் வைத்து, முன் போலவே கட்டி விட்டுக் கண்களை மூடிக் கொண்டார். மறுபடியும் கண்களைத் திறந்து பார்த்தபோது, அந்த மூட்டையை அங்கு காணவில்லே. அந்தப் பெரியவரையும் அதற்குப் பிறகு பகவான் பார்க்கவே இல்லே.

சொன்னபடி மாலேயில் சந்நியாசி வந்தார். ''என்ன முடிவு செய்தீர் கள்?'' என்று பகவானைப் பார்த்துக் கேட்டார். பகவான் பதில் ஒன்றும் பேசாமல் அந்தத் துண்டுக் காகிதத்தை எடுத்து சந்நியாசியிடம் தந்தார். அதைப் படித்துப் பார்த்த சந்நியாசி மறு பேச்சுப் பேசவில்லே. பேசுவ தற்கு என்ன இருக்கிறது? வந்த வழியே சென்று விட்டார்.

அருணுசல ரமணனுக, அருணுசல மகிமையை உலகிற்கு உணர்த்திக் கொண்டிருந்த பகவான், உடல் பந்தத்திலிருந்து இறுதியாக விடுதலே பெற வேண்டிய நாள் நெருங்கி விட்டது. அழிய வேண்டிய உடல், அழிக்க முடியாத நோயை வரவழைத்துக் கொண்டது.

இயற்கைக்கு உட்பட்ட அந்த அழிவை, ஆன்மாவான பகவான் ஒருவிதச் சலனமுமின்றிப் பார்த்துக் கொண்டிருந்தார்.

ஆனல், பக்தர்களும் வைத்தியர்களும் இயற்கையை எதிர்த்துப் போராட நினைத்தார்கள். 'அதை சும்மா விட்டுவிடுங்கள், நடப்பது நடக்கட்டும்!' என்று மன்ருடிப் பார்த்தார் பகவான். அது அவருடைய நிலை. ''பகவானின் உடல் அழிவைப் பார்த்துக் கொண்டிருக்க முடியுமா? மனித முயற்சி யெல்லாம் செய்து அவரைக் காப்பாற்றுவோம்'' என்ருர்கள் பக்தர்கள். அது அவர்களுடைய நிலை.

பகவானின் இடக்கை முழங்கையில் நெல்லிக்கனி அளவில் சிறு கட்டியாகத் தோன்றிய 'சர்கோமா' என்ற ஒருவகைப் புற்றுநோய், ஓராண்டு காலம் பகவானின் உடலை வருத்தியது. மறைவது போல் மறைவதும், பின்பு முன்பை விட கொடூரமான வடிவம் எடுப்பதுமாக அந்நோய் மருத்துவர்களுடன் கண்ணுமூச்சி விளையாடி, அண்ணலின் ரத்தத்தை உறிஞ்சி, இரக்கமற்ற அரக்கனைப்போல் அவரது திருமேனியை அணு அணுவாக அரித்துக் கொண்டிருந்தது.

பகவான் பார்த்துக் கொண்டிருந்தார்.

மேல் நாட்டு அலோபதி, ஹோமியோபதி, மூலிகை வைத்தியம், மலையாள வைத்தியம், வங்காள வைத்தியம் என்று எல்லா முறைகளையும் எதிர்த்து நின்று போராடினுன் அந்தக் கொடிய அரக்கன்.

அந்தப் பயங்கரப் போரைச் சாந்தமாகப் பார்த்துக் கொண்டிருந்தார் பகவான்.

பக்தர்கள் நம்பிக்கை இழக்கவில்லை. பூஜைகள், ஹோமங்கள், அபிஷேகங்கள், ஆராதனைகள், பாராயணங்கள், சூரிய நமஸ்காரங்கள் போன்றவற்றை ஓயாமல் நடத்தினுர்கள்.

'எல்லாம் நல்ல காரியங்கள்தானே, நடக்கட்டும்' என்று அவற்றையும் பார்த்துக் கொண்டிருந்தார் பகவான்.

பகவானைப் பார்க்க வரும் கூட்டம் நாளும் பெருகிக் கொண்டிருந்தது. 'இனி பொன்னுடலைப் பார்க்க முடியுமோ முடியாதோ' என்ற கவலையுடன் வந்தவர்களுக்கெல்லாம் தரிசனம் கொடுத்துக் கொண்டிருந்தார் அந்தக் கருணுமூர்த்தி. 'உடற் தளர்ச்சியோ, உள்ளத்தின் அயர்ச்சியோ, உயிரை வாட்டும் வலியோ, என்னவானுலும் தரிசனம் நின்று போய்விடக் கூடாது; வந்தவர்கள் ஏமாறக் கூடாது; அவர்கள் பேராவலோடு வந்திருக்கிருர்கள். அவர்களைத் தடுக்க நான் யார்? நீங்கள் யார்?' என்று கூறி கட்டுப்பாடுகளை யெல்லாம் தகர்த்தெறிந்து கடைசிவரை தரிசனம் தந்து கொண்டிருந்தார் பகவான். 'இந்த உடல் என்னுடன் ஒத்துழைக்கும் வரையில் என் அன்ருட அலுவல்களை நான் விடமாட்டேன்' என்று பிடிவாதமாகவே இருந்தார். கைகள் நடுங்க, கால்கள் தளர, தலையாட, ஆச்ரமத்தில் அங்குமிங்கும் நடந்து கொண்டிருந்தார். 'கீழே விழுந்து விடுவாரோ?' என்று பயந்தவர்கள், பகவானை அணைத்த மாதிரி அருகிலேயே சென்ருர்கள்.

அரக்கனின் ஆதிக்கம் வலுத்தது. உடலின் சக்தி குறைந்து கொண்டு வந்தது. இரண்டடி எடுத்து வைப்பதுகூட பகவானுக்குப்

பெரும்பாடாகி விட்டது. நான்கு பேர் பிடித்துக் கொள்ளாமல் நகரவே முடியாத நிலை ஏற்பட்டு விட்டது.

பகவான் நினைத்துக் கொண்டார்:

'சின்ன வயதிலிருந்து இந்த உடலை என்ன பாடு படுத்தினேன்? எத்தனை வருத்தினேன்? எத்தனை பட்டினி போட்டேன்? அப்படி யிருந்தும் இத்தனை வருஷங்கள் இந்தக் கால்கள் எவ்வளவு உழைத்திருக்கின்றன. மலையை எத்தனை தரம் சுற்றி வந்திருப்பேன். இப்போது இதற்கு வயதாகி விட்டது. போதாக் குறைக்குப் பொல்லாத நோய் வேறே வாட்டுகிறது. பாவம், இது இப்போது தள்ளாடுகிறது' என்று கடும் நோயில் வாடிய பகவான், தம் உடலைக் கண்டு பரிதாபப்பட்டார்.

ஆனால், வருடக் கணக்கில் பகவானுடன் மலையிலும் காட்டிலும் நடந்தவர்கள் அவரது தற்போதைய நிலையைக் கண்டு பரிதாபப் பட்டார்கள். அவர் படும் சிரமத்தைக் கண்டு கண் கலங்கினார்கள்.

அவர்களுக்கு ஆறுதல் அளித்தார் பகவான்:

> சரீரமே சுமைதான். ஆனால், வர வர இது எனக்கு ரொம்ப பாரமாகிக் கொண்டிருக்கு. நாலு பேர் சுமக்க வேண்டிய சுமையை நான் ஒருவனே எத்தனை நாள்தான் தூக்கிக் கொண்டு போக முடியும்?

பக்தர்களின் கண்களிலிருந்து தமது உடல் சீக்கிரமே மறையப் போவதை எத்தனையோ முறை குறிப்பால் உணர்த்தி விட்டார் பகவான். வரப் போகும் அதிர்ச்சியைத் தாங்கிக் கொள்வதற்கு அவர்களை மெள்ள மெள்ளப் பழக்கிக் கொண்டிருந்தார். அந்தச் சின்னஞ்சிறு குழந்தைகளின் துயரத்தைக் குறைக்கப் பெரும்பாடு பட்டார். எத்தனை கருணை! எத்தனை பரிவு! எத்தனை பெரிய பொறுப்பு! எல்லாம் சரீரம் எடுத்து வந்ததன் விளைவுதானே!

பாசத்தை வேரோடு அறுத்து விட்ட ஞானிகள் தங்களை யறியாமல் நம்மிடையே பாச உணர்வு வளரக் காரணமாய் இருந்து விடுகிறார்கள். அவர்கள் கட்டையாய் மதிக்கும் சரீரத்தை நோய் தாக்கும் போது, அவர்கள் தாங்கிக் கொள்கிறார்கள். ஆனால், நம்மால் தாங்க முடிவதில்லை. நாம் படும் வேதனையைக் கண்டு அவர்கள் நமக்குச் சமாதானம் சொல்ல வேண்டி யிருக்கிறது.

நான்கு மாதங்களுக்கு முன்பு பூண்டி சாமியாரைத் தரிசிக்கச் சென்றபோது அவரது இடக் கை சுண்டு விரல் பருத்து வீங்கி யிருந்ததைக் கண்டேன். ரத்தம் கட்டிக் கொண்டு கருநீல நிறமாக மாறி யிருந்த அந்த ரணத்தைக் கண்டதும் எனக்கு உடலெல்லாம் ஊசி குத்துவது போல் வலித்தது.

அவருக்கு அது எப்படி வந்தது என்று விசாரித்த போது, யாரோ முன்பு அவரது விரலில் போட்டு விட்டுச் சென்ற இரண்டு மோதிரங்கள் சதையில் அழுந்திப் புண்ணாகி, விஷம் பரவி, புரையோடி விட்டது என்று

மணியக்காரர் சொன்னார். அந்த மோதிரங்களை வெட்டி எடுத்து விட்டால் ரணம் ஆறிவிடும் என்று டாக்டர்கள் சொன்னார்களாம். ஆனால், அப்படிச் செய்ய வேண்டாம் என்றும், அதை அப்படியே விட்டு விடும்படியும் சாமியார் சொல்லி விட்டாராம்.

அந்தக் கொடிய வலியைச் சிறிதும் பொருட்படுத்தாமல், அதற்கும் தமக்கும் சிறிதும் சம்பந்தமில்லாதது போல் சாமியார் உட்கார்ந்திருப்பதையும், எல்லோருடனும் அவர் சாதாரணமாகப் பேசியதையும் கண்டு நான் அதிசயித்தேன்.

நான் அடுத்த முறை அங்கு சென்ற போது விரல் இன்னும் மோசமாகி விட்டிருந்தது. ஆனால், சாமியார் பழையபடியேதான் இருந்தார். பழகி விட்ட பாசம், என்னால் பேசாமல் இருக்க முடியவில்லை.

''சாமீ, இப்படியே விட்டால் எப்படி? அந்த மோதிரங்களை வெட்டியெடுத்து, வைத்தியம் பண்ணிக்கிட்டா நல்லது இல்லையா?'' என்றேன்.

''அதெல்லாம் வாணாய்யா. சும்மா வுடு'' என்றார் சாமியார்.

''சாமீ, ஜனங்களெல்லாம் அந்த வீக்கத்தைப் பார்த்து ரொம்பக் கஷ்டப் படறாங்களே... அதுக்காவது நீங்க வைத்தியம் செய்துக்கக் கூடாதா?'' என்று மீண்டும் கேட்டேன்.

''அதெல்லாம் அனுபவிச்சுத்தான் ஆகணும். கர்ம வினையாச்சே... யாரு என்ன செய்ய முடியும்?''

அப்படிச் சொன்ன பிறகு என்ன செய்ய முடியும்?

''சாமீ... நீங்க மனசு வைச்சா, அதைச் சரி பண்ணிக்க முடியும். எங்களுக்காக அதைச் செய்யக் கூடாதா?''— கெஞ்சிக் கேட்டுக் கொண்டேன் நான்.

''பார்க்கலாம்... பார்க்கலாம்...... நீங்க போய் வாங்க'' என்றார் சாமியார்.

பர்வத மலையை வலம் வந்து விட்டு, சப்த கைலாசத் தலங்களையும் தரிசித்து விட்டுத் திரும்புகையில் சாமியாரைத் தரிசித்த போது மீண்டும் அதையே வற்புறுத்திக் கேட்டுக் கொண்டேன்.

''சரி...... சரி...... குணப்படுத்திக்கலாம், போய் வாங்க'' என்று எனக்குச் சமாதானம் சொல்லி அனுப்பி விட்டார் பூண்டி சாமியார்.

சில ஆண்டுகளுக்கு முன் சாமியாருக்குக் கால்களில் புற்று வைத்து புழுக்கள் நெளிந்தனவாம். அப்போதும் அவர் வைத்தியம் செய்து கொள்ள மறுத்து விட்டாராம். நாளடைவில் குணமாகி விட்டதாம்!

பகவான் போன்ற ஜீவன் முக்தர்களுக்கு உடல் நோய் ஒரு தொந்தரவு இல்லை. அது தீர வேண்டுமே என்று கவலையுடன் சுற்றி நின்று கொண்டிருக்கும் அடியார்கள்தான் பெரிய தொந்தரவாகி விடுகிறார்கள். அதற்காக ஆன்ம ஞானிகள், பக்தர்கள் மீது கோபப்படுவதில்லை. மாறாக, பெருங் கருணையால் அவர்களைக் கண்டு பரிதாபப்படுகிறார்கள்.

திருவண்ணுமலை ரமணுச்ரமத்திற்கு மேற்கே பலாக்கொத்து என்ற இடத்தில் ஓர் ஆச்ரமம் இருக்கிறது. அதில் அண்ணுமலை சுவாமிகள் என்ற சாது வாழ்ந்து வருகிருர். அவரைத் தரிசிக்கவும் அவரது உபதேச மொழிகளைக் கேட்டு மனச்சாந்தி பெறவும் மெய்யன்பர்கள் அங்கு தினமும் வந்து கூடுகிருர்கள்.

தென்னுற்காடு மாவட்டத்தில், விருத்தாசலத்திலிருந்து திருச்சி செல்லும் பாதையில் உள்ள தொண்டங்குறிச்சியில் அறுபது ஆண்டுகட்கு முன் பிறந்த செல்லப்பெருமாள், இருபதாவது வயதில் ரமணுச்ரமத் திற்கு வந்தார். பகவானின் அடிமையானுர். அண்ணுமலை சுவாமிகளாக மாறினுர்.

அவருடைய தந்தை ஒரு ஜோசியர். மகன் பிறந்த உடனேயே ஜாதகத்தைக் கணித்துப் பார்த்தார். அவன் பிற்காலத்தில் ஒரு சாது வாகப் போகிருன் என்பது அவருக்குத் தெரிந்து விட்டது. எனவே, மகனை வளர்ப்பதில் தந்தை அக்கறை காட்டவில்லை. அரிச்சுவடி வகுப்புக்குமேல் அவர் செல்லப்பெருமாளைப் படிக்க வைக்கவில்லையே!

பிற்காலத்தில் அமையப் போகும் வாழ்க்கைக்கு அடையாளமாக இளவயது முதற்கொண்டே செல்லப்பெருமாள் உலக வாழ்க்கையில் நாட்டம் கொள்ளாமல் எந்நேரமும் கடவுட் சிந்தனையிலேயே ஈடுபட் டிருந்தான். நாம சங்கீர்த்தனம் செய்வதில் ஆனந்தம் கொண்டான். பஜனை மடத்திலேயே நேரத்தைக் கடத்தினுன்.

ஒருநாள் யாரோ ஒருவர் அவனிடம் ரமண பகவானின் புகைப்படம் ஒன்றைக் காட்டினுர். மகரிஷியின் கண்கள் காந்தம் போல் அவனை வசீகரித்தன. மகான் இருக்கும் இடம் அறிந்து, அருணுசலத்திற்கு வந்து சேர்ந்தான்.

பகவானிடம் மனத்தைப் பறி கொடுத்து, அவரது தொண்டிற்கே தன்னை அர்ப்பணித்துக் கொண்டார் அந்த இருபது வயது இளைஞர். பத்து நாட்கள் கழிந்தன. பகவான் இளைஞரைப் பார்த்து, ''நீ எப்போது வரப் போகிருய் என்று காத்துக் கொண்டிருந்தேன், ஐயா...'' என்று திருவாய் மலர்ந்தருளினுர். 'என்ன! பகவான் என்னை எதிர்பார்த்துக் கொண்டிருந்தாரா? எனக்கும் பகவானுக்கும் பூர்வ ஜன்மத் தொடர்பு இருக்கிறதா? என்ன பாக்யம் செய்தேன்' என்று புளகிதம் அடைந்தார் இளைஞர் செல்லப்பெருமாள்.

தாய்ப் பறவை குஞ்சுப் பறவையைப் பழக்கி வளர்ப்பது போல் குறிப்பால் உணர்த்தியே செல்லப்பெருமாளை ஞான அமுது ஊட்டி வளர்த்தார் பகவான். கல்வியறிவில்லாதவனுக்கு, தமிழ் எழுதவும் படிக்கவும் பயிற்றுவித்தார். பாடல்களைக் கற்றுத் தந்தார். குளிக்கும் போதும், உணவு உட்கொள்ளும்போதும் அரிய கருத்துக்களைப் புரிய வைக்க எளிய பொன்மொழிகளாகக் கூறியருளினுர். தஞ்சம் என்று வந்தவர்களுக்கு அவரவர் நிலைக்கேற்ப உபதேசம் செய்தருளி, மாயத் திரையை மெல்ல மெல்ல விலக்கி, கை தூக்கி விட்டுக் கரையேற்றும் கருணுமூர்த்தியாயிற்றே அருணை வள்ளல்.

எல்லோரும் சேர்ந்து பாடுகிறார்கள்:

அருணாசலசிவ, அருணாசலசிவ
அருணாசலசிவ, அருணாசலசிவ
அருணாசலசிவ, அருணாசலசிவ
அருணாசலசிவ, அருணாசலா.

ஊரில் உணவுப் பிச்சை யெடுப்பதற்காக முன்பு பகவான் புனைந்த பாட்டைப் பாடி, உயிர்ப் பிச்சை கேட்கிறார்கள் பக்தர்கள்.

மாலை 6-40. மாவட்ட மருத்துவ அதிகாரி டாக்டர் கரம்சந்தானி அறையினுள் செல்கிறார். பகவானின் உடலைப் பரிசோதித்துப் பார்க்கிறார். நாடித் துடிப்பு லேசாகிக் கொண்டிருக்கிறது. உதடுகள் உலர்ந்து விட்டிருக்கின்றன. இரைச்சலுடன் மூச்சு வந்து கொண்டிருக்கிறது. பகவான் கண்களை மூடிக் கொண்டிருக்கிறார்.

''பகவானே... கொஞ்சம் பழ ரசம் கொடுக்கட்டுமா!''— குனிந்து மெள்ளக் கேட்கிறார் டாக்டர். இரு முறை கேட்கிறார்.

இருமுறையும் 'வேண்டாம் வேண்டாம்' என்று தலையை அசைக்கிறார் பகவான்.

தமது கையால் பழ ரசம் அருந்த வேண்டும் என்று பிரார்த்தித்துக் கொண்டு பகவானின் அருகிலேயே நிற்கிறார் கரம்சந்தானி. கடைசி மூச்சு நிற்கப் போகும் அந் நேரத்திலும் பக்தரின் உள்ளத்தைப் புண் படுத்த விரும்பவில்லை. கருணைத்தெய்வம்.

'வேண்டும்' என்பது போல் தலையை அசைத்து, வாயைத் திறந்தார் பகவான். மூன்று ஸ்பூன் பழ ரசம் தந்தார் டாக்டர். மும் முறையும் வாயைத் திறந்து பழ ரசத்தை விழுங்கினார் பகவான்.

மணி 8-35. நாடித் துடிப்பு மட்டும் இருந்து கொண்டிருந்தது. சுவாசம் கண்டு விட்டது. உடல் படும் வேதனையை முகத்தின் சுருக்கங்கள் வெளிப்படுத்தின.

எல்லாவற்றையும் பகவான் பார்த்துக் கொண்டிருந்தார்.

பகவானின் முகத்தையே பார்த்துக் கொண்டு அசைவற்று நின்றிருந்த டாக்டர் கரம்சந்தானி, மனத்தில் நினைத்துக் கொள்கிறார்:

'ஐயோ, பகவானுக்கும் இந்த நிலையா? இல்லை, நம் கர்மவினைகளையெல்லாம் இவர் அனுபவிக்கிறாரா? வேதனையை இவரால் குறைத்துக் கொள்ள முடியாதா?'

அது பகவானுக்குத் தெரிகிறது. தம் நிலை கண்டு மற்றவர் வேதனைப்படுவதா? பகவானுக்குப் பொறுக்குமா?

8-46. நாடித் துடிப்பு நின்றுவிட்டது. நீண்ட கடினமான மூச்சு, மெல்லிய இழையாக லேசாக இயங்கத் தொடங்கியது. ஒன்றையொன்று ...துவாகத் தொடர்ந்து அது மெள்ள மெள்ள அடங்கியது. கடைசி ...் மௌனமாக விடை பெற்றது.

...ான் பார்த்துக் கொண்டிருந்தார். மணி 8-47.

வானில் பிரகாசமான ஜோதி ஒன்று தோன்றியது. புண்ணியம் செய்தவர்களெல்லாம் அன்று அதைத் தரிசித்தார்கள். நம்பிக்கையற்ற வர்களின் உணர்வில் அது மின்சாரமாகப் பாய்ந்து அவர்களை உலுக்கியது. தெற்கேயிருந்து புறப்பட்ட அச் சுடரொளி வடக்கே அருணாசலத்தின் உச்சியில் போய்த் தங்கியது.

ரமண ஜோதியும், அருணாசல ஜோதியும் ஒன்றாகியது. அப்பேரொளி பாரெங்கும் பிரகாசித்தது.

படைப்புக் கடவுளான நான்முகனுக்கும், காத்தல் கடவுளான திருமாலுக்கு மிடையே ஏற்பட்ட போட்டியைக் கண்டு, பரம் பொருள், அடிமுடி காண முடியாத சோதி வடிவாய்க் காட்சி தந்து, அவர்களது அஞ்ஞான இருளைப் போக்கியது. பின்னர், அவர்களுடைய வேண்டுகோளுக்கிணங்கி உலகின் இதயத் தலத்தில் அருணாசல மலையாக நின்று, கல்பகோடி வருடங்களாக மனித குலத்திற்கு ஞானம் அருளும் கலங்கரை விளக்கமாகத் திகழ்ந்து வருகிறது. அதன் அடையாளமாகத் தான் கார்த்திகை மாதத்தில் அருணாசலத்தின் உச்சியில் திருவிளக்கு ஏற்றப்படுகிறது. அச்சோதிப் பிழம்பு அருணாசல மகிமையை அகிலத் திற்குப் பறைசாற்றுகிறது.

அருணாசல ஒளி, சுயமாகப் பிரகாசிக்கும் ஞானச்சுடர். மாயையில் சிக்குண்டு அல்லற்படும் உயிரினங்கள் தங்களை யார் என்று தெளிந்து, தங்களுக்குள்ளேயே சத்தியப் பொருளைத் தரிசிக்கச் செய்யும் அருள் ஒளி.

மகாவிஷ்ணுவும் பிரும்மதேவனும் அடிமுடிகளைத் தேடிய புராணச் செய்தியை மறுப்பவர்களும் அதில் புதைந்துள்ள மாபெரும் உண்மையைப் புறக்கணிக்க முடியாது. வாக்கிற்கு அதிபதியான பிரும்மதேவனும், இந்திரியங்களுக்கு அதிபதியான மகா விஷ்ணுவும் தேடித் தோற்றார்கள் என்றால் என்ன பொருள்? 'வாக்குக்கும் மனத்துக்கும் எட்டாத பரம் பொருள்' என்று வேதம் விளித்த வாக்கியம் இந்நிகழ்ச்சியின் மூலம் விளக்கப்பட்டதாகவே கொள்ள வேண்டும். பிரும்மாவிற்கோ திருமாலுக்கோ அவமதிப்பு ஏற்பட்டு விட்டதாகக் கருதக்கூடாது.

மனத்தையும் புத்தியையும் உள்முகமாகத் திருப்பி அவை எங்கிருந்து தோன்றுகின்றன என்ற மூலத்தைக் கண்டுபிடிக்கும் முயற்சியே ஆன்ம விசாரமாகும். 'உடலும், மனமும், புத்தியும் நான் அல்ல; இதயத்தில் இலங்கும்பேரொளியே உண்மையான நான்' என்று தெளிந்து, ஞானமுக்தி பெறுவதே 'நான் யார்?' என்ற ஆன்ம விசாரணை. இந்த அரிய மார்க்கத்தைக் கலியுகவாசிகளுக்குக் காட்டியருளி, அருணாசல மகிமையை எளிதாகப் புரியவைத்த பெருமை ஞானகுருவான பகவான் ரமணரையே சேருகிறது.

இருபதாவது நூற்றாண்டில் அருணாசல மகிமையை உலகிற்கு எடுத்துரைக்க திருவருணையில் எழுந்தருளிய மகான்கள் மூவரா... ஸ்ரீ காமாட்சியின் அம்சமாக ஸ்ரீ காஞ்சியிலிருந்து வந்த ஸ்ரீ ... சுவாமிகளும், அன்னை மீனாட்சியின் தவப் புதல்வரின் அம்சமா... யிலிருந்து வந்த ரமண மகரிஷிகளும், அண்ணாமலையார் ...

ஈசான்ய மூலையில் உள்ள மூல மந்திர மண்டபத்தில், அருணாசல தியானத்தில் எந்நேரமும் ஆழ்ந்திருந்த ஈச்வர சுவாமிகளும் ஆவர்.

ஸ்ரீ சேஷாத்ரி சுவாமிகள், அருணாசலத்தின் தோற்றம் தம் இதயத்தில் மலரக் கண்டு, அதைச் சித்திரமாகத் தீட்டி பூஜையில் வைத்துத் தொழுதார். ஸ்ரீரமண மகரிஷிகள், இளம் பருவம் முதல் இதயத்தில் அருணாசல திருநாமம் ஒலிக்கக் கேட்டு, அத்திசை நோக்கி வந்தார். ஈச்வர சுவாமிகளோ, தம் ஊரில் அமர்ந்தபடியே எந் நேரமும் அருணாசலத்தைத் தரிசித்து, அதன் அருள் ஞான வடிவில் லயித்து, அதன் காந்த சக்தியால் ஈர்க்கப்பட்டு ஓடோடியும் வந்தார்.

ஓங்கி உலகளந்த பெருமாள் உறையும் திருக்கோயிலூரை அடுத்த இறைவாசநல்லூர் கிராமத்தில், ஸ்ரீ அருணாசல தீட்சிதருக்கும் பாலாம்பிகைக்கும் 1880-ம் ஆண்டு தவப் புதல்வராக அவதரித்து, இளவயதிலேயே தமிழ், சமஸ்கிருதம்,ஆங்கில மொழிகளில் புலமை பெற்று விளங்கினார் ஈச்வர சுவாமிகள். ஆன்ம விசாரணையும், மௌன விரதமும், தவ யோகமும் இவரிடம் இயற்கையாகக் குடி கொண்டிருந்தன. அருணாசல குரு, அவரைச் சீடராக ஏற்று 1911-ம் ஆண்டு சிவராத்திரி புண்ணிய தினத்தில் தம் சந்நிதிக்கு வரும்படி கட்டளையிட்டார்.

சித்தர்களும் தவயோகிகளும் வாழும் அருணாசலக் குகைகளில் சில வருடங்கள் சமாதி நிட்டையில் அமர்ந்திருந்த ஈச்வர சுவாமிகள், ரமண மகரிஷிகளுடன் விருபாட்சி குகையிலும் கந்தாச்ரமத்திலும் வசித்திருக்கிறார். இருவரும் சேர்ந்தே பலமுறை கிரிவலம் வந்திருக்கின்றனர்.

இருவரும் தத்துவ விசாரணையும் தமிழ் ஆராய்ச்சியும் செய்திருக்கின்றனர். தமிழ்ப் பாக்கள் புனைந்து திளைத்திருக்கின்றனர்.

ஸ்ரீ சேஷாத்ரி சுவாமிகள், ஈச்வர சுவாமிகளைப் பற்றிக் குறிப்பிடும் போதெல்லாம் ''அவாள் பெரியவாள், அவதூதாள், மலை மேலேருந்து வந்திருக்காள்'' என்று பெருமையாகவே குறிப்பிடுவாராம்.

ஈச்வர சுவாமிகள் வேத சாத்திரங்களிலும், ஜோதிடத்திலும், விண் ஆராய்ச்சி சாத்திரத்திலும், மூலிகை, ஆயுர்வேத, சித்த வைத்தியங்களிலும் வல்லமை பெற்றுத் திகழ்ந்தார். ரசவாத வித்தைகளை அறிந்திருந்தும் அவற்றில் அவர் ஈடுபட்டதில்லை. அருணாசலத்தின் அருளால் பல சித்திகள் கைவரப்பெற்றும், ஞானமுக்தியிலேயே நாட்டம் கொண்டிருந்த தவச் சீலராகத் திகழ்ந்தார். கம்பீரமான தோற்றம். மெய்த்தவ யோகத்தால் ஒளிர்ந்த உடல் வனப்பு. எளிமையான சுபாவம். இனிமையான பேச்சு. ஞானரசம் ததும்பும் உரையாடல். உள்ளொளியைப் பிரதிபலிக்கும் மோகனப் புன்னகை.

ஈச்வர சுவாமிகள் இயற்றியுள்ள சந்தப் பாக்களிலும் விருத்தப் ...லும் தமிழ்ச் சுவையும் பக்திச் சுவையும் இணைந்து இழையோடு ... துதிப் பாடல்களைத் தவிர, அவ்வப்போது தனிப் பாடல்களும் ...ளார் சுவாமிகள்.

ஸ்ரீ வள்ளிமலை சுவாமிகள், ஈச்வர சுவாமிகளிடம் பெரும் மதிப்பு வைத்திருந்தார். 1951-ம் ஆண்டில் ஸ்ரீ வள்ளிமலை சுவாமிகளின் சமாதியின் மீது ஸ்ரீ தட்சிணாமூர்த்தியைப் பிரதிஷ்டை செய்தபோது, ஈச்வர சுவாமிகள் மௌன முத்திரையின் தத்துவத்தை விளக்கி இயற்றிய விருத்தப் பாடலில் தெய்வத் தமிழ் மணம் கமழ்கிறது; ஞான போதம் மிளிர்கின்றது:

தன்னிலே யுதித்து தன்னிலே யொடுங்கும்
சருவமும் தானதன் சான்று
முன்னிய விழிப்பு கனவொடு துயிலாம்
மூன்றெனும் மூவிரல் நீங்கில்
அன்னிய சுட்டு விரலெனும் சீவன்
அங்குட்ட சிவத்தொடொன் றெனவே
சன்னிதி மௌன குறிப்பினா லுணர்த்தும்
தட்சிணா மூர்த்திதாள் வாழி.

அருணாசல பக்தர்களுக்கு ஈச்வர சுவாமிகள் செய்திருக்கும் மாபெரும் சேவை அவர் எழுதியுள்ள 'அருணாசல மகாத்மிய வசனம்' என்ற சிறு நூலாகும். அருணாசலம் சம்பந்தமான வட மொழி, தென் மொழி நூல்களை ஆராய்ந்து, அதன் மகிமையில் புதைந்துள்ள ரகசிய தத்துவங்களைத் தெள்ளு தமிழில் நயம்பட விளக்கிக் கூறி யிருக்கிறார் சுவாமிகள்.

அதில், அண்ணாமலை தீப தரிசனத்தின் உண்மைப் பொருளை ஈச்வர சுவாமிகள் விளக்கும் அழகைக் காண்போம்:

உடலே குன்று, உள்ளமே கொப்பரை, நேயமே வர்த்தி, இடையறாத் தியானமே நெய், பிராணனே கர்ப்பூரம், ஞானமே அக்னி; அஞ்ஞான இருள் நீங்க இவைகளைப் பொருத்திக் காண்பதே தீப தரிசனம் செய்வதன் முழுமையான பயனாகும்.

வாதாராயண மாமுனிவர் ஸ்காந்த மகாபுராணத்தில் வகுத்துத் தந்த அருணாசல மகாத்மியத்தை பெரும் தமிழ்ப் புலவர்களான சைவ எல்லப்ப நாவலரும், சிதம்பரம் மறைஞான தேசிகரும் முறையே அருணாசல புராணமாகவும் அருணகிரி புராணமாகவும் செய்யுள் வடிவத்தில் இயற்றித் தந்திருக்கிறார்கள்.

ஸ்ரீ ரமண பகவானின் அருளாசியாலும் தெய்வத் துணையாலும், ஸ்ரீ 'அருணாசல மகாத்மியம்' என்றொரு மொழி பெயர்ப்பு நூல் உருவாகியது. அதை ஸ்ரீ ரமணாச்ரமத்தினர் வெளியிட்டிருக்கின்றனர். வட மொ... உள்ள அருணாசல புராண வரலாறுகள் அனைத்தும் ஒருங்கி... நூலாகும் இது. ஸ்காந்த மகாபுராணம், சிவ ரகசியம். ... சிவ மகாபுராணம், ஸ்காந்தோப புராணம் போ... டுள்ள அருணாசல தல சம்பந்தமான மகி... படிக்கப் படிக்கத் தெவிட்டாத தே...

அதை உணர்த்தும் பொருட்டு அது அவ்வப்போது மானிட உருவமும் தாங்கி வரும். அதுவே அருணுசல மகிமை; நம் பாரத ஞான பூமியின் பெருமை.

இதோ, இந்தக் கணம் கூட, முற்பிறவியில் செய்த தவப் பயனுய், கற்புடை மங்கை நல்லாள் ஒருத்தியின் வயிற்றில், மெய்ப் பொருள், கருவாய் உருவெடுத்திருக்கிறது. அத் தெய்வ மகனைச் சிடனுக ஏற்ற அருணுசலம், தன் வயம் அழைத்து, தன் மயமாக்கி, தரணிக்குத் தன் மகிமையை உணர்த்தத் திருவுளம் கொண்டு விட்டது.

அதை அறிந்த வானேர், விண்ணதிர ஆனந்த ஆரவாரம் புரிகின்றனர். பொன்மேகம் வான்மழை பொழிகிறது. நிலமங்கை, பெருமிதத்தால் பூரித்துப் பொங்க, ஆழ்கடல், அலைக்கரங்களை யெழுப்பி ஆவேசத்துடன் ஆர்ப்பரிக்கிறது.

திருவண்ணுமலையில் வெடியோசை கேட்கிறது. மங்கள வாத்தியங்கள் முழங்குகின்றன. அருணுசலேச்வரர் ஆலயத்தின் வெண்கல மணிகளின் மங்கல நாதவெள்ளம் வையமெங்கும் பெருக, தெய்வ மணம் கமழ்கிறது.

அருணுசலத்தின் உச்சியில் ஞானச் சுடர் தோன்றுகிறது.

**அண்ணுமலைக்கு அரோஹரா**
**அண்ணுமலைக்கு அரோஹரா**

பூமியிலிருந்து பக்தி முழக்கம் எழுந்து, வானைத் தொட்டு, அருணுசலத்தில் மோதுகிறது. ஞானச் சிலிர்ப்பால் ஞாலமே நடுங்க, அப்பேரொலி, அருள் அலைகளாகச் சிதறி, ஈரேழு உலகங்களிலும் எதிரொலிக்கிறது......

**அருணுசல சிவ**
**அருணுசல சிவ**

வட ஆற்காடு மாவட்டம்:

# அருணாசல மகிமையில் இடம்பெறும் சில முக்கிய ஊர்கள்

சித்தூர்
தங்கால்
பொன்னை
திருத்தணி
திருவள்ளூர்
திருமுல்லைவாயில்
சோளிங்கர்
வள்ளிமலை
மகாதேவமலை
மேல்மாயில்
காட்பாடி
திருவலம்
மேல்பாடி
ராணிப்பேட்டை
சென்னை
வேலூர்
ஆற்காடு
காஞ்சிபுரம்
பாலாறு
செங்கற்பட்டு
செய்யாறு
பாலாறு
வங்காள விரிகுடா
போளூர்
பூண்டி
மாம்பாக்கம்
பர்வதமலை
கடலாடி
வந்தவாசி
மதுராந்தகம்
செங்கம்
திருவண்ணாமலை
செஞ்சி
திண்டிவனம்
விழுப்புரம்
திருக்கோவிலூர்
பாண்டிச்சேரி
கடலூர்

1 அங்குலம் = சுமார் 12 மைல்கள்



